ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# ஸுதர்சனர் பதில்



நான்காவது சதகம்

## மதங்கள் சாஸ்திரங்கள் இலக்கியங்களில் வாசகர்களின் 100 ஐயவினுக்களுக்கு ஆசிரியரின் விளக்கங்கள்


ஆசிரியர் :—

**ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,**
அட்வகேட், M.A.B.L.
(ஸுதர்சனர்)

ஆசிரியர் : 'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்'.
3-B, புத்தூர் அக்ரஹாரம் திருச்சி-620017.



ஸ்ரீ. ரா. ஸ்ரீ. கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் குடும்ப
தர்ம சொத்துக்களின் ஆதரவில் வெளியிடப்பெற்றது.





[20—3—81]

விலை ரூ. 4-50] [தபால் 75 பை.

ஸ்ரீநிவாஸம் பிரஸ், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸுதர்சனர் பதில் — நான்காவது சதகம்

V. ஸ்ரீநிவாஸன், திருச்சி-17.

*1. சக்தி உபாஸனத்தையும், சாக்த மதத்தையும் 'ஸௌந்த₃ர்யலஹரி' என்னும் ஸ்தோத்ரத்தில் ஆதிசங்கரர் பரப்பியதாக காமகோடி பீடாதி₄பதியும், அவரை நடமாடும் தெய்வமாகக்கொண்ட நூற்றுக்கணக்கான எழுத்தாளர்களும், உபந்யாஸகர்களும் எழுதியும், பேசியும் வருகிறார்கள். ஏப்ரல்'80 கலைமகளில் 'கதிரவனும் கர்ப்பூரமும்' என்னும் காமகோடிக் கட்டுரையிலும், 'நம்பிக்கைகள்' என்னும் ர. சு. நல்லபெருமாள் எழுதும் நாவலிலும் இவ்விஷயம் எழுதப்பட்டுள்ளது. இஃது உண்மையா?*

ஆதி₃சங்கரர் பெயரில் நூற்றுக்கணக்கான தே₃வதா ஸ்தோத்ரங்கள் உலவிவருகின்றன. நம்முடைய ஆராய்ச்சிக்கு எட்டியவரையில் அந்த ஸ்தோத்ரங்களில் ஒன்றுகூட ஆதி₃ ஶங்கரருடைய காலத்துக்கு (எட்டாவது நூற்றாண்டுக்கு) 400வருஷங்கள் வரையில் எந்த நூலிலும் எவராலும் எடுத்துக் கையாளப்படவில்லை. நடுநிலைநிற்கும் பல ஆராய்ச்சியாளர்களும் இதை வலியுறுத்தியிருக்கிறார்கள். இதிலிருந்து அவர் பெயரில் வழங்கும் ஸ்தோத்ரங்களில் பெரும்பாலானவை பிற்காலத்தில் அவர் பெயரில் எழுந்த மட₂ங்களில் அதி₄பதிகளாயிருந்த சங்கராசார்யர்களால் இயற்றப்பட்டவையே என்று நடுநிலையாளர்கள் எளிதில் நிர்ணயிக்கலாம். கநகதா₄ராஸ்தோத்ரத்திலிருந்து ஒரு ஶ்லோகம் ஸ்ரீ வேதா₃ந்ததே₃ஶிகரால் சது:ஶ்லோகீ பா₄ஷ்யத்தில் எடுக்கப்பட்டுள்ளது. ஆனால் ஆதி₃சங்கரருடையதாக தே₃ஶிகன் நிர்த்தே₃ஶிக்கவில்லை. நானூறு வருஷங்களுக்குள்ளிருந்த நாராயணப₄ட்டத்₃ரி தமது நாராயணீயத்தில் விஷ்ணுபாதா₃தி₃கேஶாந்த ஸ்தோத்ரத்தை ஆதி₃சங்கரருடையதாக எடுத்திருக்கிறார். ஆதி₃சங்கரருக்குப் பல நூற்றாண்டுகளுக்குப் பிறகு எழுந்தவையும், பல பொய்க்கதைகள் நிறைந்தவையுமான சங்கரவிஜய நூல்களில் விஷ்ணுகராவலம்ப₃ ஸ்தோத்ரம்போன்ற சில ஸ்துதி நூல்கள் அவரால் இயற்றப்பட்டவையாகக் கூறப்பட்டுள்ளன. ஆனால் அவற்றையும்

ப்ராசீனர்கள் எவரும் கையாண்டதில்லை. குறிப்பாக ஶிவாநந்த₃ லஹரியையும், ஸௌந்த₃ர்யலஹரியையும் 400 வருஷங்களுக்கு முன் எவருமே கையாண்டதாகத் தெரியவில்லை. 'நம்பிக்கைகள்' என்னும் நாவலில் 'பிரம்மசாஸ்திரி'என்னும் ஶாக்த பண்டி₃தரின் வாயிலாக 'சக்கரபூஜை' என்னும் ஶாக்த உபாஸனையை விளக்கிவரும்போது, திரு ர. சு நல்லபெருமாள்—

"ஆதிசங்கரர் ஸௌந்தர்யலஹரியிலே, 'சதுர்ப்பி: ஸ்ரீகண்டை:' என்று தொடங்கும் பதினோராவது ஸ்லோகத்திலே (இப்பூஜையை) விளக்கியிருக்கார். இதைப்பற்றி, திருமூலருடைய திருமந்திரத்திலேயும் நிறைய இருக்கு. இதிலே சிவசக்தி ஐக்கியம் ஜீவப்பிரம்ம ஐக்கியங்கிற தத்துவம் ரொம்ப முக்கியம். இந்தச் சக்தி வழிபாட்டிலே தாந்திரிக தத்துவம்னு ஒருபிரிவு இருக்கு. அதுப்படிக்கு உபாசனை செய்யறவாளைத் தாந்திரிகர்னு சொல்லுவா. தாந்திரிகாளுடைய வழிபாட்டிலே, சிவ சக்தி ஐக்கியம் ரொம்பவும் முக்கியமான தத்துவம். அதாவது, இயக்கம் இல்லாமலிருக்கிற சிவன், சக்தியோடு கலந்து ஐக்கியமாறபோது தான் இயக்கமே ஏற்பட்டு பிரபஞ்சம் நியதிப்படறதுன்னு தத்துவம் சொல்றது. இந்தத் தாந்திரிக தத்துவத்திலே மது, மாமிசம், மீன், முத்திரை, மைதுனங்கிற அஞ்சு விஷயம் இருக்கு. இதுக்குப் பஞ்ச தத்துவம்னு பேர். இதிலே முத்திரைங்கிறது, வேகவைச்ச தானியம்; மைதுனங்கிறது ஆண்பெண்ணோட ஐக்கியம். அவாளோட சக்கர பூஜையிலே இந்த அஞ்சையும் கட்டாயம் கடைப்பிடிக்கணும்." [ஏப்ரல் கலைமகள் 'நம்பிக்கைகள்'பக்கம் 311] என்று எழுதியிருக்கிறார்.

மூன்றாவது சதகம் 69-வது கேள்வி பதிலில் இது பற்றி நம்மால் விரிவாக விமர்சிக்கப்பட்டுள்ளது. ப்₃ரஹ்மசர்யத்தை அநுஷ்டி₂த்தவர்களில் தலைசிறந்தவராய், 'ப்₃ரஹ்மசர்யமே மோக்ஷஸாத₄னம்' என்னும் வேத₃ாந்தக் கொள்கையை உறுதியாய்க் கடைப்பிடித்தவராய், ஸந்யாஸியான ஆதி₃சங்கரர் இப்படி புருஷன் மனைவி அல்லாதவர்கள் காமக்கேளிக்கைக் கூத்தடிக்கும் சாக்த உபாஸனையை ஆத₃ரிக்க இடமே இல்லையாகையால், அந்த உபாஸனையைச் சொல்லும் ஸௌந்த₃ர்ய லஹரி ஆயிரம் காமகோடிகள் கட்டுரை எழுதினாலும், பிரசாரம் செய்தாலும் ஆதி₃சங்கரருடையதாகிவிடாது. சங்கரவிஜய நூல்கள் எழுதப்பட்ட காலத்தில் ஆதி₃சங்கரர் கூடுவிட்டுக் கூடுபாய்ந்து ராஜபத்னியோடு காமபோ₄க₃த்தை அநுப₄வித்ததாக ஒரு பொய்க்கதையை எழுதிவைத்தார்கள்.

இப்படி ஆதி₃சங்கரரை விடபுருஷனுக்கிய கும்பலே ஸௌந்த₃ர்யலஹரியை அவர் பெயரில் ஏறிட்டிருக்கிறது. இதன் விரிவு வேண்டுவோர் நமது 'சங்கரரும் வைணவமும்' என்னும் நூலில் காணலாம்.

S. வேங்கடம், சமயபுரம்.

*2. கோயில் கோபுரம் முதலானவற்றில் காமக்கேளிக்கைகளை வெளிப்படுத்தும் சிற்பங்கள் காணப்படுவதற்கு ர. சு. நல்லபெருமாள் 'நம்பிக்கைகள்' என்னும் நாவலில் ஒரு காரணம் கூறியுள்ளார். இக்காரணம் சரியானதாகுமா ?*

''வாழ்க்கையிலே தீமைகள்னு எதையெல்லாம் ஒதுக்கறோமோ அதெல்லாம் நம்மைவந்து பற்றிக்கொள்றது. ஆகையினுலே, அந்தத் தீமைகளை நாமே வலியப்போய்ச் சந்திச்சு, அவற்றையும் தெய்விகம்னு ஒத்துண்டுட்டா; அப்புறம், அதுகளாலே நம்மைத் துன்பப்படுத்த முடியாதுங்கற மிகப்பெரிய தத்துவம் அது. போகத்தைக் கூட அந்த மாதிரி தெய்விகம்னு நினைச்சு நாம் ஆராதனை பண்றபோது, ஆனந்த நிலையிலே நம்ம உடலிலே அப்போ ஏற்படற சக்திகளும், உணர்ச்சிகளும் பிரமத்தோடு ஐக்கியமாயிடறதா தத்துவம் சொல்றது. போகத்தையும் உபாசனையா நினைச்சு, தவமாக மாற்றிப் பிரம்மத்தை உணர்ந்திருக்கா. போகத்தினுடைய ஆநந்தமயமான உச்சகட்டந்தான், இந்தப் பிரபஞ்ச இயக்கத்துக்கே மூலாதாரம். சிவசக்தியோட ஐக்கியத்தின் பிரதிபலிப்பு. தாந்திரிகாளோட சக்ர பூஜையிலே, மைதுனங்கற இந்தக் கடைசிக் கட்டந்தான் ரொம்ப முக்கியம். அப்போ, ஆணும்பெண்ணும், சிவசக்தியாகத் தங்களைப் பாவிச்சுண்டு, போகத்தைப் புனிதமா நினைச்சு, பக்தியோடு இயங்கறபோது, ரெண்டு பேரும் கலந்து, 'தான்' என்கிற உணர்வைத்தாண்டி, ஆனந்தமயமான பிரம்ம உணர்வுக்குள் ஐக்கியமாகிற உயர்ந்த நிலையை எட்டறதாக தாந்திரிக தத்துவம் போதிக்கிறது. ராதையும் கிருஷ்ணனும் அணைக்கிற மாதிரி பொம்மையை வீடுகள்ளே அலங்காரமா வைக்கிறேளே, அதோடே தத்துவம் இதுதான். அந்த உயர்ந்த உணர்வோடு இந்தச் சிலைகளைப் பார்த்தா, இதுகள்ளாம் ஆபாசமாத்தோணுது. திருமந்திரத்திலே பரியங்கயோகம்னு மூன்றும் தந்திரத்திலே திருமூலர் இதுபத்திப் பாடியிருக்கார்.'' [ஏப்ரல் கலைமகள் 'நம்பிக்கைகள்' பக்கம் 311]

என்று ர. சு. நல்லபெருமாளால் தம் நாவலில் பிரம்மசாஸ்த்ரி என்னும் ஶாக்த ஆக₃ம பண்டி₃தரின் வாயிலாகக் கூறப்பட்

டுள்ளது. இது சைவ சாக்த ஆகமங்களுக்கும் பொருந்தாது. மற்ற ஶாஸ்த்ரங்களுக்கும், மக்கள் ஒழுக்கத்திற்கும் மிகவும் முரணானது. சைவ சாக்த ஆகமங்கள் ஜீவப்ரஹ்ம ஐக்யத்தை ஒப்புக்கொள்ளவில்லை. ஆகையால் "கணவன் மனைவி அல்லாதவர்கள் காமக்கலவியில் ஈடுபடுவது ஜீவப்ரஹ்ம ஐக்யத்தை உணர்த்துகிறது" என்று எழுதுவதும், வ்யபிசாரத்தில் ஈடுபடும் இவர்கள் சிவசக்திகளாகத் தங்களை பாவித்துக்கொண்டு பக்தியோடு இயங்குவதாகக் கதைப்பதும் ஸகல ஸாத்விக ஶாஸ்த்ரங்களுக்கும், உலகெங்குமுள்ள மதங்களிலுள்ள மேன் மக்கள் ஒப்புக் கொண்டுள்ள ஒழுக்க நடைமுறைக்கும் மிகவும் முரணானது. கண்ணன் கோபிகளோடு ஈடுபட்ட ஶ்ருங்கார சேஷ்டிதங்களில் சிவபார்வதி ஸம்யோகம் முதலான ப்ராக்ருத ஸம்யோகங்களிற்போலே வீர்யம் வெளிப்படுவது கிடையாது என்றும், ப்ரஹ்மானந்தத்தை விளைக்கும் பரமாத்ம ஜீவாத்ம அணைப்பே அது என்றும் இதிஹாஸ புராணங்கள் ஒருமுகமாக முழங்குகின்றன. சைவாகமங்களும், சைவ புராணங்களும் தாமஸ ஶாஸ்த்ரங்களாகையாலே சிவ பார்வதிகளுக்கு உடலுறவையும், வீர்யம் வெளிப்படுதலையும், சக்ரபூஜை போன்ற வ்யபிசாரச் செயல்களையும் கூறுகின்றன. 13–4–80 கல்கியிலும், 'தந்த்ரம்' எனும் தலைப்பில் பௌத்த, சைவசாக்ததந்த்ரங்களிலுள்ள இந்தக் காம உபாஸனை விளக்கப்பட்டுள்ளது. ஸாத்விக ஶாஸ்த்ரங்களிலும், பாஞ்சராத்ர வைகானஸங்களாகிற வைஷ்ணவாகமங்களிலும் இவை அடியோடு கிடையாது. விஷ்ணு கோவில்களிலும் காமக் கேளிக்கைகளைக் காட்டும் சிற்பங்கள் காணப்படுகின்றன. அதற்கு அடிப்படையான வைஷ்ணவாகமங்களில் சக்ரபூஜை போன்ற வ்ய-பிசார உபாஸனைகள் கூறப்படாமையால் ர.சு. நல்லபெருமாள் கூறும் ஸமாதானம் விஷ்ணு கோவில் சிற்பங்களுக்குப் பொருந்தாது. உண்மையான ஸமாதானம் என்னவெனில்: ஆகமங்களில் எல்லாக் கலைகளையும் வெளிப்படுத்தும் சிற்பங்களைக் கோவில்களில் அமைக்கும்படி ஆகமவிதிகள் உள்ளன. ஶ்ருங்காரமும் ஒரு கலையாகையாலே. இந்த ஆகம விதியைப் பின்பற்றி அதை வெளிப்படுத்தும் சிற்பங்களும் கோவில்களில் உள்ளன. இப்படி ஆகமங்கள் விதிப்பதற்குக் கருத்து என்ன? எனில்: உலகிலுள்ள மக்களில் பெரும்பாலானவர்கள் ஶப்தம்,

ஸ்பர்ஸம், ரூபம் ரஸம், கந்தம் என்னும் ஐந்து விஷயங்களில் ஈடுபடுபவர்கள். அவர்களுடைய ஐப்புலன்களுக்கும் இரையளிக்கும் ஸகல கலைகளுக்கும் கோவில்களில் இடமளித்தால்தான் அவற்றை அநுபவிப்பதற்காக ஏராளமாகக் கோவில்களுக்கு வந்து, காலக்ரமத்தில் தெய்வங்களிடம் ஈடுபடுவார்கள் என்பதே ஆகமங்களின் கருத்தாகும். இதனாலேயே கோவில்களில் ஆடல் பாடல்களுக்கும், நவரஸங்களையும் வெளிப்படுத்தும் சிற்பங்களுக்கும், சுவையும், மணமும் மிக்க பிரஸாதங்களுக்கும், வாணவேடிக்கை முதலான கேளிக்கைகளுக்கும் இடமளிக்கப்பட்டுள்ளது. ர. சு. நல்லபெருமாள் கூறுவது போல் சக்ரபூஜை முதலான வியபிசாரக் காமக் கேளிக்கைகளுக்குக் கோவில்களை இடமாக்கினால், கோவில்கள் ஜனங்களை விலங்குகளாக ஆக்கவே பயன்படும். இத்தகைய கீழ்த்தரமான கொள்கையை லக்ஷக்கணக்கான வாசகர்கள் படிக்கும் பிரபல பத்திரிகைகளில் பிரசாரம் செய்து, அதை ஒரு மதாநுஷ்டானமாக ஆக்கப்பார்ப்பது மிகவும் அருவருக்கத்தக்கது. இதை ஒப்புக்கொண்டால் கோவில்கள் வியபிசார ஸ்தலங்களாக மாறிவிடும்.

K. கோவிந்தராஜன், ஸ்ரீரங்கம்.

*3. திருவிடைமருதூர் ஜகஜ்ஜோதிப் பிரசுரத்தால் வெளியிடப்பட்ட 'ஸுதர்சன மஹிமை' என்னும் புத்தகத்தில் B. சுந்தரராமன் என்பவர் 'திருவீழிமிழலை' என்னும் சிவ க்ஷேத்ரத்தில் திருமால் ஆயிரத்தெட்டு தாமரை மலர்களைக் கொண்டு சிவபூஜை செய்யும்போது ஒரு மலர் குறைந்ததால் தம்முடைய தாமரைக் கண்ணைப் பிடுங்கி, சிவனை அர்ச்சித்ததாகவும், அதனால் சிவன் உகந்து சக்ராயுதத்தை அளித்ததாகவும் கதை எழுதியிருக்கிறார். இதற்கு ஆதாரம் உண்டா?*

வேதங்களிலோ, உபநிஷத்துக்களிலோ, ஸ்ம்ருதிகளிலோ, இதிஹாஸங்களிலோ, ஸாத்விக புராணங்களிலோ, காளிதாஸன் போன்ற ப்ராசீன கவிகளின் நூல்களிலோ, சங்க இலக்கியங்கள் போன்ற பண்டைத்தமிழ் இலக்கியங்களிலோ இந்தக் கதைக்கும், இதுபோல் திருமாலைத் தாழ்த்தியும், சிவனை உயர்த்தியும் பிற்காலத்தில் சைவர்கள் கற்பனை செய்திருக்கும்

நூற்றுக்கணக்கான எந்தக் கதைக்கும் எந்த ஆத,ாரமும் கிடையாது. அந்தந்த ஊரிலுள்ள கோவில்களிலுள்ள சிவன் முதலான தெய்வங்களைப்பற்றிப் பிற்காலத்தில் புனையப்பெற்ற ஸ்த,ல புராணங்களிலேயே இத்தகைய கதைகள் காணப்படுகின்றன. நாயன்மார்களுக்கு முன் இவற்றை எவரும் ஆத,ரிக்கவில்லை. வேத,ம் முதலான ப்ரப,ல ப்ரமாணங்களில் பரம்பொருளாகக் கூறப்பட்ட நாராயணனைத் தாழ்த்திக் கூறுகையாலே வேத, விருத்,த,மான இவை அநாத,ரிக்கத்தக்கவையாகும்.

G. தேவராஜன், நெய்வேலி. (4, 5 கேள்விகள்)

*4. எல்லாம் அவன் [பரமாத்மா] செயல் எனில் கொடியவர்களின் செயலும் எம்பெருமானின் செய்கையாகாதா ?*

சேதனர்கள் செய்யும் ஒவ்வொரு செயலும் எம்பெருமானால் தூண்டப்பட்டே செய்யப்படுகிறது என்று ஶாஸ்த்ரங்கள் கூறவில்லை. எம்பெருமான் சேதநர்களுக்கு ஓரளவு செயல்புரியும் சுதந்திரத்தை அளித்திருக்கிறான். ஆகையால் பகுத்தறிவை உபயோகப்படுத்தி நல்லகாரியத்தைச் செய்யவும், பகுத்தறிவைப் பயன்படுத்தாமல் தீய காரியத்தைச் செய்யவும் எம்பெருமான் இடமளித்திருக்கிறான். இப்படி ஒப்புக்கொண்டால்தான் எம்பெருமான் நல்ல செயல்களுக்கு நற்பயனையளிப்பதும், தீய செயல்களுக்கு த,ண்ட,னையளிப்பதும் பொருந்தும். இதன் விரிவு ப்,ரஹ்மஸூத்ரத்தில் பராயத்தாதி, கரணத்தில் காணத்தக்கது. இந்த விதி,விலக்குக்கு உட்பட்டுத்தான் 'எல்லாம் அவன் செயல்' என்னும் வாக்யத்துக்குப் பொருள்கொள்ளவேண்டும்.

*5. தற்காலத்தில் குறைந்தபக்ஷம் நாம் எந்தக்கர்மங்களை அநுஷ்டி,க்கவேண்டும்.*

அவரவர் வேத,த்தின்படியும், ஸூத்ரத்தின்படியும், வர்ணாஶ்ரமத்தின்படியும் புரோஹிதர் செய்துவைக்கும் பூர்வாபரகர்மங்களைச் செய்யவேண்டும். முக்கியமாக அந்தணர் ஸந்த்,யாவந்த,னம், மாதாபித்ரு ஶ்ராத்,த,தர்ப்பணங்களைச் செய்யவேண்டும். ஸ்ரீ வைஷ்ணவன் ஒவ்வொருவனும் தினந்தோறும் திருவாராத,னம் செய்தபின்பே உணவுகொள்ளவேண்டும்.

N. வரதராஜன், மல்லேச்வரம். (6, 7 கேள்விகள்)

*6. எம்பெருமானுடைய திவ்யாயுதங்களின் அம்சமாகக் கூறப்படும் ஆழ்வார்களில் ஒருவரான திருமங்கையாழ்வார் பிறர் பொருளைக் கொள்ளையடித்ததும், தொண்டரடிப்பொடியாழ்வார் தேவதேவியிடம் ஈடுபட்டதும் எப்படிப் பொருந்தும்?*

ஆழ்வார்கள் மாறிமாறிப் பலபிறப்பும் பிறந்த ப3த்3த, ஜீவர்களாகவே தங்களைக் கூறிக்கொள்ளுகிறார்கள். அவர்களுடைய ப்ரபா4வத்தைக் கண்டு பிற்காலத்தில் வந்தவர்கள் அவர்களை ஒவ்வொரு நித்யஸூரிகளின் அம்சமாக உத்ப்ரேக்ஷை செய்தார்கள். அம்ஶாவதாரம் என்பதை உண்மையென்றே கொண்டாலும், ஒரு ஜீவனுக்குள் அந்த நித்யஸூரியின் ஶக்தி செயல்புரிந்தது என்னுமிவ்வளவே கொள்ளமுடியும். திருமங்கையாழ்வார் து3ஷ்டர்கள் தீயவழியில் சேர்த்திருந்த திரவியத்தை வாள்வலியாலும், தோள்வலியாலும் பறித்து, ப4க3வத்3 பா4க3வத கைங்கர்யங்களில் ஈடுபடுத்தியது தவறான கார்யமல்ல. தொண்டரடிப்பொடியாழ்வாரை தே3வதே3வியிடம் ஈடுபடும்படிசெய்து விடுவித்தது அரங்கனின் லீலாவிநோத3ங்களில் ஒன்று.

*7. ஆத்மரக்ஷணம், தே3ஹ ரக்ஷணம் இரண்டும் எம்பெருமானால் ஆகவேண்டியது என்று கவலையற்றிருக்கவேண்டிய ஸ்ரீவைஷ்ணவர்கள் ஆத்மரக்ஷணத்தைப்பற்றிக் கவலைப்படாமல் தே3ஹரக்ஷணத்தைப்பற்றி மாத்திரம் கவலைப்பட்டுப் பல முயற்சிகள் செய்வது பொருந்துமா?*

எம்பெருமானே ரக்ஷகன் என்னும் உறுதி தவிர ஆத்மரக்ஷணத்துக்கு நம்மிடம்வேண்டியது வேறெதுவுமில்லை. அந்த உறுதியில்லாதவர்கள் ஸ்ரீவைஷ்ணவர்களாகார். தே3ஹரக்ஷணம் முயற்சியில்லாமல் நடக்காது. இந்த தே3ஹத்தை ரக்ஷித்துக் கொள்வது ப4க3வத்3பா4க3வத கைங்கர்யத்திற்கு உறுப்பு என்னும் நினைவோடு தே3ஹரக்ஷணத்தில் முயற்சிசெய்வதில் தவறில்லை.

L. ஸ்ரீநிவாஸன், புதுடில்லி-5. (8, 9 கேள்விகள்)

*8. திருப்பாவைத் தனியனில் ஆண்டாள் எம்பெருமானுக்குத் தன்னுடைய பாரார்த்2யத்தைத் தெரிவித்ததாகவும்,*

*அதே சமயத்தில் பகவானை பலாத்காரமாக அநுபவித்ததாக வும் கூறப்பட்டிருப்பது முரண்படவில்லையா ?*

ஆழ்வார்களும், ஆண்டாளும் தமது பாரதந்த்ர்யத்தை உணர்ந்து எம்பெருமானுக்கு அறிவிக்கும் நிலையும் உண்டு. எம்பெருமானுடைய அநுப₄வ கைங்கர்யங்களாகிற ப்ராப்யத்தை எப்படியாவது பெற்றுவிட வேண்டும் என்னும் த்வரையாலே கலங்கி, தமது பாரதந்த்ர்யத்தை மறந்து, நோன்பு நோற்பது. மடலெடுப்பது போன்ற செயல்களைச் செய்து, ப₃லாத்கார மாக ப₄க₃வத₃நுப₄வத்தைப் பெறப்பார்க்கும் நிலையுமுண்டு. ப்ராப்யத்வரையாலே கலக்கம் ஏற்படும்போது பாரதந்த்ர்யத்தை மறந்து ப₃லாத்காரமாக எம்பெருமானை அநுப₄விக்க முற்படு வதும் பொருந்தும். பாரதந்த்ர்யத்தெளிவு இருக்கும்போது 'உடையவன் உடைமையைத் தான் விரும்பியபோது ஏற்றுக் கொள்ளட்டும்' என்று ஆறியிருப்பதும் பொருந்தும்.

*9. ஆழ்வார் பாசுரம் எதிலும் நேராக கீதையின் ப்ர ஸ்தாவம் இருப்பதாகத் தெரியவில்லை என்று கூறுகிறார்களே. இஃது உண்மையா ?*

இது ஆழ்வார் பாசுரங்களை அறியாதார் கூற்றேயாகும். ''சேயன் அணியன் சிறியன் மிகப்பெரியன், ஆயன் துவரைக் கோனாய் நின்ற மாயன், அன்றோதிய வாக்கதனைக் கல்லார், உலகத்தில் ஏதிலராய் மெய்ஞ்ஞானமில்'' [நான்-திருவ 71] என்று திருமழிசையாழ்வார் பாடி, 'இல்லறமில்லேல்' என்னும் அடுத்த பாட்டில் கீ₃தா சரமஶ்லோகத்தின் பொருளையும் அறிவித்திருக் கிறார். மெய்ஞ்ஞான நூலாக உலகனைத்தும் கொண்டாடும் கீ₃தையை 'மாயன் அன்றோதிய வாக்கு' என்று எடுத்து, அதைக் கற்காதவர்கள் மெய்ஞ்ஞானமில்லாதவர்கள் என்று திருமழிசையாழ்வார் மிகத்தெளிவாகக் கூறியிருக்கிறாரே. ''அகல் ஞாலத்தவர் அறிய நெறி எல்லாம் எடுத்துரைத்த நிறை ஞானத்தொரு மூர்த்தி'' [திருவாய் 4-8-6] என்று கர்மயோக₃ம், ஞானயோக₃ம், ப₄க்தியோக₃ம் முதலான எல்லா நெறிகளையும் உலகெல்லாம் அறியும்படி எம்பெருமான் உபதே₃ஶித்ததாக நம்மாழ்வார் அருளியிருப்பது கீ₃தையைத் தவிர வேறு எந்த நூலைக் குறிக்கமுடியும் ? ஆழ்வார் கீ₃தையைக் குறித்திருக்கும் மற்றும் சிலவிடங்களும் உண்டு. இவ்விடங்களே போதுமானவை.

S. கோவிந்தாச்சாரி, தொட்டியம்.

*10. 23—5—80 'தினமணிக் கதிர்' பத்திரிகையில் 'மணி வண்ணன் பதில்'களில் "கொள்கைக்காக வெளிவரும் அசல் பத்திரிகைகள் எவை? எவை?" என்னும் கேள்விக்கு பதிலாக "திருச்சியிலிருந்து வெளிவரும் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம், மதுரையிலிருந்து வெளிவரும் இறையியல்மலர், காயத்ரி, இஸ்மி, கீதாசாரியன், ந்ருஸிம்ஹப்ரியா, தென்மொழி முதலிய வைகளைச் சொல்லலாம்" என்று அப்பத்திரிகை ஆசிரியரான திரு 'தீபம்' நா. பார்த்தசாரதி அவர்கள் எழுதியிருப்பதைப் பார்த்தீர்களா? 'மதத்துறைப் பத்திரிகைகளே கொள்கைக்காக வெளிவரும் அசல் பத்திரிகைகள்' என்று பறைசாற்றும் இத்துணிவும், நேர்மையும் மற்ற பத்திரிகையாசிரியர்களுக்கு வருமா?*

திரு தீபம் 'நா. பார்த்தசாரதி அவர்களின் பதிலைப் பார்த்தேன். தாம் ஆசிரியராயிருந்து தரத்தோடு நடத்தும் 'கதிர்' பத்திரிகையையும், தம்மால் தொடங்கப்பெற்று மிகுந்த தரத்தோடு நடந்துவரும் 'தீபம்' பத்திரிகையையுங்கூட கொள்கைக்காக வெளிவரும் அசல் பத்திரிகைகளின் பட்டியலில் சேர்க்காமல், 'மதத்துறைப் பத்திரிகைகளே மக்களை உயர்த்தக் கூடியவை' என்று உணர்ந்து, அவைகளையே 'கொள்கைக்காக வெளிவரும் அசல்பத்திரிகைகள்' என்று பறைசாற்றுவதற்கு மிகுந்த துணிவும், நேர்மையும் வேண்டும். அது நா. பார்த்தசாரதி அவர்களிடம் இருப்பதுபோல் வேறு எந்தப் பொதுஜனப் பத்திரிகை ஆசிரியரிடமும் இருப்பதாகத் தெரியவில்லை. பொதுஜனப் பத்திரிகை ஆசிரியர்கள் இப்படி வெளிவரும் மதத்துறைப் பத்திரிகைகளிலிருந்து தரமான சில விஷயங்களை வெளியிட்டு வந்தால் எல்லா மதங்களின் ஸாரங்களும் அனைவர்க்கும் பரவி, மக்களுடைய ஒழுக்கமும், மத சகிப்புத் தன்மையும் வளரும்.

S. வேங்கடம், சமயபுரம்.

*11. பல பொதுஜனப் பத்திரிகைகளில் வெளிவரும் கதைகள் கட்டுரைகள், பல பிரபல உபன்யாஸகர்கள் பிரமுகர்களின் பேச்சுக்கள், பீடாதிபதிகளின் அருள்மொழிகள் முதலியவற்றை விமர்சித்து, தாங்கள் ஸுதர்சனர் பதிலில் எழுதிவருவதை அப்*

*பத்திரிகைகள், உபந்யாஸகர்கள் முதலானோர்க்கு அனுப்பி வருகிறீர்களா? அவர்களில் எவரிடமிருந்தாவது பதில் வந்திருக்கிறதா?*

எல்லாப் பத்திரிகைகளுக்கும், காமகோடி மடத்திற்கும், நமக்கு விலாசம் தெரிந்த உபந்யாஸகர்கள் பிரமுகர்களுக்கும் ஸுதர்சனர்பதிலை அனுப்பிவருகிறோம். பத்திரிகைக் காரியாலயங்களில் இதை ரஸித்துப் படிப்பதாகக் கேள்விப்படுகிறோம். நாம் ஆதாரத்தோடு எழுதும் விஷயங்களுக்கு பதில் எழுத முடியாதாகையாலே பெரும்பாலானவர்கள் பதில் எழுதுவதில்லை. தொழிலதிபர் திரு. நா. மகாலிங்கம் தம்மிடம் வேலை செய்பவர் ஒருவரைக்கொண்டு நம்முடைய விமர்சனத்துக்கு சம்பந்தமில்லாமல் ஆங்கிலத்தில் எதையோ எழுதி அனுப்பச்செய்தார். நம் விமர்சனத்துக்கு பதிலைச் சுருக்கமாகத் தமிழில் எழுதியனுப்பும்படி கேட்டதற்கு யாதொரு பதிலுமில்லை. கலைமகளில் ஆழ்வார்களைப்பற்றிப் பொய்க்கதைகள் எழுதிய Dr. பிரேமாநந்தகுமார், M. A., Ph. D. [Mother's Centre D-11, B H P.V. Township, Visakhapatnam-*530 012*] அவர்கள் 29—4—80 அன்று ஆங்கிலத்தில் இரண்டொரு வரிகள்கொண்ட கடிதம் எழுதினார். "ஸுதர்சனர்பதில் மூன்றாவது சதகத்தின் 14வது பக்கத்தில் 'குற்றம் செய்தவர்கள் பக்கல் பொறையும், க்ருபையும், உகப்பும், சிரிப்பும், உபகாரஸ்ம்ருதியும் நடக்கவேணும்' என்னும் ஆசார்ய வசனத்தை எடுத்துக்காட்டியிருக்கிறீர்கள். அந்த மனப்பான்மை நம்மில் ஒவ்வொருவருக்கும் இருப்பது தலைசிறந்தது" என்பது அந்தக் கடிதத்தின்ஸாரம். இக்கடிதம் கிடைத்த 2—5—80 அன்றே நாம் பின்வரும் பதில் கடிதத்தை எழுதினோம்.

Dr. பிரேமாநந்தகுமார் M. A., Ph. D அவர்களுக்கு எழுதியது. தங்கள் கடிதம் கிடைத்தது. 14-ம் பக்கத்தில் யான் காட்டியிருக்கும் பூர்வாசார்யர்களின் புத்திமதி *நம் விஷயத்தில்* குற்றம் செய்தவர்கள் விஷயத்தில் நாம் இருக்க வேண்டிய நிலையைப்பற்றியது. ஆதாரமில்லாமலும், ஆழ்வார்களின் அருளிச்செயல்களுக்கு முரணாகவும் ஆழ்வார்களைப் பற்றிப் பொய்க்கதைகள் எழுதிய தங்களுக்கு அது சிறிதும் பொருந்தாது. 'நான் அப்படி எழுதவில்லை' என்று தாங்கள்

கூறுவீர்களாயின், ஸுதர்சனர் பதில் 2-வது சதகம் 90-வது பதிலிலும், மூன்றாவது சதகம் 18, 73 பதில்களிலும் என்னால் விமர்சிக்கப்பட்ட தங்கள் கதைகளில் ஆழ்வார்களின் அருளிச்செயல்களுக்கு முரணான விஷயங்களை எந்த ஆதாரங்களைக் கொண்டு எழுதினீர்கள் என்பதைத் தமிழில் சுருக்கமாக விளக்கி எனக்கு எழுதவும். அதை ஸுதர்சனத்தில் வெளியிட்டு ஆராய்ந்து நடுநிலையாளர் தீர்ப்புக்கு விடுகிறேன்.

தங்கள் நன்மையை விரும்பும்,

S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்.

இக்கடிதத்திற்கு இன்றுவரையில் எந்த பதிலும் இல்லை. இவர்கள் நாம் எடுத்துக்காட்டும் விஷயங்களுக்கு பதிலுரைக்காவிடினும், மேலும் மேலும் இத்தகைய தவறுகளைச் செய்யாமலிருந்தால் அதுவே நாட்டிற்குப் பெரிய ஸேவையாகும்.

K. நாராயணன், திருச்சி-17.

*12. இதயம் சித்திரை இதழ் ஒன்றில் 'தேவிதர்சனம்' தொடரில் காஞ்சீ பெருந்தேவித்தாயாரின் பெருமையை விளக்கி வரும்போது பொன். பாஸ்கர மார்த்தாண்டன் 'மகாலக்ஷ்மிக்கு சிவன் தமையன்' என்று எழுதியிருக்கிறார். இதற்கு ஏதாவது ஆதாரம் உண்டா ?*

இதற்கு எந்த ஆத₄ாரமும் இருப்பதாகத் தெரியவில்லை. வேதத்திலும், மஹாப₄ாரதம் முதலான பல நூல்களிலும் நாராயணன் பிரமனைப் படைத்ததாகவும், பிரமன் சிவனைப் படைத்ததாகவுமே உள்ளது. இதன்படி சிவனுக்கு மஹாலக்ஷ்மி பாட்டியாகவேண்டும். ஓராத₄ாரமும் இல்லாமல் எழுதவல்ல நமது பொதுஜனப் பத்திரிகைகள் தே₃வதைகளில் யாருக்கும் எந்த உறவையும் கற்பிப்பதில் வியப்பில்லை. ஸ்ரீ உ. வே. காஞ்சீ மஹாவித்வான் அண்ணங்கராசார்ய ஸ்வாமியையும், ஸ்ரீரங்கம் ஸ்ரீ உ. வே. ஶதாபிஷேகம் கோவிந்த நரசிம்மாசார்யஸ்வாமியையும் கலந்துகொண்டு இக்கட்டுரைத்தொடரை எழுதுவதாக அவரே வெளிப்படுத்தியுள்ளார். கட்டுரை எழுதிய பின்பு அவர்களிடம் காட்டியிருந்தால் இந்த அப₃த்₃த₄மும், இக்கட்டுரைத் தொடரிலுள்ள மற்றும் பல அப₃த்₃த₄ங்களும் நீங்கியிருக்கும்.

S. வரதராஜன், ஸ்ரீரங்கம்.

*13. 1980 மே ஸப்தகிரியில் பக்கம் 34ல் 'கடவுள்' என்ற பத்திரிகையிலிருந்து ஒரு துணுக்கு வெளியிடப்பட்டுள்ளது. அதில் பாண்டவர்களின் வனவாஸத்தின்போது துர்வாஸர் அகாலத்தில் சிஷ்யர்களுடன் சாப்பிடவந்த சமயத்தில் பாஞ்சாலி 'த்வாரகாபுரிவாஸா !' என்று அழைத்ததால் கண்ணன் தாமதித்து வந்தான் என்றும், துச்சாஸனன் துகிலுரியும்போது, 'இதயகமலவாஸா!' என்று அழைத்ததால் கண்ணன் அக்கணமே வந்தானென்றும் எழுதப்பட்டுள்ளது. இஃது உண்மையா ?*

மஹாபாரதத்திற்கு இது மிகவும் முரண்பட்டது. துகிலுரியும்போது திரௌபதி "ஹா க்ருஷ்ண த்வாரகாவாஸிந் !" "த்வாரகாநிலயாச்யுத !" என்று அழைத்ததாகவே மஹாபாரதத்திலுள்ளது. மஹாபாரதத்திலுள்ளபடி கண்ணன் அந்த கட்டத்தில் வரவேயில்லை. இப்படி ஆதாரமற்ற விஷயங்களை கிருபானந்தவாரியார்போன்ற உபந்யாஸகர்களும், கட்டுரையாளர்களும் எழுதுவதும், அவைகளை 'ஸப்தகிரி' போன்ற பத்திரிகைகள் ஆராயாமல் மறுபடியும் அச்சிடுவதும் நம் நாட்டிலேயே நடக்கக்கூடிய விசித்திரங்கள். மதத்துறையில் பொய்யர்களும், ஆராய்ச்சியற்றவர்களும் நிறைந்திருக்கும் இந்நிலையை மாற்றுவதற்கும், பொதுமக்கள் பொய்யான விஷயங்களை உண்மையென்று கொள்ளாமலிருப்பதற்கும் நாம் ஸுதர்சனர்பதிலில் இத்தகைய விஷயங்களை விமர்சிப்பது அவசியமாகிறது.

S. A. முகுந்தராமாநுஜதாஸர், மாறம்பட்டி.

*14. 'அநந்யாஸ்சிந்தயந்தோ மாம்' என்னும் ஸ்லோகத்தில் 'யோகக்ஷேமம் வஹாமி' என்றதற்கு "என்னை அடைவதாகிற யோகத்தையும், மறுபடியும் ஸம்ஸாரத்திற்குத் திரும்பிவராமையாகிற க்ஷேமத்தையும் அளிக்கிறேன்" என்ற பொருள் தங்கள் கீதாவ்யாக்யானத்தில் எழுதியிருப்பது போதாது இவ்வுலகில் இருக்கும்போது எம்பெருமானுடைய அருளால் யோகக்ஷேமம் கிடையாதா? தேஹயாத்ரை கர்மாதீனமாகத்தான் நடக்குமா? ஈஸ்வராதீனமாக நடக்காதா? ஆகையால், 'எங்கும் எம்பெருமானுடைய அருளால் யோகக்ஷேமம் கிடைக்கிறது' என்று பொருளை விரிவுபடுத்திக்கொள்வதே சரி என்று நினைக்கிறேன்.*

நமது கீ₃தாவ்யாக்₂யானம் எம்பெருமானுருடைய கீ₃தா பா₄ஷ்யத்தை முற்றிலும் அநுஸரித்து எழுதப்படுகிறது. ஆகையால் அதை மாற்றுவதற்கோ, விரிவுபடுத்துவதற்கோ, நமக்கு அதி₄காரமில்லே. 'எம்பெருமான் இவ்வுலகில் யோக₃ க்ஷேமங்களை அளிக்கவல்லவன்' என்பதை கீ₃தாவ்யாக்₂யானத்தில் எங்கும் மறுக்கவுமில்லை பரமபத₃த்தையே அளிக்கவல்லவன் ப₄க்தர்கள் விரும்பும் இவ்வுலகப் ப₂லன்களை அளிக்க இயலாதவன் என்று எவரும் கூறமுடியுமா? "இங்கு எம்பெருமானையே பயனுகக்கொண்ட மஹாத்மாக்களைப் பற்றிய ப்ரகரணமாகையாலே, எம்பெருமானை அடைவது அவர்களுக்கு யோக₃மாகிறது. ஸம்ஸாரமண்ட₃லத்துக்குத் திரும்பி வந்துவிட்டால் அந்த போக₃ம் நிலைநில்லாமல் போய்விடுமாகையாலே, அப்படித் திரும்பிவாராமலிருக்கச் செய்வது க்ஷேமமாகிறது. ஆகையால் இங்கு யோக₃க்ஷேம ஶப்₃த₃த்தால் இவ்வுலகப் ப₂லன்கள் கிடைப்பதையும், அவற்றை நிலையாக்குவதையும் பொருளாகக் கொள்வது பொருந்தாது. ஆநுஷங்கி₃கமாக இவ்வுலகப் ப₂லன்களை எம்பெருமான் அளித்தானுகிலும், இவர்கள் அவற்றை ப்ராப்யமாகக் கருதமாட்டார்களன்றே." என்று எம்பெருமானையே பயனுகக்கொண்ட மஹாத்மாக்களைப் பற்றிய ப்ரகரணமாகையாலே இந்த ஶ்லோகத்திற்கு இங்கு இப்படியே பொருள்கொள்ளவேண்டுமென்று கீ₃தா வ்யாக்₂யானத்தில் தெளிவாக நிரூபிக்கப்பட்டது. இந்த ஶ்லோகத்தையே நம்மைப் போன்றவர்கள் நமக்குப் பயன்படுத்திக்கொள்ளும்போது 'யோக₃க்ஷேமம் வஹாமி' என்றதற்கு இவ்வுலகயோக₃க்ஷேமங்களையும் பொருளாகக் கொள்வதில் தடையில்லை. நால்வகைப் பயன்களையும் அளிப்பதற்கே எம்பெருமான் நாலு திருக்கைகளை உடையவனுயிருக்கிருன் என்பது ஸர்வஶாஸ்த்ர ப்ரஸித்₃த₄ம். ஆயினும், பொதுவாக தே₃ஹயாத்திரை கர்மாதீ₄னமாகவே நடக்கும். குசேலர் முதலானுர்க்கு இவ்வுலகச் செல்வத்தை வாரிவழங்கியிருக்கையாலே, தே₃ஹயாத்திரை ஈஶ்வராதீ₄னமாகவும் நடக்கக்கூடும். ஆனுல் எவர்க்கு நடக்கும் என்பது நம் இஷ்டமன்று. "நின்னையே தான் வேண்டி நீள் செல்வம் வேண்டாதான் தன்னையே தான் வேண்டும் செல்வம்போல்" [பெருமாள்திரு 5-9] என்ருர்

குலசேகராழ்வார். இவ்வுலகப் ப$_2$லன்களை யாருக்கு எவ்வளவு கொடுத்தால் அவர்கள் கெட்டுப்போகமாட்டார்கள் என்பது ஸர்வஜ்ஞனான அவனுக்கே தெரியும். ஆகையால், இவ்வுலகச் செல்வம் நமக்குக் குறைவாயிருப்பதையிட்டு 'யோக$_3$க்ஷேமம் வஹாமி' என்ற வர்க்யம் நம் விஷயத்தில் ப$_2$லிக்கவில்லையே என்று அவநம்பிக்கை கொள்ளலாகாது. நம் தகுதிக்குத் தக்கவாறு எம்பெருமான் கொடுத்திருக்கிருன் என்று திருப்தியுடனிருக்க வேண்டும். இப்படித் திருப்தியுடன் அவனையே தஞ்சமாகக் கொண்டிருப்பவர்களுக்கு அவன் முக்$_2$யமான யோக$_3$க்ஷேமமாகிற மோக்ஷத்தையே அருளுவான் என்பதில் ஐயமேயில்லை.

**அ. இராசகோபாலன், சென்னை-49. (15-17 கேள்விகள்.)**

***15.*** *வைஷ்ணவர்கள் நெற்றியில் ஸ்ரீசூர்ணம் மட்டும் தனியாக இட்டுக்கொள்ளலாமா? அதில் தவறு, பாபம் ஏதேனும் உண்டா?*

திருமண்காப்பு பெருமாளுடைய திருவடியையும், ஸ்ரீசூர்ணம் பிராட்டியையும் குறிக்கிறது. எம்பெருமான் திருவடியை விட்டுப் பிராட்டியைப் பிரிப்பது சரியில்லைதான். இக்காலத்தில் பலர் பல காரணங்களால் ஸ்ரீசூர்ணத்தை மாத்திரம் இட்டுக்கொள்கிருர்கள். ஒன்றுமில்லாமல் பாழும் நெற்றியாயிருப்பதை விட இது பாதகமல்ல என்றுதான் நினைக்க வேண்டியிருக்கிறது.

***16.*** *'விஷ்ணுவின் அம்சமான பரசுராமனை ஈன்ற தாய் ரேணுகாதேவி சக்திதான்' என்று இதயம் பேசுகிறது வார இதழில் தேவி தரிசனம் பகுதியில் திரு பொன். பாஸ்கர மார்த்தாண்டன் எழுதி உள்ளாரே. இதற்குத் தங்கள் பதிலென்ன?*

ஸமீப காலத்தில் கல்பிக்கப்பட்ட அப$_3$த்$_3$த$_4$மான ஸ்த$_2$ல புராணங்களைக் கொண்டு எழுதப்படும் இத்தகைய கட்டுரைகளைப் படிக்காமலிருப்பதே நல்லது.

***17.*** *"எந்தப் பெட்டியில் நமக்குத் தபாலைப்போட்டாலும் தலைமை அலுவலகத்திற்குச் சென்று உரியவருக்குப் போய்ச் சேரும். அதுபோல எந்தக்கடவுளை நினைத்து தியானம் செய்தாலும்*

*அதன் பலன் ஒரே இடத்திலிருந்து பெறலாம்'' என்று திரு.கிருபானந்தவாரியார் பேசியுள்ளதாக 16—9—79 தினமலர் சென்னை பதிப்பில் வந்துள்ளது. இதுபற்றித் தங்கள் கருத்து என்ன ?*

வாரியார் தழுவியிருக்கும் சைவ மதத்திற்கும் இது முரண்பட்டது. பொதுமக்களைக் கவருவதற்காக வாரியார் போன்றவர்கள் இப்படிப் பேசி நல்ல பெயர் ஸம்பாதித்துக் கொள்கிறார்கள். ஆட்டையும், கோழியையும் பலி கேட்கும் க்ஷுத்ர தெய்வங்களையும், மோக்ஷமளிக்கவல்ல பரம ஸாத்விக தெய்வமான திருமாலையும் ஒன்று என்று அறிவுள்ளவர்கள் எவரும் நெஞ்சாலும் நினைக்கமாட்டார்கள்.

ஆழ்வை அண்ணா(வியார்). ஆழ்வார்திருநகரி.

*18 நன்மையால் மிக்க நான்மறையாளர்கள் மதுரகவியைப் புன்மையாகக் கருதினரோ? அப்படிப் புன்மையாகக் கருதினது எதை ? மதுரகவியையா ? அல்லது மதுரகவி, நம்மாழ்வார் உறவையா ?*

நன்மையால் மிக்க நான்மறையாளர்கள் மதுரகவியையோ அல்லது மதுரகவி—நம்மாழ்வார் உறவையோ புன்மையாகக் கருதுவதற்கு இடமில்லை. ஆகையால் ''மதுரகவி ஆழ்வார் நைச்யாநுஸந்தானத்தாலே அவர்கள் தம்மைப் புன்மையே வடிவெடுத்தவனாகக் கருதுவார்கள் என்று நினைக்கிறார்'' என்றே 'கருதுவர்' (கண்ணி 4) என்பது வரையிலுள்ள பாட்டின் பகுதிக்குக் கருத்துரைக்க வேண்டும். 'ஆதலின்' என்று தொடங்கியுள்ள மேல் பகுதியால் ''இப்படி நான்மறையாளர்களால் இகழத்தக்க தாழ்வுடைய என்னை, அதுவே காரணமாகத் தாயாகவும், தந்தையாகவுமிருந்து கைக்கொண்டருளும் இயல்பினரான நம்மாழ்வாரே எனக்குத் தலைவர்'' என்று அருளிச்செய்கிறார். வ்யாக்யானங்களில் இவ்வர்த்தம் தெளிவாக விவரிக்கப்பட்டுள்ளது.

G. தேவராஜன், நெய்வேலி. *(19-25 கேள்விகள்)*

*19. 'ஜீயர்' என்ற சொல்லுக்கு என்ன அர்த்தம்? அது ஸம்ஸ்கிருதச் சொல்லா என்பதை விளக்கும்படி வேண்டுகிறேன்.*

சீயம் என்பது சிங்கத்தைக் குறிக்கும் தமிழ்ச் சொல். சிறந்தவர்களை 'சிங்கம்' என்று சொல்லுவதுண்டு. அந்த ரீதியில்

சிறந்தவர்களான ஸ்ரீவைஷ்ணவ ஸந்யாஸிகளுக்கு 'சீயர்' எனப் பெயர் ஏற்பட்டு அது 'ஜீயர்' என்றும் மருவியிருக்கக்கூடும்.

*20. சாணக்கியன் வைஷ்ணவ குலத்தைச் சேர்ந்தவன் என்று கூறுகிறார்களே; அதற்கு என்ன ஆதாரம்?*

சாணக்கியன் தென்னாட்டில் பிறந்த பூர்வசிகா ஸ்ரீவைஷ்ணவன் என்றும், விஷ்ணுகுப்தன் என்பது அவன் பெயர் என்றும் கர்ணபரம்பரைச் செய்தியாக வழங்கி வருகிறது.

*21. தமிழில் "பெருமாள் திருமொழி", வடமொழியில் "முகுந்தமாலை" இரண்டும் அருளிய குலசேகராழ்வார் ஒருவர் தானா? அவருக்கு "நாளைக்குப் போவார்" என்ற பெயர் வரக் காரணம் என்ன?*

முகுந்தமாலை அருளியவர் குலசேகராழ்வாரல்லர். கேரள மன்னர் பரம்பரையில் மிகவும் பிற்காலத்தில் வந்த ஒருவரே அவர். மணவாளமாமுனிகளுக்கு முற்பட்டகாலத்தில் இருந்த எவரும் முகுந்தமாலையைக் கையாளாததால் முகுந்தமாலையி லிருந்து மேற்கோள்காட்டியிருக்கும் மணவாளமாமுனிகளுக்குச் சற்று முற்பட்ட காலத்தில் இருந்திருக்கக் கூடியவர் இம்மன்னர். 'நாளைக்குப்போவார்' என்னும் பெயர் சிவபக்தரான நந்தனுக்கு உண்டேயொழியக் குலசேகராழ்வாருக்குக் கிடையாது.

*22 ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீராமானுஜர் சன்னிதி இருக்குமிடம் ஒரு காலத்தில் ரங்கநாதனின் வசந்த மண்டபமாக இருந்ததென்றும், ஸ்ரீராமானுஜர் பூத உடலை நீத்தபோது அங்கேயே சமாதிவைக்கப் பட்டதாகவும் ஒரு புத்தகத்தில் படித்தேன். இது உண்மைதானா? எம்பெருமான் வாசம் செய்யும் இடத்தில் சமாதியை வைப்ப துண்டா? தெளிவுபடுத்தப் பிரார்த்திக்கிறேன்.*

இது உண்மையே. ஆழ்வாருடைய திருமேனியில் அபிமானத்தாலே எம்பெருமான் அவரைத் திருமேனியோடே பரமபதத்திற்கு அழைத்துச் செல்லத் துடித்தான். ஆழ்வார் அவனைக் கால்கட்டி, அப்படிச் செய்யாதபடி தடுத்துக் கொண்டார். அவர் திருமேனியை ஆழ்வார்திருநகரியில் ஸந்நிதிக் குள்ளேயே பள்ளிபடுத்தும்படி செய்தான். அதேபோல் எம்பெருமானுடைய திருமேனியிலுள்ள அபிமானத்தாலே திருவரங்கராஜன் இப்படிச் செய்ததில் எக்குறையுமில்லை.

*23. தர்மத்திற்கு நாயகனான தர்மர் இருக்கையில், பகவான் அர்ஜுனனுக்கு மட்டும் விசுவரூபத்தினைக் காட்டியதேன்?*

தர்மத்துக்கு நாயகன் தர்மபுத்ரன் என்பது தவறு. தர்ம ராஜாவான யமனின் பிள்ளையாகையால் யுதிஷ்டிரர் தர்மபுத்ரர் என்று பெயர்பெற்றார். தர்மத்துக்கு நாயகன் எம்பெருமானே. இவ்வுண்மையை மார்க்கண்டேயர் மூலமாக அறிவித்து, "ஸித்த தர்மமான எம்பெருமானைப் பற்றுவிடில், ஸாத்ய தர்மங்களால் எப்பயனுமில்லை" என்று தர்மபுத்ரரை உணரச் செய்து, பஞ்சபாண்டவர்களை வனவாஸத்தின்போது தன்னை சரணமடையச் செய்தான் எம்பெருமான். த்ரௌபதியின் சரணாகதி பலிப்பதற்காக அர்ஜுனனைக்கொண்டு கௌரவ ஸேனையை அழிக்கத் திருவுள்ளம்பற்றி, அதற்காக அர்ஜுனனுக்கு கீதோபதேசத்தையும், விச்வரூபம் காட்டுவதையும் செய்தான் கண்ணன்.

*24. "இன்றுபோய் நாளைவா" என இராவணனுக்கு மட்டும் ஓர் [திருந்த] சந்தர்ப்பம் கொடுத்த இராமபிரான், வாலிக்கு மட்டும் கொடுக்க மறுத்ததேன்?*

ராவணனை அழிப்பதற்குத் துணையாக இந்திரனுடைய அம்சமாகப் பிறந்த வாலி அதற்கு மாறாக ராவணனோடு நட்பு கொண்டதாலும், ராமகாரியத்திற்காக சூரியனுடைய அம்சமாகப் பிறந்த சுக்ரீவனோடு தீராப்பகை கொண்டமையாலும் அவனைக் கொல்லுவது தவிர ராமபிரானுக்கு வேறு வழியில்லை.

*25. உலகில் உள்ள எல்லா மதத்தினரும் பரமாத்மாவை வணங்கும் நாள் எப்பொழுது வரும்?*

கலியுகத்தில் வருமென்று தோன்றவில்லை. கல்கி அவதாரமெடுத்து, தீயவர்களையெல்லாம் தொலைத்தபிறகு கிருத யுகத்தில் வரலாம்.

**A. கிருஷ்ணமாச்சாரி, கோடம்பாக்கம், சென்னை.**

*26. 5—6—80 குமுதத்தில் அரசு பதிலில் 'சைவ சித்தாந்தமும் அத்வைத சித்தாந்தமும் ஒன்றேதானா'? என்னும் கேள்விக்கு " ஆதிசங்கரரின் அத்வைதம், ராமானுஜரின் விசிஷ்டாத்வைதம், சைவ சித்தாந்தம் மூன்றும் அத்வைதம்*

*குடும்பத்தைச் சேர்ந்தவை என்று கருதப்படுகின்றன” என்று எழுதப்பட்டிருந்த பதிலை மறுத்து குமுதத்திற்கு எழுதியுள்ளேன். இதுபற்றி தேவரீரும் விளக்கி எழுதப்பிரார்த்திக்கிறேன்.*

இது பற்றி 31—5—80 அன்றே குமுதத்திற்கு பின்வரும் விளக்கம் நம்மால் எழுதப்பட்டது:—

“இக்கேள்விக்கு ‘அரசு’ அளித்துள்ள பதில் போதாது. அத்வைதத்துக்கும் மற்ற இரண்டு மதங்களுக்கும் மிகவும் வேற்றுமைகள் உண்டு. “உலகம் பொய்; அறிவேயான பரம்பொருள் ஒன்றே மெய்; மாயையால் அது ஜீவனாகி உலகமாகிற பொய்த்தோற்றத்தைக் காண்கிறது. உண்மை அறிவால் மாயை விலகும்போது, ஜீவன் பரம்பொருள் ஆவதே மோக்ஷம்”—என்பது அத்வைதம். கணக்கற்ற சித்தும் (ஜீவர்களும்) அசித்தும் (ஜடப்பொருள்களும்) அடங்கிய உலகம், இவற்றை ஆட்சிபுரியும் பரம்பொருளான திருமாலுக்கு உண்மையான உடலாக உள்ளது; ஜீவன் திருமாலைத் தஞ்சமாகப் பற்றி, பரமபதம் சென்று, ஞான விரிவுபெற்று, பேரின்பமடைந்து, திருமாலுக்குத் தொண்டு செய்வதே மோக்ஷம்—என்பது விசிஷ்டாத்வைதம். சைவ சித்தாந்தத்தில் சிவன் பரம்பொருளாகக் கொள்ளப்படுகிறான்; உலகிற்கும் பரம்பொருளுக்கும் உடலும் உயிருமாயிருக்கும் தொடர்பு ஒப்புக்கொள்ளப்படுவதில்லை; இவை தவிர மற்ற விஷயங்களில் பெரும்பாலும் விசிஷ்டாத்வைதத்தை ஒட்டிய கொள்கைகளே உள்ளன

இவ்வுண்மையை அடுத்த இதழில் வெளியிட வேண்டுகிறேன்.

இப்பதில் சுருக்கியுங்கூடக் குமுதத்தில் வெளியிடப்படவில்லை. நம் நாட்டுப் பத்திரிகைகளுக்குப் பத்திரிகையின் விற்பனை முக்கியமேயொழிய, மதத்துறையில் பொய்கள் பரவுவதைப் பற்றிக் கவலையில்லை. பெரும்பாலான பாமரமக்களைப் பொய்கூறி ஏமாற்றும் வாரியார், அக்னிஹோத்ரம் தாத்தாச்சார்யர் போன்றவர்களுக்கே பொதுஜனப் பத்திரிகைகளில் இடமுண்டு என்பது மற்றொரு முறை நிரூபிக்கப்பட்டுவிட்டது. இப்பத்திரிகைகள் மதத்துறையில் நுழையாமலிருந்தால் அதுவே நாட்டிற்கு நல்லது என்று தோன்றுகிறது.

S. வேங்கடம், சமயபுரம்.

*27. 1 — 6 — 80 தினமணிச் சுடர் மதிப்புரையில் ‘ஸ்ரீ சுதர்சன மகிமை’ என்னும் புத்தகத்திற்கு விமர்சனம் எழுதியவர் “ஸ்ரீ கூரநாராயண ஜீயர் தமக்கு ஏற்பட்ட கண்ட*

*மாலே நோய்தீர ஸ்ரீசுதர்சன சதகம் பாராயணம் செய்து பயன் பெற்றார் என்பது வரலாறு" என்று எழுதியுள்ளார். இஃது உண்மையா?*

இது அடியோடு தவறு. கூரத்தாழ்வான் சிஷ்யரான கூர நாராயண ஜீயரே திருவரங்கப் பெருமாள் அரையருடைய நோய் தீருவதற்காக ஸுத₃ர்ஶன ஶதகத்தை அருளிச்செய்தார் என்பது ஸுப்ரஸித்₃த₄ம். "ரங்கே₃ஶ விஜ்ஞப்தி கராமயஸ்ய சகார சக்ரேஶ நுதிம் நிவ்ருத்தயே" என்று ஸுத₃ர்ஶன ஶதகத்தின் தனியனிலேயே இவ்விஷயம் வெளியிடப்பட்டுள்ளது. விமர்சனங்கள் விஷயமறிந்தவர்களைக் கொண்டு வெளிவருவது நல்லது.

R. பத்மநாபன் (B.Com.) R. கிருஷ்ணன் M Com. A.C A.
இ. ச. கண்ணன் B.E. AMIE ஹைதராபாத்.

*28. "இதயம் பேசுகிறது" 1—6—80 இதழில் 'தேவி தரிசனம்' என்ற கட்டுரைத் தொடரில் பொன். பாஸ்கர மார்த்தாண்டன் அவர்கள் சக்கரத்தாழ்வாரைப்பற்றிக் குறிப்பிடும் போது. "சக்கரத்தாழ்வாரின் அமைப்பில் சர்வசக்திகளை ஆளும் மூன்று மஹாசக்திகளின் அம்சங்கள் இணைந்து ஜொலிக்கின்றன. ஒன்று ஈஶ்வர அம்சம்; இன்னொன்று மஹாவிஷ்ணு அம்சம். அடுத்தது ஏழைகளுக்கு இரங்கும் லோகநாயகியான மகாதேவியாகிய தாயார் அம்சம்......" "......ஈஶ்வரனும் ஈஶ்வரியும், மஹாவிஷ்ணுவும் ஐக்கியமாக ஒருருவாக நின்று ஒரு மகாசக்தியாக இணைந்து இயங்குகின்றோம்......" "ஈஶ்வர அம்சமாக சூலமும் மஹாவிஷ்ணு அம்சமாக கதை-சங்கு-சக்கர அருளாயுதங்களும், சக்தி அம்சமாக கோரைப் பற்களும்-அருளாக்கினி ஜுவாலையும் பின்புறமாக ஒளிர்ந்து ஜொலிக்கின்றன" என்றெல்லாம் அபத்தமாக எழுதியிருக்கிறார். இவற்றை மறுத்து நாங்கள் எழுதிய கடிதத்தையும் பொருட்படுத்தவில்லை. இது போன்ற பிதற்றல்கள் இனிமேலாவது வெளிவராமலிருக்க என்ன செய்வது?*

ஸுதர்சனர் பதில் நான்காவது சதகம் 12, 16 கேள்விகளுக்கு பதிலெழுதும்போது இக்கட்டுரைத் தொடர் மிகவும் அப₃த்₃த₄மானது என்று காட்டப்பட்டுள்ளது. பாமரமக்கள் ஆத₄ாரமற்ற அடுக்குமொழிகளுக்கு மயங்குகிறவர்களாயிருக்கும்போது, பணத்துக்காக வெளிவரும் பொதுஜனப்பத்திரிகை

களில் இத்தகைய விஷயங்களைத் தான் நாம் எதிர்பார்க்கலாம். இக்கட்டுரைத் தொடரில் ஏராளமான அபத்தங்கள் உள்ளன. இதை ரஸிப்பதற்கு லக்ஷக்கணக்கான மக்கள் காத்திருக்கின்றனர். ஆகையால் இவர்கள் இத்தகைய விஷயங்களை வெளியிடாமலிருக்கச் செய்ய நம்மால் இயலாது. ஆயினும் நேரம் இருப்பவர்கள் மறுப்பெழுதிக் கண்டிப்பதன்மூலம் அவர்களுடைய மனஸ்ஸாக்ஷிக்கு (அப்படி ஒன்று இருந்தால்) சவுக்கடி கொடுக்கலாம். நாமும் அதையே செய்கிறோம்.

R. தருமன், ஆசிரியர், மதகடிப்பட்டு, பாண்டி.

*29. சென்ற மே 9, 10, 11 ஆகிய தினங்களில் புதுவை கம்பன் கலையரங்கில் நடந்த கம்பன் விழாவில் மாண்புமிகு ம. பொ. சி. அவர்கள் பேசுகையில் "ராவணன் சீதையைத் தூக்கிச் சென்றபின் ராமன் புலம்போ புலம்பு என்று புலம்பிக் கொண்டிருக்கையில் இளையபெருமாள் 'என்ன இது. சிவபூஜை செய்யும் வேளை வந்துற்றும் அதையும் மறந்து புலம்புகிறாயே' என்றார்" என்று உரையாற்றினார். இப்படி எந்த ராமாயணத்திலாவது உண்டா?*

வால்மீகி ராமாயணத்திலும், கம்பராமாயணத்திலும் அப்படி இல்லை. ராமன் திருமாலைப் பூஜிப்பவனாக இவற்றில் கூறப்பட்டுள்ளானேயொழிய, சிவபூஜை செய்தவனாக எங்கும் காட்டப்படவில்லை. அபிமானத்தாலே ஆதாரமற்ற பொய்களைக் கூறுபவர் பட்டியலில் ம. பொ. சிவஞான கிராமணி அவர்களும் சேர்ந்து விட்டது மிகவும் வியப்பையளிக்கின்றது. அரசியல்வாதிகளுக்குப் பொய் தம்மையும் அறியாமல் வந்து விடும்போலும்!

மேஜர்தாசன், ஈரோடு-10.

*30. பம்பாயில் இருந்து வெளிவரும் "பவன்ஸ் ஜர்னல்" பத்திரிகை நிருபர் காஞ்சி காமகோடி புதுப்பெரியவரிடம் "திருமணத்திற்கு முன் ஜாதகப் பொருத்தம் பார்ப்பது தேவையா?" என்று கேட்ட கேள்விக்கு "பொதுவாக ஆணும் பெண்ணும் வெவ்வேறு கோத்திரத்தைச் சேர்ந்தவர்களாக இருக்கிறார்களா என்று பார்ப்பது மட்டும் போதும். மற்ற பொருத்தங்கள் சாஸ்திர அடிப்படையில் ஏற்பட்டவை அல்ல. அவற்றைப் புறக்கணித்து விடலாம். சாங்கோபாங்கமாக*

*ஜாதகம் பார்த்துக்கொண்டிருப்பது அனுவசியம்'' என்று கூறி யிருக்கிறார். இதுபற்றித் தங்கள் கருத்தென்ன?*

ஜ்யோதிஷம் என்பது வேத₃ாங்க₃ங்களில் ஒன்று. அது விவாஹத்தில் பொருத்தம் பார்ப்பதற்கே இக்காலத்தில் மிகவும் பயன்படுகிறது. ராமன் ஜாதகக்₃ரஹ அமைப்புகளை வால்மீகி கூறியிருக்கிறார். சாஸ்த்ர வசனங்களைக்காட்டி, அதற்குப் பலன்கள் உரைகளில் விவரிக்கப்பட்டுள்ளன. அந்த ஶாஸ்த்ர அடிப்படையிலேயே விவாஹத்தில் ஆண்பெண் ஜாதகங்க ளுக்குப் பொருத்தம் பார்க்கப்படுகிறது. இப்படியிருக்க, நம் நாட்டுப் பத்திரிகைகளால் நடமாடும் தெய்வமாகப் பிரசாரம் செய்யப்பட்டுவரும் ஒரு பீடாதிபதி விவாஹத்தின்போது வேத₃ாங்க₃த்தையே புறக்கணித்துவிடலாம் என்றுஎழுதுவது மிகவும் கண்டிக்கத்தக்கது.

G தோதாத்ரி, சென்னை-27. (கேள்விகள் 31, 32, 33)

*31. லோகாயத மனப்பான்மை வளருவதும், எல்லா மதங்களும் நலிவடைவதும் பொதுவாக இன்றுள்ள நிலைமை. ஆனால் நம் புண்ணிய பூமியாம் பாரததேசத்தை நோக்குங்கால் நலிவது இந்து மதம்; வளருவது கிறிஸ்தவ மதம். இ:்து ஏன்? இதற்குப் பரிஹாரம் என்ன ?*

இந்துமதம் என்பது ஒரு மதமல்ல. மிகவும் வேறுபட்ட கொள்கைகளையுடைய சைவம், அத்₃வைதம், த்₃வைதம், விஶிஷ்டாத்₃வைதம் முதலான பல மதங்களின் கூட்டமே இந்துமதம் என்று அழைக்கப்படுகிறது. வேத₃த்தை ப்ரமாண மாக ஒப்புக்கொள்வது, கர்மத்தினால் ஏற்படும் கணக்கற்ற பிறவிகளை ஒப்புக்கொள்வது ஆகியவை இம்மதங்களுக்குப் பொதுவான அம்சம். ஆயினும், தத்வ ஹித புருஷார்த்த₂க் கொள்கைகளில் ஒன்றுக்கொன்று மிகவும் வேறுபட்டு நிற்பவை இம்மதங்கள். இவற்றில் ஒவ்வொரு மதமும் தன்னையே வைதி₃கமதமாகச் சொல்லிக்கொள்கிறது. ஒன்றைக் கண்டித்தாலொழிய மற்றொரு மதம் நிலைநிற்காது என்னும் நிலையும் இவற்றினிடையே உள்ளது. இந்து மதம் என்னும் புதுப்பெயர் மேல்நாட்டாரால் இவற்றுக்கு வைக்கப்பட்டது. அதைப் பற்றிக்கொண்டு இந்துமதம் ஒரேமதம் என்னும் பொய்த்தோற்றம் உண்டாக்கப்பட்டிருக்கிறது. இது வளர

வேண்டுமென்றால் சைவமும், அத்$_3$வைதமும், த்$_3$வைதமும், வி*ஶி*ஷ்டாத்$_3$வைதமும் தனித்தனியே வளரவேண்டும். அதற்கு நம்நாட்டு அரசியல்வாதிகளும், பொதுஜனப் பத்திரிகைகளும், நாட்டில் பெரும்பான்மையினராயிருக்கும் சைவாத்$_3$வைதிகளும் இடங்கொடுக்கமாட்டார்கள். இவர்கள் 'எம்மதமும் சம்மதம் என்பதுதான் இந்துமதம்' என்று ஆக்கிவிட்டார்கள். இத்தகைய மதத்தில் உறுதி எப்படியிருக்கும்? கிறிஸ்தவர்களோவெனில் "தம் மதத்தைப் பின்பற்றினவனுக்கே மோக்ஷம் கிடைக்கும்; பாவிகளான மற்றவர்களுக்குக் கிடைக்காது" என்று உறுதியாக நம்பி வலிதாகப் பிரசாரம் செய்கிறார்கள். பள்ளிக்கூடங்கள், ஆஸ்பத்திரிகள் முதலான பொதுஜனத் தொண்டுகளையும் செய்து, இவற்றை மதமாற்றத்திற்கு ஸாதனமாகப் பயன்படுத்துகிறார்கள். இந்நிலையில் இந்துமதம் என்னும் போலிப் பெயரைப்பெற்ற மதக்கூட்டம் அழிவதும், கிறிஸ்தவமும் இஸ்லாமும் வளருவதும் தவிர்க்கமுடியாததாகும். இதை இந்துக்கள் அனைவரும் உணரவேண்டும். குறிப்பாக சைவ அத்$_3$வைத மதத்தலைவர்களும், அவர்களால் நடத்தப்படும் பொதுஜனப் பத்திரிகை நிர்வாகிகளும் புரிந்துகொள்ள வேண்டும். இப்பத்திரிகைகளில் சைவத்துக்கும், அத்$_3$வைதத்துக்கும்—குறிப்பாக, காமகோடி பீடாதி$_4$பதிக்கும் அளிக்கப்படும் முக்கியத்துவம் நீங்கி, த்$_3$வைதத்துக்கும், வி*ஶி*ஷ்டாத்$_3$வைதத்துக்கும் அந்த மதங்களைச் சேர்ந்த மடா$_2$தி$_4$பதிகளுக்கும் இடமளிக்கப்படவேண்டும். இந்த நான்கு மதத்தலைவர்களும் தத்தமக்கேயுரிய பத்திரிகைகளிலும், கூட்டங்களிலும் தமது மதமே உண்மையான வைதி$_3$கமதம் என்று தத்தம் மதத்தைச் சேர்ந்தவர்களுக்கு எடுத்துச்சொன்னபோதிலும், பொதுமேடைகளிலும், பொதுஜனப்பத்திரிகைகளிலும் சகிப்புத்தன்மையோடு வேத$_3$*ஶா*ஸ்த்ர ப்ரசாரம் வலிவடைவதில் ஒத்துழைக்க வேண்டும். எல்லோரும் ஒன்று சேர்ந்து, பெரிய ஸ்தாபனங்கள் அமைத்து, பாவைமாநாடுகள் போன்ற ஒருவரையொருவர் விழுங்கப்பார்க்கும் முயற்சிகளைச் செய்யாமல், அந்த நான்கு மதங்களையும் அந்தந்த மதங்களைச் சேர்ந்தவர்கள் உறுதியாகப் பின்பற்றுவதற்குரிய காரியங்களைச் செய்யவேண்டும். பள்ளிக்கூடங்கள், கல்லூரிகள் முதலானவற்றை ஏற்படுத்தி, அந்தந்த மதக்குறிகளோடு மாணவர்கள் பள்ளிக்கு வரவேண்டும்

என்னும் நியமத்தைத் துணிவுடன் அமலாக்கவேண்டும். கிறிஸ்தவர்கள் பைபிள் வகுப்புகளை நடத்துவதுபோல், இந்தக் கல்விக்கூடங்களில் விசிஷ்டாத்₃வைத வைஷ்ணவர்களுக்கு திவ்யப்ரபந்த வகுப்புகளும், சைவர்களுக்குத் தேவார வகுப்புகளும், அத்₃வைதிகளுக்கும், த்₃வைதிகளுக்கும் அவர்களது மதக்கொள்கை விளக்க வகுப்புகளும் நடத்தப்படவேண்டும். கிறிஸ்தவர்களைப்போல் ஆஸ்பத்திரிகள் முதலான பொதுநலத் தொண்டிலும் ஈடுபடவேண்டும். இந்து மதத்தைச் சேர்ந்த எல்லா மதத் தலைவர்களும் கூடி, கோடிக்கணக்கான ரூபாய்கள் திரட்டி, இக்காரியங்களைத் தங்களுக்கிடையே பாரபக்ஷமில்லாமல் நடத்தினால் 'இந்து' மதமும் வளரும்.

*32. த்வைத, அத்வைத, விசிஷ்டாத்வைத சித்தாந்தங்கள் எல்லாம் பழம்பெரும் மதமான இந்து மதத்தின் அங்கங்களே. எல்லா அங்கங்களையும் கொண்ட முழுமையே நலிவடையும்போது, ஓர் குறிப்பிட்ட அங்கம் மட்டும் தனியாக பலமடைய முடியுமா? வளரமுடியுமா?*

இம்மூன்று மதங்களும் ஒரு மதத்தின் அங்க₃ங்களே என்பது பொய்த்தோற்றம். ஒரு குறிப்பிட்ட தத்வ ஹித புருஷார்த்த₂க்கொள்கைகளை உடையதே ஒரு மதமாகும். 26 வது கேள்வி பதிலில் காட்டப்பட்டபடி மிகவும் வேறுபட்ட தத்வஹிதபுருஷார்த்த₂க் கொள்கைகளையுடைய அத்₃வைதமும், விசிஷ்டாத்₃வைதமும் எப்படி ஒரு மதமாகமுடியும்? வேத₃மாகிற ப்ரமாணம் ஒன்று, சில கொள்கைகள் ஒன்று என்பது தவிர இவற்றினிடையே வேற்றுமைகளன்றோ மிகுதியாக உள்ளன. ஆகையால் இவையனைத்தும் வளரவேண்டுமெனில், சென்ற பதிலில் காட்டப்பட்டதே வழியாகும். அதற்கு அனைவரும் முன்வராவிடில், விசிஷ்டாத்₃வைத வைஷ்ணவர்களான நாம் நமது மதத்தை வளர்த்துக்கொள்ளப் பாடுபடுவதில் தவறில்லை.

*33. வருங்காலத்தில் சித்தாந்தத்தை வளர்ப்பவர்கள் இன்றுள்ள இளைஞர்களே. அவர்கள் இன்று பசிப்பிணியை ஒட்டப் பரிதபிக்கும் நிலையிலிருக்கிறார்கள். பசிப்பிணிக்கு அணைகோலினாலல்லவோ மற்ற பிணிக்கு மனம் மருந்துதேடும். இந்த இளைஞர்களின் ஆர்வம், தன்னலமற்ற சேவை-கட்டுக்கடங்காதது.*

*இதைக் காலதேசவர்த்தமானத்தை ஒட்டி நடத்திச்சென்றால் எந்த சமூகமும் வளரும். ஆகையால், மருத்துவமனைகள் கல்வி ஸ்தாபனங்கள் முதலானவற்றை நடத்துவது, கோவில் குளங்களைச் சீரமைத்துப் பாதுகாப்பது முதலான குறிக்கோள்களை முன்னே வைத்து, அவரவரது சக்திக்கு ஏற்றபடி மாதம் ரூ. 1க்குக் குறையாமல் சந்தா செலுத்தும் அங்கத்தினரைக்கொண்ட சிஷ்ய சபைகளை மடாதிபதிகளும், ஆசார்யபுருஷர்களும் ஆங்காங்கே மிகப் பரவலாக நிறுவி, இளைஞர்களையும் அவற்றில் ஈடுபடுத்தி, நல்லமுறையில் நடத்தினால் வைணவம் வளரும் என்று எண்ணுகிறேன். இதுபற்றித் தங்கள் கருத்து என்ன?*

'விண்ணுளாரிலும் சீரியர்படை' என்னும் ஒரு ஸ்தாபனத்தைச் சென்ற வருஷம் நாம் நிறுவி, ஒவ்வொருவரும் ஆயுளுக்கு ஒருமுறை ஒரு ரூபாய்க்குக் குறையாமல் செலுத்தினால்போதும் என்று அறிவித்து, தொகை செலுத்தியவரின் பெயரையும், ஊரையும் ஸுதர்சனத்தில் அச்சிட்டும் வருகிறோம். இதுவரையில் சுமார் ரூ. 5000க்குமேல் சேர்ந்திருக்கிறது. மட₂ாதி₄பதிகளும், ஆசார்யபுருஷர்களும் வைணவம் வளரவேண்டும் என்னும் கருத்துடன் இத்தகைய சபைகளை நிறுவி, வேலையில்லாமலிருக்கும் ஊக்கமுடைய இளைஞர்களையும் அதற்குப் பயன்படுத்தினால், லக்ஷக்கணக்கில் நிதிதிரட்டி, பல நற்காரியங்களைச் சாதிக்கலாம். ஆனால் கிறிஸ்தவ மதத்தைப்போல் 'மதம் வளரவேண்டும்' என்னும் missionary spirit - உடைய (ஸம்ப்ரதாய ஊற்றமுடைய) மதத்தலைவர்கள் நம் சமூகத்தில் இல்லையே. தங்களைப்போலுள்ள பலர் முயன்று, மட₂ாதி₄பதிகளையும், ஆசார்யபுருஷர்களையும், வித்₃வான்களையும், த₄னிகர்களையும் சந்தித்து, இப்படிப்பட்ட ஒன்று அல்லது பல ஸ்த₂ாபனங்களை ஏற்படுத்தினால் வைஷ்ணவம் வளருவதற்கு அடிகோலியதாகும். இந்த மிஷனரி ஸ்பிரிட் உடையவர்கள் கிறிஸ்தவ மதத்தில் ஆயிரக்கணக்கில் உள்ளதாலேயே அம்மதம் வளருகிறது. அத்தகையவர்கள் மிகுதியாக இல்லாமையாலேயே இந்து மதத்தைச் சேர்ந்த எல்லா மதங்களும் நலிவடைகின்றன. வைஷ்ணவம் ஒன்றிலாவது இந்நிலை மாறுவதற்கு, சுயநலத்தை உதறி மிஷனரி ஸ்பிரிட்டுடன் நூறு பேராவது செயல்பட்டால் வைஷ்ணவம் வளரும் என்பது உறுதி.

S. கிருஷ்ணமாச்சாரி, ஸ்ரீரங்கம்.

*34. (விசிட்டர்) 15—6—80 இதழில் "மும்மூர்த்திகளில் ஒருவரான சிவன் நடனமாடிக் கொண்டிருக்கும்போது விஷ்ணு அசட்டையாகப் படுத்துக்கொண்டிருப்பது அகம்பாவமாகத் தானிருக்கிறது" என்றும், "குலோத்துங்கன் பெருமாளைக் கடலில் கொண்டுபோய் எறிந்தது வைணவ த்வேஷத்தால் இருக்கமுடியாது" என்றும் எழுதி ப்ரகவதபசாரமும், வைண வர்களைக் குறித்துப் பல பொய்களையும், அவதூறுகளையும் எழுதி, பொறுக்கமுடியாத பாகவதாபசாரங்களையும், அஸஹ்யாபசாரங்களையும் செய்ததாலே, அத்தகைய அபசாரங்களைச் செய்த சிசுபாலன், காசிராஜன், நரகாசுரன், கஜேந்த்ரனைப் பிடித்த முதலை, இராவணன் பாட்டனான மாலி முதலானவர் களைப்போலே ஸுதர்சன ப்ரயோகத்தைப் பெற்று விசிட்டர் பத்திரிகை உடனே அழிந்துவிட்ட ஆச்சர்யத்தைப் பார்த்தீர்களா? (இந்த வார 'சாவி' இதழில் 'விசிட்டர்' பத்திரிகை நின்றுவிட்டது என்னும் செய்தி வந்திருக்கிறது.) சமயசாதனம், மித்திரன், கல்கி முதலான பத்திரிகைகள் இத்தகைய அபசாரங்கள் செய்து, ஸுதர்சன ப்ரயோகம் பெற்று தண்டிக்கப்பட்டதுபோலே, விசிட்டர் பத்திரிகையும் தண்டிக்கப் பட்டுவிட்டது என்று வெளிப்படையாக விளங்குகிறது. இனியாவது இப்பத்திரிகைகள் இந்த விஷ்ணு வைஷ்ணவ த்வேஷ ப்ரசாரத்தை விடவேண்டுமென்று எம்பெருமானைப் பிரார்த்திக்க வேண்டுகிறேன்.*

பரமஸாத்விக ஸ்ரீவைஷ்ணவர்களான நாம் "எல்லோருக்கும் நல்லது உண்டாகவேண்டும்; கடல்சூழ்ந்த மண்ணுலகம் வாழ வேண்டும்" என்றே எப்போதும் பிரார்த்தித்துக் கொண்டிருக் கிறோம். ஆனால் இந்த நல்ல எண்ணம் அவைஷ்ணவர் மலிந்த நம்நாட்டுப் பொதுஜனப் பத்திரிகைகளில் பெரும்பாலானவற் றுக்கு இல்லை. "நாராயணன் நான்முகனைப் படைத்தான்" என்றும், "நான்முகன் சங்கரனைப் படைத்தான்" என்றும் வேதங்களும், ஸ்ம்ருதிகளும், இதிஹாஸங்களும், ஸாத்விக புராணங்களும், பண்டைத் தமிழ்நூல்களும் தெளிவாகத் தெரிவிக்கின்றன. இதன்படி நாராயணனுக்கு சிவன் பேரன்

மூறையாகவேண்டும். பேரனை சிவன் கால்மாட்டில் கீழே நின்று கூத்தாடுவதைப் பார்த்து அகமகிழ்ந்து பிதாமஹனை நாராயணன் படுத்துக்கொண்டிருக்கிறன் என்றால் அதில் அஹம் பாவம் எப்படிவரும்? இதை அஹம்பாவம் என்று எழுதுவ தன்றோ அஹம்பாவத்தின் உச்சநிலை. பெருமாளை இடித்துக் கடலில் எறிந்தது த்₃வேஷமாகாது என்று எழுதும் இவர்கள் எந்தப் பாவத்தைச் செய்யவும் அஞ்சார்கள். இத்தகைய பொறுக்கவொண்ணத பாவத்திற்குப் ப₂லன் கிடைத்த பின் பாவது இவர்கள் விஷ்ணு வைஷ்ணவ த்₃வேஷப்ரசாரத்தில் ஈடுபடாமல் இருப்பார்கள் என்று நம்புகிறோம். ஆதிபரம் பொருளாம் நாரணன் அனைவர்க்கும் நல்லறிவை அளிப்பானக. [சென்ற இதழில் விசிட்டர் பத்திரிகையைக்குறித்து நாம் கேட்ட கேள்விகள் இந்த ஸுதர்சனர் பதில் நாலாவது சதகத்திற்கு அநுபந்தமாக இணைக்கப்பட்டுள்ளன. இவற் றுக்கு எவர் பதிலளித்தாலும் அதை விமர்சித்து, நடுநிலையா ளர்களின் தீர்ப்புக்குவிட எப்போதும் ஸித்₃த₄மாயிருக்கிறோம்.]

S. ஸௌம்யநாராயணன், திருவெள்ளறை (35, 36 கேள்விகள்.)

*35. 29 — 6 — 80 தினமணிச் சுடரில் ''அம்மங்குடி துர்க்கை'' என்னும் கட்டுரையில் ''அபஸ்மார புருஷனை மிதித்து தாண்டவமாடிய சிவனையே சாய்த்து மார்பில் சதி நடனம் புரிகின்றள் என்றால் சக்தியின்றி சிவம் வெறும் சவம் என்பதைப் புலப்படுத்தத்தானே? கொற்றம் என்றால் வெற்றி. அதற்குரியவள் கொற்றவை. அவள் வழிபாடு தமிழ் இலக்கியங்களான குறுந்தொகை, சிலப்பதிகாரங்களில் மலிந் துள்ளன. கி.பி. 4-ம் நூற்றண்டில் சாக்த வழிபாடு பஞ்ச மகாரம் என்ற வாம மார்க்கத்தில் சிக்கி நெறி தவறியபோது, பின்னர் சங்கரர் அக்கோட்பாடுகளைக் கண்டித்து தக்ஷிணசார்ய மார்க்கத்தை ஏற்படுத்தி, காளி வழிபாடு தக்க முறையில் தென்னட்டில் துளிர்க்கச் செய்தார். அப்படி துளிர்த்த இடத் தில் ஒன்று அம்மங்குடி'' என்று எழுதப்பட்டுள்ளது. இது சிவனுக்கோ சதிக்கோ பெருமை அளிக்குமா? ஆதிசங்கரர் சாக்தமதத்தை ஏற்படுத்தித் துளிர்க்கச் செய்தார் என்பதற்கு ஆதாரம் ஏதாவது உண்டா?*

சிவனைச் சவமாக்கிச் சாய்த்து சதி சதிராடுகிறாள் என்று சொல்லுவது சிவனுக்கும் பெருமையல்ல. சதிக்கும் பெருமையல்ல. சங்ககாலத்துக்குப் பிறகு புனையப்பெற்ற இத்தகைய கதைகளைக் கட்டியழும் சாக்தமதத்திற்கும் பெருமையல்ல. இக்கதையைக் கேட்கும் பெண்கள் ''நம் தெய்வமே இப்படிப் புருஷனை ஏறி மிதிக்கும்போது, நாம் மிதித்தாலென்ன?'' என்னும் முடிவுக்கு வரலாம். சங்க இலக்கியங்களில் சக்தி வழிபாடு காணப்படுகிறதேயொழிய, கொற்றவையாகிற காளியைப் பரம்பொருளாக எங்குமே கூறவில்லை. சிவனைச் சக்தி ஏறி மிதித்தாள் என்பதுபோன்ற அபத்தக்கதைகளும் அவற்றில் இல்லை. திருமால் ஒருவனையே சங்கஇலக்கியங்கள் பரம்பொருளாகப் பறைசாற்றுகின்றன. ஆதிசங்கரரின் உண்மையான நூல்களாகிற பா₄ஷ்யங்களிலிருந்து அவர் விஷ்ணு ஒருவனையே ஸகு₃ணப்₃ரஹ்மமாகக் கொண்டவர் என்றும், சிவன், சக்தி முதலான மற்ற தெய்வங்களை ஸகு₃ணப்₃ரஹ்மமாகக் கூறும் மற்ற மதங்களைக் கண்டித்தவர் என்றும் தெளிவாக விளங்குகிறது. நம்நாட்டுப் பொது ஜனப் பத்திரிகைகளில் கட்டுரை எழுதுபவர்கள் இவ்வுண்மைகளைக் கண்ணிருந்தும் காணமாட்டாதவர்களாயிருக்கிறார்கள். ஆதிசங்கரர் வழிவந்தவர்களாகத் தங்களைச் சொல்லிக்கொள்கிறவர்களே இன்றும் பஞ்ச மகாரங்களில் சிக்கித் திகைக்கும்போது, தங்களுடைய கூடஸ்த₂ரான ஆதிசங்கரர் அவற்றைக் கண்டித்துவிட்டார் என்று எழுதுவது எப்படிப் பொருந்தும்? பொய்யைப் பலர் பல்லாயிரம் தடவை எழுதினால் அது மெய்யாகிவிடும் என்னும் எண்ணத்தில் இப்படி ஓயாமல் எழுதுகிறார்கள். ஆதிசங்கரர் பெயரில் பிற்காலத்தில் புனையப்பெற்ற துதிநூல்களையும், பொய்கள் நிறைந்த சங்கரவிஜய நூல்களையும் தவிர வேறு ப்ராசீன நூல்களில் இவர்கள் கூற்றுக்கு எந்த ஆதா₄ரமும் கிடையாது.

*36. 6—7—80 கல்கியில் 'திகைப்பு' என்னும் தலைப்பில் (பக்கம் 18) ஆதிசங்கரர் ஒரு கள்ளுக்கடை முதலாளி கொடுத்த கள்ளைப் பருகினார் என்று எழுதப்பட்டுள்ளது. இஃது உண்மையாயிருக்கமுடியுமா?*

கீ₃தை 3-21ல் "நடத்தையால் உயர்ந்தவன் எதைச் செய்கிருனே அதையே மற்றவர்களும் பின்பற்றுகிருர்கள். ஆகையால் அத்தகையவன் பிறரைத் தவ்ருன வழியில் செலுத்தும் காரியங்களைச் செய்யக்கூடாது" என்று கீ₃தாசார்யன் அருளியிருக்கிருன். அதற்கு இப்படியே ஆதி₃சங்கரர் பா₄ஷ்யமிட்டிருக்கிருர். ஆகையால் அவர் பஞ்சமஹாபாதகங்களில் ஒன்ருன கள்குடித்தலைச் செய்திருக்கவேமாட்டார். அவருடைய ப₄க்தர்கள் என்று தங்களைச் சொல்லிக்கொள்கிறவர்கள், மிகப் பிற்காலத்தில் எழுந்த நூல்களில் அவர் கள்ளைக் குடித்தார் என்றும், பரதா₃ரக₃மனம் (பிறன் மனைவியைப் புணர்தல்) செய்தார் என்றும் எழுதிவைத்திருப்பதைப் பிரசாரம் செய்வது அவருக்குச் செய்யும் பெரிய த்₃ரோஹமாகும். பஞ்ச மகாரங்களை இன்றும் பின்பற்றும் சாக்தமதத்தை அவர் ஸ்தா₂பித்தார் என்று அபாண்டமாக எழுதுகிறவர்கள் நாம் எவ்வளவு எடுத்துச் சொன்னுலும் இத்தகைய பொய்க்கதைகளைப் பிரசாரம் செய்துகொண்டுதானிருப்பார்கள்.

V. *ஸ்ரீநிவாஸன், திருச்சி-17.*

*37. அமுதசுரபி ஜூலை இதழில் பக்கம் 65ல் 'முரண்பாடில்லை' என்னும் தலைப்பில் "எல்லா மதங்களும் மனிதனை உயர்த்தும் படிக்கட்டுகள் போன்றவை. அவை ஒன்றுக்கொன்று உபகாரமாக இருக்குமே தவிர சண்டை போட ஏற்பட்டதில்லை. மத நூல்கள் அடிப்படையில் வேறுபாடு எதுவுமில்லை. அவற்றை வியாக்கியானம் செய்வதில்தான் முரண்பாடு ஏற்படுகிறது. நெற்றியில் விபூதி, திருமண், திலகம் இடுபவர் எல்லாம் பந்துக்கள் என்று ஆதிசங்கரர் கூறுகிருர்." என்று காமகோடி சிறிய பீடாதிபதி எழுதியிருக்கிருர். இதை விமர்சிக்க வேண்டுகிறேன்.*

இதில் முதல் வாக்கியம் சரியானது. ஆனுல் மேல் வாக்கியங்கள் இதோடு முரண்படுகின்றன. 'படிக்கட்டுகள்' என்ருலே சில படிக்கட்டுகள் கீழேயும், சில மேலேயும். ஒரு படிக்கட்டு மிக உயரத்திலும் இருக்கும் என விளங்குகிறது. மிக உயர்ந்த படிக்கட்டில் ஏறினவன்தான் குறிக்கோளை

உடனே அடையமுடியும். இப்படிக்கட்டிலிருப்பவர்கள் படிப்படியாக மிக உயர்ந்த படிக்கட்டுவரை ஏறித்தான் குறிக்கோளை அடையமுடியும். இவ்வண்ணமாகப் படிக்கட்டு திருஷ்டாந்தத்திலிருந்தே நேரே தலைசிறந்த பயனை அடைவிப்பது ஒரு மதமே என்றும், மற்ற மதங்கள் அம்மதத்தை அடைவிக்கும் வழிகளே என்றும் விளங்குகிறது. நேரே தலை சிறந்த பயனை அடைவிக்கும் மதம் தங்களுடையதே என்றே எல்லா மதத்தவர்களும் கூறுகிறார்கள். இதை நிலைநாட்டுவதற்கு அவர்கள் மற்ற மதங்களில் கூறப்பட்டிருக்கும் கொள்கைகள் தவறு என்று நிரூபிக்கவும் வேண்டியிருக்கிறது. "பரம்பொருள் கு₃ணமுள்ளது; உலகம் மெய்யானது" என்று கூறும் மதங்கள் தவறு என்று நிரூபித்தால்தான் அத்₃வைதம் ஸித்₃தி₄க்கும். அதேபோல் "ப்₃ரஹ்மம் கு₃ணமற்றது, *ஶரீர* மற்றது. உலகம் பொய்யானது" என்று கூறும் அத்₃வைதம் தவறு என்று நிரூபித்தால்தான் வி*ஶி*ஷ்டாத்₃வைதம் ஸித்₃தி₄க்கும். இது பிரமாணங்களைக்கொண்டு செய்யப்படும் ஆராய்ச்சியேயொழிய தெருச்சண்டையல்ல. ஆதி₃சங்கரரும் தம் பா₄ஷ்யங்களில் பல மதங்களைக் க₂ண்டி₃த்திருக்கிறார். 'மதநூல்கள் அடிப்படையில் வேறுபாடு எதுவுமில்லை' என்று சிறிய பீடாதி₄பதி எழுதுவதிலிருந்து அவர் ஆதிசங்கரரின் பா₄ஷ்யங்களைப் படித்தவரல்லர் என்று விளங்குகிறது. நெற்றியில் விபூதி என்று தொடங்கி எழுதியிருக்கும் கடைசி வாக்கியமும், இவர் ஆதிசங்கரர் பெயரில் பிற்காலத்தில் ஏறிடப்பெற்ற துதிநூல்களையே படித்திருக்கிறார் என்றும், "நாராயணனே அனைத்துலகையும் படைத்தளித்தழிக்கும் ஸகு₃ண ப்₃ரஹ்மம்; மற்ற தெய்வங்கள் அவனால் படைத்தளித்தழிக்கப்படும் ஜீவர்களே. அவனை உபாஸித்தால்தான் மோக்ஷம் கிடைக்கும்" என்று தெளிவாகக் காட்டும் அவரது உபநிஷத் ப்₃ரஹ்மஸூத்ர கீ₃தா பா₄ஷ்யங்களைக் கற்கவில்லை என்றும் தெளிவாகக் காட்டுகிறது. ச்ருங்கேரி பீடா₂தி₄பதியைப்போல் பா₄ஷ்யங்களைக் கற்றுணர்ந்தபின்பு இவருடைய அருள்மொழிகளை அச்சிட்டால்தான் இவருக்குப் பெருமை என்பதை நம் நாட்டுப் பத்திரிகைகள் உணரமாட்டா.

S. சங்கரன் B. E., ப்ளாட் 7A, மாளவியா அவிந்யூ,
சாஸ்த்ரிநகர், சென்னை-41.

38. I (ஓர் அத்வைத ஸந்யாசி) விஜயயாத்திரை என்று நடந்துபோவதாகப் பேர்வைத்துக்கொண்டு கிராமப்புற எல்லை தாண்டியதும் சைக்கிள் ரிக்ஷாவில் போவதாகச் சொல்லப்படுகிறது. இது உண்மை என்றால் சன்யாசி பொய் சொல்லலாமா?
II வேதாந்தபடனம் இல்லாமல் வெட்டிப்பேச்சுப் பேசும் ஸன்யாசியை, பேபர் படிக்கும் ஸன்யாசியை "इन्द्रो यतीन् सालावृकेभ्यः प्रायच्छत्" என்று இந்திரன் செந்நாய்களால், (வேட்டைநாய்களால்) கடிக்கச் சொல்லுவதாக வேதம் கூறுகிறது. (இந்த ஸந்யாசி) வேதாந்த விசாரம் இல்லாமல்தான் இருக்கிறார் என்று சொல்லுகிறார்களே. இவருக்கும் வேதத்தில் கூறியபடி இந்திரன் தண்டனை கொடுப்பாரா?

பராபவாதமும் செய்வதற்காக ஸுதர்சனர்பதில் ஏற்பட்டதல்ல. அதனாலேயே கேள்வியில் ஸந்யாஸியின் பெயர்கொடுக்கப்பட்டிருந்தபோதிலும் நாம் எடுத்துவிட்டோம். இக்காலத்தில் பெரும்பாலானவர்கள் தத்தம் வர்ணாச்ரமதர்மங்களுக்குரிய முறையில் நடப்பதில்லை. ஒரு ஸந்யாஸி அப்படியிருந்தால் அதைத் திருத்தவேண்டியது அவரது சிஷ்யர்களின் பொறுப்பு. பீடாதிபதிகள், உபந்யாஸகர்கள் முதலான பிரமுகர்களின் பேச்சுக்களிலும், எழுத்துக்களிலும் பொருந்தாமைகளிருந்தால், அதனால் உலகம் மயங்கக்கூடுமானால், அத்தகைய பேச்சுக்களையும், எழுத்துக்களையுமே நாம் ஸுதர்சனர்பதிலில் விமர்சிப்போம். ஆகையால் இத்தகைய கேள்விகளை எவரும் கேட்க வேண்டாமென்று கேட்டுக்கொள்கிறோம்.

S. வரதராஜன், ஸ்ரீரங்கம்.

39. ரௌத்ரி ஆனி 2 பாலஜோதிடத்தில் தன்னை வைஷ்ணவனாக வர்ணித்துக்கொண்டிருக்கும் ஒருவர் சிவாபிமானத்தை மிகமிகக் காட்டி எழுதியிருக்கும் 'மஹேசுவரன்' என்னும் கட்டுரையில் நாபாகன் என்பவனைப்பற்றிய ஒரு கதையை எழுதி "மேலும், இந்த வரலாற்றைக் காலையிலும் மாலையிலும் நினைப்பவர்களின் வாழ்வு வளம்பெறுவதுடன், அவர்கள் பிறப்பு இறப்பு அற்ற பெருவீடு பெறுவர் என்றும் ருத்ரன் வரமளித்தான். இந்த நிகழ்ச்சியை முடிக்கும் வேதமந்திரம் மஹேசுவரன்

*என்பதால் ருத்ரனால் மட்டுமே இங்ஙனம் செய்யமுடியும் என்று கூறி கதைமுடிகிறது'' என்று எழுதியிருக்கிறார். இப்படி வேதத்தில் இருக்கிறதா ?*

கிருஷ்ண யஜுர்வேத₃ம் மூன்றும் காண்ட₃ம் முதல் ப்ரஶ்நத்தில் நாப₄ாநேதி₃ஷ்ட₂னுடைய இக்கதை சொல்லப் பட்டுள்ளது. அதில் 'மஹேசுவரன் என்பதால் ருத்ரனால் மட்டுமே இங்ஙனம் செய்யமுடியும்' என்னும் பொருளுள்ள வாக்கியமும் கிடையாது. இந்த வரலாற்றை நினைப்பவர் பெருவீடு பெறுவர் என்று ருத்₃ரன் வரமளித்ததாகவும் இல்லை. ''யாக₃த்தில் எல்லா தே₃வதைகளுக்கும் அளித்தபின்பு மிஞ்சி யிருக்கும் ஹவிஸ்ஸுக்களுக்குப் பஶுக்கள் என்று பெயர். அவை ருத்₃ரனைச் சேர்ந்தவை'' என்னுமிவ்வளவே இங்குள்ள வேத₃மந்திரங்களிலிருந்து தேறுகிறது. ஆறுவது காண்ட₃த்தில் இரண்டாவது ப்ரஶ்நத்தில் த்ரிபுரஸம்ஹாரத்தைப் பற்றிச் சொல்லும் அநுவாகத்தில் ''*ஸோப்₃ரவீத் வரம் வ்ருணை அஹமேவ பஶூநாமதி₄பதிரஸாநீதி*''என்று 'ருத்₃ரன் இந்த யஜ்ஞஶிஷ்டங் களாகிற பஶுக்களுக்குப் பதியாயிருக்கும் பெருமையை த்ரிபுரஸம்ஹாரம் செய்வதற்குக் கைக்கூலியாக தே₃வர்களிட மிருந்து வரம்வேண்டிப் பெற்றான்' எனக் கூறப்பட்டுள்ளது. பஶுபதியாயிருக்கும் பெருமையையே தே₃வர்களிடம் வரம் வேண்டிப் பெற்ற ருத்₃ரன், மற்றவர்களுக்குப் பெருவீட்டை வரமாகக் கொடுக்கமுடியுமா என்பதை நடுநிலையாளர்கள் சிந்திக்கவேண்டும். மிகுந்த சிவாபி₄மானத்தைக் காட்டும் இவர் தன்னை வைஷ்ணவன் என்று கூறிக்கொள்வதும் பொய்; இவர் வேதத்தில் சிவனின் பெருமையைக் கூறுவதாகச் சொல் லும் விஷயங்களும் பொய். வேதத்தில் இப்பகுதியில் சிவனின் தாழ்வு தேறுகிறதேயொழிய, பெருமை ஸித்₃தி₄க்கவில்லை.

S. வேங்கடம், சமயபுரம்.

*40. 15—7—80 துக்ளக்கில் சினிமா நடிகை ஜெயலலிதா காஞ்சீபுரம் யானை வழக்கை வியாஜமாகக்கொண்டு தென்கலை வடகலை வைஷ்ணவர்களைக் கேலி செய்திருப்பதைப் பார்த்தீர்களா?*

ஒவ்வொரு மதத்திலும் இத்தகைய உட்பூசல்கள் ஏராள மாக உள்ளன. கிறிஸ்தவர்களிடையே உட்பூசலால் மேல்

நாடுகளில் போர்களே நிகழ்ந்ததுண்டு. முஸ்லிம்களிடையே யும் ஷியா-சுன்னி தகராறு உண்டு. நம்நாட்டில், காமகோடி-சிருங்கேரி பக்தர்களிடையே உள்ள 'நாலு மடமா ஐந்து மடமா' தகராறுகள் சந்திசிரிக்கின்றன. சமீபத்தில் டில்லியில் ஓர் சாலைக்கு 'காமகோடி சங்கராசாரியர் சாலை' என்று பெயர் வைக் கப்பட்டதும், சிருங்கேரி பக்தர்கள் அதை ஆக்ஷேபித்ததும் 'விகடன்' இதுபற்றி ஓர் தலையங்கம் எழுதக் காரணமாயிற்று. இதையெல்லாம் பற்றி நம்நாட்டுப் பத்திரிகைகள் கேலிசெய்ய மாட்டார்கள். ஏனெனில்: அவர்களில் பெரும்பாலானவர்கள் காமகோடி சிஷ்யர்கள், பக்தர்கள். கிறிஸ்தவனையோ, முஸ்லிமையோ கேலி செய்தால் அவன் சீறி எழுவான். பத்திரிகை நடத்துவது கஷ்டமாகிவிடும். 'ஊருக்கு இளைத்த வன் பிள்ளையார்கோவில் ஆண்டி' என்பது பழமொழி. "ஊருக்கு இளைத்தவன் வைஷ்ணவன்' என்பது இன்று நம் நாட்டுப் பத்திரிகையாளர் கடைப்பிடிக்கும் நடைமுறை. ஒருசில நூற்றுண்டுகளாக வரலாறு காரணமாகத் தமிழ்நாட்டில் விஷ்ணுகோவில்களில் தென்கலை வடகலைப் பிரிவு ஏற்பட்டு விட்டது. அதில் உரிமைத் தகராறுகளும் தவிர்க்கமுடியாமல் ஏற்படுகின்றன. உரிமைத்தகராறுகளைத் தெருச்சண்டையாக்கா மல் நீதிமன்றங்களில் முறையிட்டுப் பரிஹாரம் காண்பதில் எந்தத் தவறுமில்லை. நம்நாட்டுப் பத்திரிகையாளர்களுக்கு இது தெரியும். இருந்தபோதிலும், "வீடு இரண்டுபட்டால் கூத்தாடிக்கு எளிது" என்னும் பழமொழிப்படி, வைஷ்ண வத்தையும், வைஷ்ணவர்களையும் இழிவுபடுத்துவதற்குச் சமயம் பார்த்துக்கொண்டிருக்கும் சைவாத்வைதிகளால் ஆளப்படும் நம் நாட்டுப் பத்திரிகைகள் இத்தகைய விஷயங்களைப் பயன் படுத்திக்கொள்கின்றன. காசுக்காக எந்தப்பெண்ணும் எந்த ஆணையும் கட்டிப்பிடித்துக் காமலீலைகள் புரிவதாக நடிக்க லாம் என்பது சினிமாக்காரர்களின் கொள்கை. சினிமாக்காரி களின் நிர்வாணப் படங்களை வெளியிட்டும், அவர்களைக் கொண்டு கதை கட்டுரைகள் எழுதச்செய்தும் பணம்பண்ணு வது அரசியல் பத்திரிகைகளின் கொள்கை. இவர்கள் தங்களைச் சீர்திருத்திக்கொள்ளாமல் மத விஷயங்களில் தலையிட்டுப் பிறர்க்கு உபதேசிப்பது மிகவும் முறையற்றது.

S. கோவிந்தாச்சாரி, தொட்டியம்.

*41.* (i)*ராமாநுஜவாணியில் 1980 ஜனவரி ஏப்ரல் இதழ்களில் "கிறிஸ்துவ மதத்தைப் பின்பற்றியே ராமாநுஜமதம் தோன்றி யிருக்கிறது" என்று ஒரு கிறிஸ்தவர் எழுதியிருப்பதை மறுத் திருப்பதையும், 7—8—80 குமுதத்தில் "கிறிஸ்துவுக்கும் கிருஷ்ணனுக்கும் ஒற்றுமை இருப்பதாக, காஞ்சிப் பெரியவர்கள் சொன்னதை நான் நம்புகிறேன்" என்று கண்ணதாசன் எழுதி யிருப்பதையும் விமர்சிக்கவேண்டுகிறேன்.* (ii) *மேற்படி குமுதம் கட்டுரையில் "பைபிளில் ஒரு வாக்கியத்தைப் படிக்கும்போது எனக்கு மயிர்க்கூச்செறிந்தது. அதாவது — 'உன் வாய்க்குள் போவது அசுத்தமாகப் போகட்டும். கவலை இல்லை. உன் வாயில் இருந்து வருவது சுத்தமாக இருக்கவேண்டும்'" என்று கண்ணதாசன் எழுதியிருக்கிறார். இதை நமது வைதிகமதம் ஒப்புக்கொள்கிறதா?*

*(i)* 'கிறிஸ்தவ மதத்தை ராமாநுஜர் பின்பற்றினர்' என்று எழுதுவது எடுத்துக் கழிக்கவும் தகுதியற்ற வாதம். சமீபத்தில் கணேசய்யர் என்னும் கயவருக்கு லக்ஷக்கணக்கில் பணம் கொடுத்துப் பொய் ரிகார்டுகளைத் தயார் செய்வித்து, "திருவள்ளுவர் கிறிஸ்தவரே, தமிழ்நாட்டுக் கோயில்களில் பல, கிறிஸ்தவ ஆலயங்களே" என்று ஸ்தாபிக்க முயன்ற சென்னை ஆர்ச்பிஷப் அருளப்பரின் செயல் போன்றது இது. ருக்₃வேத₃த்திலும், எல்லா வேத₃ங்களிலும் படிக்கப்படும் புருஷஸூக்தத்திலும் "விஷ்ணுவே பரம்பொருள், அவனே அனைத்துலகங்களையும் படைத்தளித்து அழிப்பவன், அனைத் தையும் ஶரீரமாகக் கொண்டவன், எவராலும் அறியவொண் ணுத பெருமைகளை உடையவன், அவதாரங்கள் எடுத்து உலகை ரக்ஷிப்பவன், பரமபத₃த்துக்கு அதி₄பதியாயிருப்ப வன், ஸ்ரீபூ₄மிநாயகன், அவன் ஒருவனே மோக்ஷமளிக்க வல்லவன்" என்று முழங்கப்பட்டுள்ளது. மற்ற பல வேத, உபநிஷத்₃ வாக்யங்களிலும் இவ்வண்ணமே கோ₄ஷிக்கப்பட் டுள்ளது. ஸ்ம்ருதிதிஹாஸ ஸாத்விக புராணங்களிலும் இவை விளக்கப்பட்டுள்ளன. இவை எல்லாம் கிறிஸ்து பிறப்பதற்குப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே பா₄ரத நாட்டில் ப்ர

மாணமாக வழங்குபவை. இவையே ஸ்ரீராமாநுஜ ஸித்₃த₄ாந் தத்திற்கு அடிப்படையாகும். கிறிஸ்து பிறப்பதற்கு முன் னமே தோன்றிய சங்க இலக்கியங்களிலும் இக் கொள்கைகள் மிக விளங்கி நிற்கின்றன. விஷ்ணுசித்தவிஜயம், விஶிஷ்டாத்₃ வைத விஜயம், சாதிமத ஆராய்ச்சி முதலான நமது வெளியீடு களில் பல்லாயிரக்கணக்கான பக்கங்களில் எதிரிகளும் வாய் திறக்கவொண்ணாதபடி இவை நிலைநாட்டப்பட்டுள்ளன. ஸ்ரீராமாநுஜருக்கு மிக முற்பட்ட ஆழ்வார்களும் தமிழ்நாட்டில் இக்கொள்கைகளைப் பரப்பியுள்ளனர். இப்படியிருக்க, ராமாநுஜர் கிறிஸ்துவ மதத்தைப் பின்பற்றினர் என்று எழுது வது வைஷ்ணவ விரோதி₄களால் கிளப்பிவிடப்பட்டதாய், எடுத்துக் கழிக்கவும் தகாததான அப₃த்₃த₄வாத₃ம் என்பது சொல்லாமலே விளங்கும். இனி கிறிஸ்துவுக்கும் கிருஷ்ண னுக்கும் ஒற்றுமை இருப்பதாகக் காமகோடி பீடாதி₄பதி பேசி யிருப்பதை ஆராய்வோம். உலகப் புகழ்பெற்ற கைரேகை நிபுணரான ஷீரோ என்பவர் ஓர் புஸ்தகம் எழுதியுள்ளார். அதில் அவர் கிறிஸ்து என்னும் வ்யக்தியே கிடையாது என் றும், ப₄ாரததே₃சத்திலிருந்து பரவிய கிருஷ்ணன் கதைகளைக் கேள்விப்பட்டு, அதில் சில மாறுதல்கள் செய்து, கிறிஸ்து வைப் பற்றிய கதைகள் மேலைநாடுகளில் பரப்பப்பட்டன என்றும் விரிவாக நிலைநாட்டியிருக்கிறார். கிறிஸ்துவுக்கும் கிருஷ்ணனுக்கும் காணப்படும் ஒற்றுமைகள் இதனால் ஏற்பட்டி ருக்கலாம். குமுதத்திலும், ராமாநுஜவாணியிலும் ஷீரோ எழுதி யிருப்பதை வெளியிட்டால் பலருடைய கண்கள் திறக்கும்.

(ii) ஆடு, மாடு, பன்றி முதலான பிராணிகளை வர்ஜ்யா வர்ஜ்யமின்றிக்கே அடித்துச் சாப்பிடுகிறவர்களால் பெரும்பாலும் பரப்பப்பெற்றுப் பின்பற்றப்படும் கிறிஸ்தவ மதத்தின் வேத மான பைபிளில் ஆஹாரநியமம் தேவையில்லை என்று சொல்லி யிருப்பது வியப்பல்ல. இந்து மதம் என்று வழங்கப்படும் நமது வைதி₃கமதம் மோக்ஷத்தை விரும்புகிறவர்களுக்கு ஆஹாரநியமம் மிகவும் தேவை என்று கூறுகிறது. *"ஆஹார ஶுத்₃தௌ₄ ஸத்த்வஶுத்₃தி₄:, ஸத்த்வஶுத்₃தௌ₄ த்₄ருவா ஸ்ம்ருதி: । ஸ்ம்ருதிலம்பே₄ ஸர்வக்₃ரந்தீ₂நாம் விப்ரமோக்ஷ:"* [சா₂ந் 7-26-2] [ஶுத்₃த₄மான ( ஸாத்விகமான ) உணவை

உண்பதால்தான் மனம் ஶுத்₃தி₄யடையும். மனம் ஶுத்₃தி₄ யடைந்தால்தான் (பரம்பொருளை) நிலையாகத் தியானம் செய்ய முடியும். பரம்பொருளை நிலையாகத் தியானம் செய்தால்தான் அஜ்ஞானம் முதலான ஸம்ஸார முடிச்சுகள் அவிழும்.] என்னும் உபநிஷத்₃வாக்யத்தைக் காணலாம். மற்றும் பல சாஸ்திர வாக்யங்களும் உண்டு. ஆகையால் மோக்ஷமடைய விரும்புகிறவர்களுக்கும், உபநிஷத், கீதை முதலிய வைதி₃க ஶாஸ்த்ரங்களுக்கு விளக்கம் எழுதி உலகை உய்விக்க விரும்புகிறவர்களுக்கும் ஆஹார(உணவு)நியமம் மிகவும் தேவையாகும்.

R. ஜகந்நாதய்யங்கார், வழக்கறிஞர். பாண்டிச்சேரி.

*42. 10—8—80'இந்து'பத்திரிகையில் ஞாயிறு வாராந்தரப் பதிப்பில் மூன்றுவது பகுதியின் முதல் பக்கத்தில்* "Worship of Preceptor of Pranava" *[ப்ரணவத்தை உபதேசித்த ஆசார்யனை குமரனை (கந்தனைத்) தொழும் கௌமார மதம்] என்னும் கட்டுரையில் உள்ள விஷயங்களை விமர்சிக்க வேண்டுகிறேன்.*

"நஞ்சுடைமை தானறிந்து நாகம் கரந்துறையும்" [விஷத்தைத் தலையில் கொண்டிருக்கையாலே, வெளிப்படையாக ஸஞ்சரித்தால் தன் உயிருக்கு ஆபத்து என்று உணர்ந்து நாகப்பாம்பு மறைந்தே வாழும்] என்கிற ரீதியில் எழுதியவர் பெயர் குறிக்கப்படாத இக்கட்டுரையில் பரம அப₃த்₃த₄மான பல விஷயங்கள் உள்ளன. "தெய்வ வழிபாடு தொடங்கப்பெற்ற போது ஐந்து பிரிவுகள் ஏற்பட்டன. க₃ணேஶர், மஹேஶ்வரர், அம்பிகை, விஷ்ணு, ஸூர்யன் என்னும் ஐந்து தெய்வங்களைப் பற்றிய இவ்வழிபாடுகள் பஞ்சாயதனபூஜை என்று கூட்டாகக் குறிக்கப்படுகின்றன" என்பது இக்கட்டுரையின் முதல் வாக்கியம். பஞ்சாயதனபூஜை என்பது ஒரு சில நூற்றுண்டுகளுக்குள் ஆதிசங்கரரை ஷண்மதஸ்தாபகராகக் கல்பித்த காலத்திலிருந்து அத்₃வைத சமூகத்தில் ஏற்பட்டதாகும். நம் நாட்டில் கணக்கற்ற தெய்வங்களின் வழிபாடு பல்லாயிரம் வருடங்களாகத் தொடர்ந்து வந்திருக்கின்றது என்றும், ஆதிகாலத்தில் திருமால் ஒருவனே பரம்பொருளாகவும், மற்ற தெய்வங்கள் அவனுடைய ஆணைக்கு உட்பட்டு நடக்கும் அதி₄காரி புருஷர்களாகவும் பா₄ரதநாட்டு மக்களால் வழிபடப்பட்டு வந்திருக்கிறுர்கள் என்றும் ஶ்ருதி ஸ்ம்ருதிதிஹாஸ ஸாத்விகபுராணங்களையும்,

தமிழ்நாட்டில் மிகப் பழங்காலத்தில் எழுந்த நூல்களான சங்க இலக்கியங்களையும் நடுநிலைநின்று ஆராய்பவர்களுக்குத் தெளிவாக விளங்குகிறது. சங்க இலக்கியங்களில் (1) பரம்பொருளாக முழங்கப்படும் திருமால், (2) இந்திரன், (3) வருணன், (4) முருகன், (5) காளி ஆகிய ஐந்து தெய்வங்கள் முறையே முல்லை, மருதம், நெய்தல், குறிஞ்சி, பாலை என்னும் ஐவகை நிலங்களுக்கு உரியவர்களாகக் கருதி வழிபடப்பட்டு வந்தார்கள் என்று கூறப்பட்டுள்ளது. பிரமன், சிவன் முதலான மற்ற தெய்வங்களைப்பற்றிய குறிப்புகளும் உள்ளன. விநாயகரைப் பற்றி ஒரு சிறுகுறிப்பு கூடக் கிடையாது. இவற்றிலிருந்து இந்த முதல் வாக்கியம் பரம அப₃த்₃த₄மானது என்று விளங்கும். இரண்டாவது மூன்றாவது பாராக்களில் கௌமாரமதத்தை உபநிஷத் விவரிப்பதாகவும், அவ்வுபநிஷத் '*தம் ஸ்கந்த₃ இத்யாசக்ஷதே*' [அவரை 'ஸ்கந்த₃ர்' என்று கூறுகிறார்கள்] என்று ஸநத்குமாரரைப்பற்றி முழங்குவதாகவும் கூறப்பட்டுள்ளது. எந்த உபநிஷத் என்று காட்டப்படவில்லை. ச₂ாந்தோ₃க்₃ய உபநிஷத்தின் ஏழாவது ப்ரபாட₂கத்தின் கடைசியில் இவ்வாக்கியம் உள்ளது. இந்த ப்ரபாட₂கம் ஸநத்குமாரர் நாரத₃ருக்குப் பரப்₃ரஹ்மத்தை உபதே₃*ஶி*ப்பதாக அமைந்துள்ளது. இதன் கடைசியில் ஆசார்யரான ஸநத்குமாரருக்குப் பெருமை சொல்லும்போது "அவரை 'ஸ்கந்த₃ர்' என்றே கூறுகிறார்கள்" என்று சொல்லப்பட்டுள்ளது. இதிலிருந்து ஸநத்குமாரர் பரம்பொருளை நாரத₃ருக்கு உபதே₃*ஶி*த்தவர் என்றும், அவரை 'ஸ்கந்த₃ர்' என்று (அறிவாளிகள்) அழைக்கிறார்கள் என்றுமே தேறுகிறது. ஸ்கந்த₃*ஶ*ப்₃த₃ம் "*ஸ்கந்தி₃ர் க₃தி ஶோஷணயோ:*" என்னும் தா₄துவிலிருந்து தோன்றியது. "*ஸ்கந்த₃ இத்யப்₃ருவந் தே₃வா: ஸ்கந்நம் க₃ர்ப்ப₄பரிஸ்ரவாத்*" [ரா-பா₃ 37-27] [சிவனது வீர்யம் (பல இடங்களில்) ஸஞ்சரித்து உண்டானவனானதால் குமரனை தே₃வர்கள் 'ஸ்கந்த₃ன்' என்று பெயரிட்டழைத்தார்கள்.] என்று ஸ்ரீராமாயணத்தில் முருகனுக்கு 'ஸ்கந்த₃ன்' என்னும் பெயர்வரக் காரணம் விளக்கப்பட்டது. அதுபோல் ஸநத்குமாரருக்கும் 'ஸ்கந்த₃ன்' என்னும் பெயர் உபநிஷத்தில் வழங்கியதற்குக் காரணத்தை நிருபிக்கலாம். அல்லது தே₃வஸேநாதி₄பதியான ஸ்கந்த₃னோடு ஒன்றாயிருப்பவர் ஸநத்குமாரர் என்றும் கொள்ளலாம். இவ்வுபநிஷத்தில் ஆசார்யரான ஸநத்குமாரரும், *ஶி*ஷ்ய

ரான நாரத₃ரும் விஷ்ணுவையே பரம்பொருளாகக் கொண்ட பரமவைஷ்ணவர்கள் என்பது இதிஹாஸ புராண ப்ரஸித்₃த₄ம். அவைகளைக் கொண்டு உபப்₃ரும்ஹணம் செய்யும்போது ஸநத்குமாரர் நாரத₃ருக்குப் பரம்பொருளான விஷ்ணுவின் பெருமைகளை உபதே₃சித்தார் என்பதே இந்த ப்ரபாட₂கத்தின் ஸாரமாகத் தேறும். ஸநத்குமாரரை ஸ்கந்த₃ர் (முருகன்) என்றே கொண்டாலும் ஸ்கந்த₃ன் பரமாத்ம ஜ்ஞானி என்று தேறுமேயொழிய பரமாத்மா என்று இங்கு தேருது. தே₃வஸேநாதி₄பதியானவன் எங்ஙனம் தே₃வஸமூஹ சக்ரவர்த்தியாக முடியும்? மேலும் இந்த ப்ரகரணத்தில் கௌமாரமதத்தின் கொள்கைகள் எதுவுமே காணப்படவில்லை. ஆகையால் 'ஹிந்து' கட்டுரையாளர் எழுதியது அப்பட்டமான பொய்யாகும். 'முருகன் சிவனுக்கே ப்ரணவத்தின் பொருளை உபதே₃ஶித்து, தகப்பன்சாமியானுன்' என்று சைவர்களால் கூறப்படும் கதையும் இக்கட்டுரையில் காணப்படுகிறது. முருகன் சிவனுக்கு உபதே₃சித்த ப்ரணவார்த்த₂ம் என்ன என்று இக்கட்டுரையில் விளக்கப்படவில்லை. சைவர்களும் அதை எங்கும் விளக்கியிருப்பதாகத் தெரியவில்லை. ஶாஸ்த்ரங்களில் "அகாரத்திலுல் சொல்லப்படும் விஷ்ணுவுக்கே தா₃ஸனுயிருப்பவன் மகாரத்திலுல் சொல்லப்படும் ஜீவன்" என்று ப்ரணவார்த்த₂ம் விவரிக்கப்பட்டுள்ளது. இவ்வர்த்த₂த்தை முருகன் சிவனுக்கு உபதே₃ஶித்தான் என்று கொள்வதிலும் குறையில்லை. இக்கட்டுரையில் மற்றும் பல அப₃த்₃த₄மான வாக்கியங்கள் உள்ளன. விரிவுக்கஞ்சி இத்துடன் விடுகிறோம். மற்ற விஷயங்களில் தரம் மிகுந்து விளங்கும் 'ஹிந்து' பத்திரிகை சைவாத்₃வைதிகளின் ஆக்ரமிப்பாலே மதத்துறையில் தரங்கெட்ட கட்டுரைகளையே வெளியிடுகிறது என்பதற்குப் பல சான்றுகளைக் காட்டியிருக்கிறோம். இது மற்றுமொரு சான்றாகும்.

S. முரளி, அந்தணல்லூர் (திருச்சி ஜில்லா).

*43. 27—7—80 விகடன் பக்கம் 20ல் காஞ்சீபுரம் இட்லிக்குத் தென்கலை வடகலைத் திருமணிட்டுப் பரிஹஸித்திருப்பதைக் கண்டித்து விகடனுக்குக் கடிதம் எழுதினேன். இப்படி வைஷ்ணவ பரிஹாஸம் செய்வதை இவர்கள் என்றுவது நிறுத்துவார்களா?*

இப்படித் திருமண்காப்பை அச்சிட்டுப் பரிஹஸிக்கும் பழக்கம் சைவாத்₃வைதிகளால் ஆளப்படும் நம்நாட்டுப் பத்தி

ரிகைகளில் நெடுங்காலமாகத் தொடர்ந்து வருகிறது. 15—7—80 துக்ளக்கில் சினிமா நடிகை ஜெயலலிதாவைக் கொண்டு இத்தகையதொரு கட்டுரையை வெளியிட்டு, 40-வது ஸுதர்சனர்பதிலில் கண்டிக்கப்பட்ட பின்பும் திருந்த மனமில்லாமல் 1—8—80 துக்ளக்கிலும் திருநாமத்தையிட்டுக் கேலி செய்யும் படம் வந்திருக்கிறது. இஃது இவர்கள் வயிற்றில் ஊறியிருக்கும் வைஷ்ணவத்₃வேஷத்தையே காட்டுகிறது. இவர்கள் திருந்துவார்கள் என்று தோன்றவில்லை,

வேளுக்குடி G. தோதாத்ரி, சென்னை-27. (44 to 46 கேள்விகள்)

*44. 31, 32 கேள்வி பதில்களில் 'இந்து மதம் பல மதங்களின் கூட்டமே' என்கிறீர்கள். (கிறிஸ்தவர்களில்) கத்தோலிக்கர்களும், பிராடஸ்டெண்டுகளும் வெவ்வேறு மதம், ஷியா சுன்னி முகம்மதியர்கள் வெவ்வேறு மதம் என்னும் வாதத்திற்கும் உங்கள் வாதத்திற்கும் என்ன வித்தியாசம் ?*

பேரின்பமாகிற மோக்ஷத்திற்கு வழிகாட்டும் முக்கியக் கொள்கைகள் ஒன்ருயிருக்கின்றனவா, வேருயிருக்கின்றனவா என்பதைக்கொண்டே மதங்கள் ஒன்ரு, வெவ்வேரு என்பதை நிர்ணயிக்கமுடியும். இந்த லக்ஷணத்தைக்கொண்டு பார்க்கும் போது, கத்தோலிக்கர்கள் பிராடஸ்டெண்டுகள் என்னும் இரு பிரிவினரும் கிறிஸ்தவ மதத்தைச் சேர்ந்தவர்களே என்றும், ஷியா சுன்னி எனும் இரு பிரிவினரும் இஸ்லாம் மதத்தைச் சேர்ந்தவர்களே என்றும், தென்கலை வடகலை என்னும் இரு பிரிவினரும் விசிஷ்டாத்₃வைத ஸ்ரீ வைஷ்ணவ மதத்தைச் சேர்ந்தவர்களே என்றும் எளிதில் நிர்ணயிக்கலாம். ஒரே மதமாக நீங்கள் கூறும் 'இந்து' மதத்திலோவெனில்—வைஷ்ணவ மதம் ஸ்ரீமந்நாராயணனை *ஶ*ரணமடைவதாலேயே பேரின்பத்தைப்பெறலாம் என்கிறது; சைவ மதம் சிவனைப் பற்றினல்தான் பேரின்பம் கிட்டும் என்கிறது; அத்₃வைத மதமோவெனில் "ஒரு கு₃ணமுமற்ற அறிவு ஒன்றே உள்ளதான பரம்பொருள்; மற்ற வேறுபாடுகளனைத்தும் பொய்த்தோற்றம்" என்னும் ஞானத்தாலேயே மோக்ஷம் அடையலாம் என்கிறது; "எம்மதமும் சம்மதம் என்பதுதான் இந்து மதம். இப்படி எண்ணுகிறவனுக்குத்தான் பரகதி உண்டு" என்னும் சமரச

மதத்தைச் சேர்ந்தவர்களும் இந்துக்களிடையே உண்டு. பல பொதுக்கொள்கைகளைக் கொண்டிருக்கையால் இவர்கள் ஒரு சமூகமாகக் கருதப்பட்டாலும், பேரின்பமடையும் வழியைக் கடைப்பிடிப்பதில் மிகவும் வேறுபட்டுநிற்கையால் வெவ் வேறு மதத்தைச் சேர்ந்தவர்களே என்பது நடுநிலையாளர்க்கு நன்கு விளங்கும்.

*45. பிரமாணங்களான வேதங்கள் முதலியவை, கல்யாணம் முதலிய சடங்குகள், நித்யநைமித்திக காம்யகர்மங்கள் ஆகியவை ஒன்ருயிருக்கும்போது ஒரு சிலருக்கே புரியக்கூடிய ஜீவன்—பரம் பொருள்பற்றிய கொள்கை வேறுபாடுகளை மிகைப்படுத்தி, இந்துக்களை வேறுபடுத்தி, சச்சரவையும் மனக் கசப்பையும் வளர்ப்பதற்கு அணிகோலலாமா ?*

'இவ்வுலக வாழ்க்கைக்கு வேண்டிய நெறிகளைக் காட்டு வதே மதம்' என்று மதத்திற்கு நீங்கள் லக்ஷணம் கொண்டி ருப்பதாக விளங்குகிறது. 'மறுமையில் பேரின்பத்திற்கு வழி காட்டுவதே மதம்' என்பதே அறிவாளிகளால் ஒப்புக்கொள்ளப் பட்ட மதலக்ஷணம். "நம் நாட்டில் உள்ள கிறிஸ்துவ மதம், இஸ்லாமிய மதம், (நீங்கள்கூறும்) இந்து மதம் என்கிற மூன்றும் ஒன்ருக முடியாது. பரஸ்பர சகிப்புத்தன்மையுடன் சண்டை சச்சரவில்லாமல் இவை வாழவேண்டும்'' என்பதை நீங்களே ஒப்புக்கொள்வீர்கள். பேரின்பமடைய வெவ்வேறு வழிகளைக்காட்டும் வைஷ்ணவம், சைவம், அத்வைதம், சமரசம் முதலான இந்து சமூக மதங்களும் இதே ரீதியில் பரஸ்பர சகிப்புத்தன்மையுடன் சச்சரவில்லாமல் வாழலாமே. 'சச்சரவு ஏற்பட்டு விடுமோ' என்று பயந்து, 'பேரின்பத்தைப் பற்றிச் சிந்திக்காதே' என்று இந்துக்களுக்கு, குறிப்பாக வைஷ்ணவர்க ளுக்கு உபதேசிப்பது போலல்லவோ உங்கள் கேள்வி அமை கின்றது. இது சரியாகுமா ?

*46. ஸ்ரீரங்கம் கோவில் ராஜகோபுரத்திற்குக் காஞ்சீ காம கோடி பீடாதிபதி அவர்கள் லக்ஷம் ரூபாய் நன்கொடை அளித்தி ருக்கிருர். இதிலிருந்து அத்வைதமும் வைஷ்ணவமும் ஒன்றுக் கொன்று ஆதரவாயிருப்பது தெரிகிறதே தவிர, கண்டிப்பது தெரியவில்லையே ?*

ஒரு முஸ்லிம் அன்பரும், கிறிஸ்தவ மாதும் ராஜகோபுரத் [illegible]குப் பெருந்தொகைகள் அளித்திருப்பதாக அழகியசிங்கரும், ஆண்டவன் ஸ்வாமியும் ஸாதித்திருக்கிறார்கள். இதுகொண்டு இஸ்லாமும் கிறிஸ்தவமும், வைஷ்ணவமும் ஒன்று என்று முடிவு கட்டிவிடலாமா? "விஷ்ணுவுக்குத் தமோகு3ணம் உண்டு. இராமன் ப்3ரஹ்மஹத்தி செய்தார், கண்ணன் வீரஹத்தி செய்தார்" முதலான நூற்றுக்கணக்கான விஷ்ணு வைஷ்ணவ த்3வேஷ ப்ரசாரங்களைக் காமகோடி பீடாதி4பதி கடந்த இருபது வருடங்களுக்கு மேலாகப் பிரபல பத்திரிகைகளின் மூலம் செய்து வருவது தங்கள் கண்ணில் படவில்லைபோலும்! பட்டிருந்தால் இக்கேள்வியைக் கேட்டிருக்கமாட்டீர்கள். காமகோடி பீடாதி4பதியும், இந்தப் பத்திரிகைகளும் இந்த த்3வேஷப்ரசாரத்தை நிறுத்தி, வைஷ்ணவர்களிடத்தில் சகிப்புத் தன்மையோடு இருந்தால்தான் இந்து மதத்தில் அடங்கிய எல்லா மதங்களும் வளரும். ஸுதர்சனர்பதிலில் இதுவரை வெளிவந்துள்ள மூன்று சதகங்களைப்பெற்றுப் படிப்பதன்மூலமும், சென்னையிலேயே வாழும் உங்களூர்க்காரரான வாக3ம்ருதவர்ஷீ வேளுக்குடி ஸ்ரீ உ. வே. வரத3ாசார்ய ஸ்வாமியிடம், உங்களுடைய மற்றும் பல ஐயங்களுக்குப் பரிஹாரங்களைக் கேட்பதன்மூலமும் தெளிவுபெறுவீர்கள் என்று நம்புகிறேன்.

V. ஸ்ரீநிவாஸன், திருச்சி-17

*47. ஸுத3ர்ஶனர் பதிலை அறிஞர்கள் வரவேற்கிறார்களா?*

ஏராளமானவர்கள் மனமார வரவேற்கிறார்கள். ஸ்ரீவைஷ்ணவ வித்3வான்களில் பிராயத்திலும், புலமையிலும், எழுத்து-பேச்சுத் திறமையிலும் தலைமைபெற்று விளங்கும் ஸ்ரீகாஞ்சீ மஹாவித்3வான் ஸ்ரீ உ.வே. P.B அண்ணங்கராசார்ய ஸ்வாமி இம்மாத (383) ஸ்ரீராமாநுஜனில் மனமுருகிக் கொண்டாடியிருப்பதைக் காணலாம். தினமணி கதிர் பத்திரிகை பாராட்டியதை உலகமறியும். லக்ஷக்கணக்கான மக்களின் ஆதரவுபெற்றவர்களும், ஸுதர்சனர் பதிலில் கடுமையாக விமர்சிக்கப்படுகிறவர்களுமான காமகோடி பீடாதி4பதி, வாரியார் போன்ற பிரமுகர்களும், இந்து, தினமணி, விகடன், கல்கி, குமுதம், துக்ளக்போன்ற பத்திரிகைகளும் நாம் எழுதும் விஷயங்களை மறுக்க இயலாமலிருப்பதே நமக்குப் பெரிய பாராட்டாகும்.

*மு. நந்தகோபால், சென்னை-38.*

*48. ஆஸ்திகத்துக்கும், பிராம்மண சமுதாயத்துக்கும் தி. க. வினர் இழைத்துவரும் அநீதிக்கு நீங்கள் என்ன நடவடிக்கை எடுத்தீர்கள்? இந்நிலையில் சிவவிஷ்ணுபேதசர்ச்சை தேவையா?*

கடந்த 30 வருடங்களில் தி. க., தி. மு. க.வின் துஷ்ப்ரசாரங்களை நமது பத்திரிகை பலமுறை எதிர்த்திருக்கிறது. சிவ விஷ்ணு கோவில்களில் அரிஜனங்களை அர்ச்சகராக ஆக்க வேண்டும் என்று தி. க. வின் தூண்டுதலினால் தி. மு. க. கருணாநிதி அரசு சட்டம் கொண்டுவந்தபோது அதை எதிர்த்து, சுப்ரீம் கோர்ட்டில் வழக்குத் தொடுத்துத் தடையுத்தரவு வாங்குவதற்கு, அப்போது திருமலை பெரியஜீயர் ஆஸ்தானத்தை அலங்கரித்திருந்த ஜீயர் ஸ்வாமியிடம் ரூபாய் ஆயிரம்பெற்று, ஸ்ரீபெரும்பூதூர் யதிராஜஜீயர் ஸ்வாமியிடம் அளித்து, வழக்குத் தொடுக்கச்செய்து வெற்றிபெறுவதற்கு மூலகாரணமாயிருந்தது நாமே என்பதை ஆஸ்திகவுலகம் அறியும். வாதிகளில் ஒருவரான ஜீயர் ஸ்வாமி பரமபத₃மடைந்துவிட்டாலும், இன்றும் உயிர்வாழும் மற்றொருவரான ராமேச்வரம் மட₂ாதி₄பதி கல்யாண்தாஸ் அவர்கள் இதை உறுதிப்படுத்துவார். இப்படி தி. க., தி. மு. க. வின் அநீதிகள் பலவற்றுக்கு, நாம் எதிர்ப்புக் குரல் கொடுப்பதோடன்றியில் செயல்வீரத்தையும் காட்டுகிறோம் என்பது சென்னை அர்ச்சக சங்கத்தலைவர் ஸ்வாமிநாத சிவாச்சாரியருக்கும், அல்லூர் விச்வநாத சிவாச்சாரியருக்கும், ஆலயப் பாதுகாப்புக் கமிட்டி திரு N. ராமசாமி அவர்களுக்கும், மற்றும் பலர்க்கும் தெரியும். ஸ்ரீரங்கத்திலும், திருச்சியிலும் நடைபெற்றுவரும் முற்படுத்தப்பட்டோர் சங்கங்களுக்கும் நாம் பேராதரவு அளித்து வருகிறோம். 7—9—80 அன்று திருச்சி புத்தூர் அக்ரஹாரத்தில் நடைபெற்ற கூட்டத்தில் "தெய்வநம்பிக்கை உள்ள சைவர், வைஷ்ணவர், த்வைதி, அத்வைதி, விசிஷ்டாத்வைதி முதலிய அனைவரும் இவ்விஷயத்தில் '*வயம் பஞ்சோத்தரஶதம்*' [நாம் நூற்றைவர்] என்னும் நியாயப்படி ஒற்றுமையாயிருந்து போராடவேண்டும். அத்துடன் திருநாமம், திருநீறு முதலான அவரவர் மதக்குறிகளை அவரவர் எப்போதும் தரித்துக்கொள்ளும் துணிவும் நமக்கு வரவேண்டும்" என்று

நாம் வலியுறுத்தினேம். கேள்வியின் முதல் பகுதிக்கு இதுவே எமது பதில். இனி இரண்டாவது பகுதிக்கு பதிலளிக்கிறேம்: இதே கேள்வியை நீங்கள் காமகோடி பீடாதி₄பதி. அவர்க்குத் துணைபுரியும் பெரும்பலமுள்ள கல்கி, விகடன், இதயம், கலைமகள், அமுதசுரபி, தினமணி முதலான பத்திரிகை நிர் வாகிகள், வாரியார் கண்ணதாசன் போன்ற பிரமுகர்கள் ஆகிய வர்களிடம் கேட்டு, அவர்கள் விஷ்ணு வைஷ்ணவ த்₃வேஷ ப்ரசாரத்தில் ஈடுபடாமலிருக்கும்படி செய்தால் நாமும் ஸுதர் சனர் பதிலில் சிவன் முதலான தெய்வங்களின் தாழ்வையும், சைவம் அத்வைதம் முதலானவற்றின் பொருந்தாமையையும் விளக்கிவருவதை நிறுத்திவிட ஸித்₃த₄மாயிருக்கிறேம். 'சண்டை கூடாது' என்னும் உபதே₃ஶத்தை, சண்டையைக் கிளப்பிவிட்டு, அதற்கு மூலகாரணமாயிருப்பவர்களுக்கன்றே முதலில் செய்யவேண்டும். அதைச் செய்ய நீர் என்ன நட வடிக்கை எடுக்கப்போகிறீர்? என்பதை *உமது முழு விலாசத்* தோடு எமக்குத் தெரிவிக்கவும். ஒருவன் மற்றொருவனை அக்ரம மாக அடிக்கும்போது, அடிபடுபவனிடம் 'சண்டை போடாதே' என்று கூறுவது போலல்லவோ உமது வாத₃மிருக்கிறது. இதற்கு நீர் என்ன பதில் சொல்லுகிறீர்?

**V. ஸ்ரீநிவாஸன்,** *திருச்சி-17.*

*49. பொதுஜனப் பத்திரிகைகளில் காமகோடி பீடாதி பதிகள் இருவரின் அருள்மொழிகளையே பெரும்பாலும் வெளி யிடுகிறார்களே; இவர்களைத் தவிர நமது மதத்தைப் பற்றிப் படித்து நன்கு விளக்கத் தெரிந்த ஜ்ஞானிகள் நம்நாட்டில் மிகுதியாக இல்லையா? சைவப் பண்டார ஸந்நிதிகள், வைஷ்ணவ ஜீயர்கள், வித்வான்கள், ஸ்மார்த்தர்களிலும் கிருஷ்ணப்ரேமி போன்ற மஹாப₄ாக₃வதர்கள் பலர் இருக்கும்போது ஏன் அவர்க ளுடைய பொன்மொழிகளை இப்பத்திரிகைகள் அடியோடு புறக் கணிக்கின்றன?*

காமகோடி பெரிய பீடாதி₄பதி பெரியராஜதந்திரி. பொது ஜனப் பத்திரிகை நிர்வாகிகளையும், சினிமாக்காரர்களையும், அரசியல்வாதிகளையும் நீண்டநாளாகவே தம் வசப்படுத்திக் கொண்டிருக்கிறார். ஓர் பிரபல வாரப் பத்திரிகையின் ப்₃ராஹ் மண நிர்வாகி ஓர் பிரபல பாடகியை அநுலோம விவாஹம்

செய்துகொண்டவராகையாலே ச்ருங்கேரி பீட₂ாதி₄பதி அவர்களுடைய பாத₃பூஜையை ஏற்க மறுத்துவிட்டார். காமகோடிப் பெரியவர் அவர்களுடைய பாத₃பூஜையை ஏற்றுக்கொண்டு, இன்றும் அப்பத்திரிகையின் பேராத₃ரவைப் பெற்றுவருகிறார். இதுபோலவே ஶாஸ்த்ர விரோத₄ச் செயல்களைச் செய்வதையே வாழ்க்கை முறையாகக்கொண்ட பத்திரிகை நிர்வாகிகள், சினிமாக்காரர்கள், எழுத்தாளர்கள், பேச்சாளர்கள், கவிஞர்கள், கலைஞர்கள், அரசியல்வாதிகள் முதலான ஆயிரக்கணக்கான பிரமுகர்களைத் தம் சொற்படி நடக்கச்செய்யும் திறமை உடையவராக இருக்கிறார் காமகோடிப் பெரியவர். அத்துடன் தம் ஸித்₃த₄ாந்தமான அத்₃வைதத்தைப் பேசினால் எவரும் தம்மை மதிக்கமாட்டார்கள் என்று உணர்ந்து, அத்₃வைதத்தையும், ஆதிசங்கர ப₄ாஷ்யங்களையும் கைவிட்டு, ஶ்ருதி ஸ்ம்ருதிதிஹாஸ புராணங்களை விளக்கியும் விஶேஷமாக ப்ரசாரம் செய்யாமல், ஆதிசங்கரர் பெயரில் வழங்கும் ஸ்தோத்ரங்களையும், சமீபகாலத்தில் கற்பிக்கப்பட்ட ஸ்த₂லபுராணக் கதைகளையும் பற்றிக்கொண்டு 'எல்லா தெய்வமும் ஒன்று; எம்மதமும் சம்மதம்' என்று தாமும் பிரசாரம் செய்து, ஆதி₃சங்கர ப₄ாஷ்யங்களையே படிக்காத தம்முடைய இளையபீடாதி₄பதிக்கும் இப்படியே பிரசாரம் செய்யக் கற்றுக்கொடுத்துவிட்டார். எம்மதத்திலும் பற்றில்லாத பத்திரிகைக்காரர்களுக்கு, இந்த முறையில் லக்ஷக்கணக்கான பொதுமக்களுக்குப் போற்றத்தக்கவராகிவிட்ட இவர்களது பொன்மொழிகளை வெளியிடுவது பணம் பண்ணுவதற்கு ஸௌகர்யமாயிருக்கிறது. பண்டார ஸந்நிதிகள், ஜீயர்கள், வித்வான்கள், பாகவதர்கள் ஆகியவர்களின் பொன்மொழிகளை வெளியிடுவதால் இப்படிப் பணம் பண்ணமுடியாது. அவர்கள் ஹிதத்தைச் சொல்லுவார்களேயொழிய ப்ரியத்தை (நெஞ்சுக்கு இனியதை) காமகோடி பீடாதி₄பதிகளைப்போலே சொல்லமாட்டார்கள். பீடாதி₄பதிகளின் மொழிகள் பலவற்றை ஸு₂தர்சனர் பதிலில் நாம் விமர்சித்திருப்பதைக் காண்பவர்களுக்கு இவ்வுண்மை விளங்கும். சிறிய பீடாதி₄பதி ராமாயணத்தையே அறியாமல் பேசியிருப்பதை ஸு₂தர்சனர் பதிலில் [சதகம் 8-19] விளக்கியிருக்கிறோம். 5-9-80 தினமணி நாலாம் பக்கத்தில் 'ரக்ஷாபந்தன விழாவில் காஞ்சி சுவாமிகள் அருளுரை' என்னும் தலைப்பிலுள்ள சிறிய பீடாதி₄

பதியின் பேச்சில் "வீட்டிற்குள் சகோதர சகோதரிக்குள் அன்பும் இருக்கும். அன்பினால் சண்டையும் இருக்கும். த்வேஷத்தினால் ஒரு பொழுதும் அண்ணன், தம்பிகளுக்கு சண்டை வராது. வரவும் கூடாது. மகாபாரதத்தில் கௌரவர்களுக்கும், பாண்டவர்களுக்கும் நடந்த சண்டையானது த்வேஷத்தினால் அல்ல. நீதிக்காகவும், தர்மத்திற்காகவும் மாத்திரமே போராட்டம் நடைபெற்றது" என்று உள்ளதிலிருந்து அவருக்கு மஹாப₄ாரதமும், உலகநடைமுறையுங்கூடத் தெரியாது என்று விளங்குகிறது. மஹாப₄ாரதத்தில் கௌரவர்கள் த்₃வேஷத்தினாலேயே பாண்டவர்களோடு போரிட்டார்கள். பாண்டவர்களே நீதிக்காகப் போராடினார்கள் என்பது சிறுவர்க்கும் தெரியும். 14—9—80 கல்கியிலும்—ப்ரணவத்தையும், பிள்ளையாரையும், பிள்ளையார் சுழியையும், விஞ்ஞானத்தையும் சம்ப₃ந்த₄ாசம்ப₃ந்த₄மில்லாமலும், அப₃த்₃த₄மாகவும் இணைத்துக் குழப்பியிருக்கும் கட்டுரை பெரிய பீட₂ாதி₄பதியின் பெயரில் வெளிவந்துள்ளது. சினிமாக்காரிகளின் படங்களையும் அவர்களைப் பற்றிய 'கிசு கிசு'க்களையும், சோரம் போகும் கதைகளையும் வெளியிடும் பத்திரிகைகளில், காமகோடி பீடாதி₄பதிகளின் இத்தகைய கட்டுரைகளைத் தவிர மற்ற மத ஞானிகளின் கட்டுரைகளை எதிர்பார்ப்பது சரியல்ல. போனால் போகிறதென்று சமீபகாலத்தில் சிருங்கேரி பீட₂ாதி₄பதிக்கும் அவர் அத்₃வைதியாயிருக்கையாலே சிறிது இடமளித்து வருகிறார்கள். மற்றவர்களின் பொன்மொழிகளை வெளியிட்டால் இவர்களுக்கு லாபமில்லையாகையால் வெளியிடுவதில்லை.

Dr. V. S. ஸம்பத்குமாராசார்யர், மைசூர்-4.

*50. புதுடில்லி-1, ஜான்ஸிராணிரோட்டிலிருந்து வெளிவரும் '* Caravan *' (கேரவான்) என்னும் ஆங்கிலப் பத்திரிகையில்* 'Tale of two symbols' *என்னும் தலைப்பிலுள்ள கட்டுரையில் தென்கலை வடகலைத் திருமண்காப்புக்களைப்பற்றித் திரித்துக் கூறியும் பரிஹஸித்தும் எழுதியிருக்கிறார்கள். அதைக் கண்டித்து எனது ஆசார்யரான பேராசிரியர் ஸ்ரீ உ. வே. V. T. திருநாராயணய்யங்கார் ஸ்வாமி எழுதியிருக்கும் ஆங்கிலக் கட்டுரையைத் தங்களுக்கு அனுப்பியிருக்கிறேன். அதைப் பிரசுரிக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்.*

'கேரவான்' பத்திரிகைக் கட்டுரையை நாமும் பார்க்கவில்லை. நம் வாசகர்களிலும் பெரும்பாலானவர்கள் பார்த்திருக்கமாட்டார்கள். ஆயினும் தமிழ்நாட்டிலுள்ள விகடன், துக்ளக் போன்ற பத்திரிகைகளில் சைவாத்₃வைதிகள் தென்கலை—வடகலை வகுப்புகளையும், திருமண்காப்புகளையும் அடிக்கடி பரிஹஸித்துக் கட்டுரைகளும், சித்திரங்களும், 'ஜோக்'குகளும் வெளியிட்டு நம்மிடம் மறுப்பைப் பெற்றும், திரும்பத் திரும்ப அதையே செய்து வருகிறார்கள். வடநாட்டுப் பத்திரிகைகளிலும் இவர்களது சேஷ்டை தொடங்கியிருக்கிறது என விளங்குகிறது. நமது பத்திரிகையில் பேராசிரியரின் கட்டுரையை வெளியிடுவது 'கேரவான்' பத்திரிகையைப் பார்க்காதவர்களும், ஆங்கிலமறியாதவர்களும் நிறைந்த நம் வாசகர்களுக்குப் பயன்படாது. ஆகையால் சென்னையிலிருந்து வெளிவரும் 'ராமாநுஜவாணி' போன்ற ஆங்கிலப் பத்திரிகைகளுக்கு இக்கட்டுரையைப் பிரசுரத்திற்கு அனுப்பலாம்.

K. S. கிருஷ்ணன், பூனா (51 to 56 கேள்விகள்)

*51. 'அனுஸந்தானம்'—இந்த ஶப்தத்திற்கு (வ்யாகரண ரீதியில்) பொருள் என்ன? சிந்தனம், ஸ்மரணம், த்யானம் போன்ற சொற்களையெல்லாம் தவிர்த்து நம் ஸ்ரீவைஷ்ணவ க்ரந்தங்களில் 'அனுஸந்தான'மே விஶேஷித்து வழங்கப்படுவதைப் பார்க்கிறேன். இது சரியென்றால் இந்த ஶப்தத்தின் விஶேஷமென்ன?*

'அநுஸந்த₄ானம்' என்பது 'முன்னோர் மொழிந்த ஸ்ரீஸூக்திகளை அர்த்த₂த்தோடு படிப்பது' என்னும் பொருளை உடையது. சிந்தனம், ஸ்மரணம் என்பவை நினைத்தலைக்குறிக்கும். த்₄யானம் என்பது நீண்ட நேரம் நினைத்தலைக்குறிக்கும். ஞானிகளான ஆழ்வார்கள் அருளிய அருளிச்செயல்களையும், ஆசார்யர்கள் அருளிய ஸ்தோத்ரங்களையும் அநுஸந்த₄ானம் செய்வதன் மூலமே நமக்கு ப₄க₃வத்₃விஷயத்தைப்பற்றிய சிந்தனம், தியானம் முதலியவை ஏற்பட்டு விடுகிறதாகையால், வைஷ்ணவர்களுக்கு 'அநுஸந்த₄ானம்' முக்கியமாகக் கொள்ளப்படுகிறது.

*52. ப்ரஹ்மஸூத்ரம் பராயத்தாதி₄கரணத்தில் 'க்ருத ப்ரயத்நாபேக்ஷஸ்து' என்னும் ஸூத்ரத்தின் ஸ்ரீபாஷ்யத்தில் 'ஸர்வ ப்ரவ்ருத்திகளிலும் சேதனனுடைய ப்ரதம ப்ரயத்னத்தை*

*அபேக்ஷித்துக்கொண்டு பரமாத்மா ப்ரவர்த்திப்பியாநிற்கும்' என்று எம்பெருமானார் அருளிச்செய்தபடி. நம் கர்மமோ எங்கு துவக்கம், எங்கு இடை, எங்கு முடிவு என்றுணரமுடியாதபடி ப்ரவாஹரூபமாக அல்லவா இருக்கிறது ? நம்முடைய 'ப்ரதம ப்ரயத்நம்' என்பதாகக் குறிக்கப்பட்டது எது என்று அன்புடன் விளக்கியருளவும்.*

சேதனன் ஒரு நல்ல அல்லது தீய காரியத்தைத் தொடங்கும்போது முதன்முதலில் அதைப்பற்றி அறிகிறான் (ஜ்ஞாநம்). அடுத்தபடி அதைச் செய்ய விரும்புகிறான் (இச்சை). அடுத்தபடி ஒரு க்ஷணநேரத்தில் அதைச் செய்யத் தொடங்குகிறான் (ப்ரயத்னம்). இந்தத் தொடக்கமே ப்ரத₂மப்ரவ்ருத்தி எனப்படுகிறது. ஒவ்வொரு நல்ல அல்லது தீய காரியத்தைத் தொடங்கும்போது அந்த ப்ரத₂மப்ரவ்ருத்தி க்ஷணங்களில் எம்பெருமான் இவனைப் பூர்வகர்மங்களையொட்டித் தூண்டாமல் உதா₃ஸீனனாயிருந்து, ஜீவனுக்கு அதைச் செய்யவோ, அதில் நின்றும் மீளவோ ஸ்வாதந்த்ரியத்தை அளித்து விடுகிறான். அதனாலேயே, அக்கர்மங்களுக்குப் ப₂லனளிக்கும்போது வைஷம்யம் (பக்ஷபாதம்), நைர்க்₃ருண்யம் (கருணையின்மை) என்னும் தோ₃ஷங்கள் எம்பெருமானுக்கு ஏற்படுவதில்லை. தொடங்கிய பின் மேல் க்ஷணங்களில் எம்பெருமான் பூர்வகர்மங்களையொட்டி ஜீவனைத் தூண்டுகிறான்—என்பது பராயத்தாதி₄கரண ஸாரம்.

*53. ஸ்ரீவைஷ்ணவர்கள் தாங்கள் போகும் வழியில் சிவன், பிள்ளையார் போன்ற தேவதைகளின் கோயில்கள் குறுக்கிட்டால் ப்ரதட்சிணமாகக் கடக்கவேண்டுமா ? அப்ரதட்சிணமாகக் கடக்கவேண்டுமா ? ப்ரதட்சிணமாகப் போகநேரிட்டால் அஜ்ஞாதஸுக்ருதம் என்ற கணக்கில் அன்ய தேவதா ஸேவையாகி ஸ்வரூபஹானி ஏற்படக் கூடிய ப்ரஸக்தியிருக்கிறதா ? அதே போல, நாம் குடியிருக்கும் தெருவில் வீட்டு வாசலோடு அன்ய தேவதா மூர்த்திகள் போகுமானால் நாம் எப்படி நடந்துகொள்ள வேண்டும் ?*

இவ்விஷயத்தில் ஓர் பதிவ்ரதை, பரபுருஷர்கள் விஷயத்தில் எப்படி நடந்து கொள்வாளோ அப்படி நடந்துகொள்ள வேண்டும். பதிவ்ரதைக்குப் பரபுருஷர்களிடத்தில் த்₃வேஷமும் கிடையாது; ஆத₃ரவும் கிடையாது. அதுபோலவே

ஸ்ரீவைஷ்ணவர்கள் மற்ற தெய்வங்களிடம் இருக்கவேண்டும். நாம் தெருவில் நடக்கும்போது எத்தனையோ பொருள்களைப் பிரதட்சிணமாகக் கடக்கிறோம். அதுபோலவே மற்ற கோயில்களைக் கடப்பதிலும் குற்றமில்லை. ஒரு பயனை உத்3தே3ஶித்து ஒரு தெய்வத்தை வலம்வருவதுதான் ஸாக்ருதமாகி ஸ்வரூப ஹானியை விளைக்கும். ஒரு ப2லனை உத்3தே3ஶித்து, பதியையும் வலம் வராத பதிவ்ரதையைப்போலே, நாம் ஒரு ப2லனை உத்3தே3ஶித்து எம்பெருமானைக் குறித்தும் பிரதட்சிண நமஸ்காராதி3களைச் செய்யப் போவதில்லை. ஆகையால் ப2லனை உத்3தே3ஶிக்காத நாம் மற்ற தே3வதைகளின் கோயிலை வலமாகப் போவதற்கும், இடமாகப் போவதற்கும் வித்தியாசமில்லை. அந்யதே3வதாமூர்த்திகள் வீட்டு வாசலோடு போகும்போதும் நாம் முற்கூறிய பதிவ்ரதையைப்போலே அவற்றைக் குறித்து த்3வேஷமோ ஆத3ரவோ இல்லாமல் நடந்துகொள்ள வேண்டும்.

*54. ஸ்ரீவைஷ்ணவ நிஷ்டை அறியாதவர்கள் வந்து அன்ய தேவதா ப்ரஸாதம், தீர்த்தம், குங்குமம் போன்றவற்றைக் கொடுக்கவந்தால் அந்தச் சூழ்நிலையை எப்படி எதிர்கொள்ளுவது? அடியோடு மறுப்பதால் எதிராளி மனம் புண்படுகிறார் அல்லது அவமானப்படுத்தப்பட்டதாக உணர்கிறார்; ஏற்றுக் கொள்வதோ நம் மனமும் ஸ்வதர்மமும் அடியோடு ஏற்காத ஒன்று. காலதேஶவர்த்தமானத்தில் 'கையில் பெற்றுக்கொள்; ஆனால் தரிக்காமல் பருகாமல் அப்படியே விட்டுவிடு' என்பதாகச் செய்யலாமா?*

எதிராளி விவேகியாய் (பகுத்தறிவுள்ளவராய்) இருந்தால் "எம்பெருமானிடம் பாதிவ்ரத்யத்தைக் கொண்ட நாங்கள் மற்ற தெய்வங்களின் பிரஸாதங்களை ஏற்பதில்லை. இதை நீங்கள் தவறாக நினைக்கக்கூடாது" என்று பண்போடு எடுத்துச் சொல்லி மறுக்கலாம். அவர் சைவாத்3வைத சமரச வெறியராகவும், நமக்கு மேலதிகாரியாகவும் இருந்தால் கையில் பெற்றுக்கொண்டு பிறகு அதை உபயோகப்படுத்துபவர்களிடம் கொடுத்துவிடலாம். நிர்ப்ப3ந்தி4த்து நம் நெற்றியில் நீற்றை வைப்பவராயிருந்து, நமக்கும் அவரை எதிர்க்கத் துணிவில்லாவிடில், அவர் மறைந்தவுடன் அதை அழித்துவிட்டு, உடனே

த்$_4$வயாநுஸந்த$_4$ானம் செய்து, விரைவில் ப$_4$க$_3$வத்$_5$ப$_4$ாக$_3$வத ஸ்ரீபாத$_4$தீர்த்த$_4$த்தை ஸ்வீகரிப்பது நல்லது. இத்தகைய விஷயங்களில் த$_3$ாக்ஷிண்யம் பாராமல் துணிவுடையவர்கள் என்று வளர்கிறார்களோ, அன்று தான் வைஷ்ணவம் வளரும்.

*55. ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு சங்கீதம், நாட்டியம், ஶில்பம், சித்திரம் போன்ற லலித கலைகளில் ஊற்றம் இருப்பதில் தவறுண்டா? தவறு இல்லையென்றால், அந்தத் துறைகளில் சிறந்த மதாந்தரஸ்தர்களியற்றிய அன்ய தேவதைகள் சம்பந்தப்படும் க்ரந்தங்களோ, க்ருதிகளோ, கட்டிடங்களோ, ஆலயங்களோ பற்றிக் கற்றுக் கொள்வதிலோ கற்றுக்கொடுப்பதிலோ ஸ்வரூப ஹானி ஏற்படுகிறதா?*

ஸங்கிதம், நாட்டியம், *ஶில்பம்*, சித்திரம் போன்ற லலித கலைகளில் ஊற்றமிருப்பதில் தவறில்லை. ஆனால் இவற்றால் நம்முடைய மறந்தும் புறந்தொழாமையாகிற பாதிவ்ரத்யத்துக்குக் குறையில்லாமல் பார்த்துக்கொள்ளவேண்டும். ஆனால் பெரும்பாலும் இந்தக் கலைகள் பணம் பண்ணுவதற்கே பயன் படுகின்றன. பணம் பண்ணவேண்டும் என்னும் எண்ணம் ஏற்பட்டுவிட்டால் முதலில் ப$_3$லியாவது மறந்தும் புறந்தொழாமையே என்பதை நாம் உலகில் காண்கிறோம். இதனாலேயே 'மற்ற தெய்வங்களைப் பற்றிய பாட்டுக்களைப் பாடுவதில்லை, நாட்டியங்களை ஆடுவதில்லை, *ஶில்*பங்களை வடிப்பதில்லை, சித்திரங்களைத் தீட்டுவதில்லை' என்னும் விரதமுடைய கலைஞர்களைக் காண்பது அரிதாயிருக்கிறது. கலைஞர்கள் இப்படியிருப்பதால் இக்கலைகளை ரஸிப்பவர்களிலும் பெரும்பாலானவர்கள் மறந்தும் புறந்தொழாமையைக் கைவிட நேருகிறது. இதைப் பார்க்கும் போது ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு இக்கலைகளில் அதிகமான ஈடுபாடு இல்லாமலிருப்பதே நல்லது என்று தோன்றுகிறது. மற்ற தே$_3$வதைகளைப் பற்றிய கீர்த்தனங்களைக் கற்றுக்கொள்வதும், பாடுவதும், கேட்பதும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குத் தகாது. மற்ற தே$_3$வதைகளின் ஆலயங்களில் சென்று *ஶில்*பங்களையும், சித்திரங்களையும் ரஸிப்பதும் தகாது. தொழில் முறையில் இவற்றைக் கற்கநேரிட்டாலும் அந்த தே$_3$வதைகளிடம் ஈடுபாடு ஏற்படாமல் ஜாக்ரதையாயிருக்கவேண்டும். *'கலையறக் கற்ற மாந்தர் காண்பரோ கேட்பரோ தாம்'* என்னும் அருளிச்செயலின்படி நடப்பது மிகச் சிறந்தது.

*56. 'பத்தும் பத்தாகச் செய்து அறுவது'—இந்த வழக்கின் பொருளை அன்புடன் விளக்குவீர்களா?*

cent per cent (நூற்றுக்கு நூறு) என்று ஆங்கிலத்தில் உள்ள வழக்கைப் போன்றது 'பத்தும் பத்தாக' என்னும் தொடர். பரிபூர்ணமாக அல்லது நிறைவாக என்பது இதன் பொருள். 'செய்து அறுவது' என்பது செய்து முடிப்பது என்னும் பொருளை உடையது. ஆக இத்தொடர் 'பரிபூர்ணமாகச் செய்துமுடிப்பது' என்று பொருள்படும்.

R. பார்த்தசாரதி, சென்னை-80.

*57. ராமகிருஷ்ணமடம் முதலான ஸ்தாபனங்கள் பொது நலத் தொண்டு புரிவதுபோலே நம்து மடங்களும் பணிபுரிய வேண்டியது அவசியமல்லவா?*

மிகவும் அவசியம். கிறிஸ்தவப்பாதிரிகள் பள்ளிக்கூடங்கள் ஆஸ்பத்திரிகள் நடத்துவது, ஏழைகளுக்கு உதவுவது முதலான மக்கள் சேவையைச் செய்துகொண்டே தமது மத ப்ரசாரத்தையும் செய்கிறார்கள். அதனால் மக்கள் தொடர்பு மிகுதியாக ஏற்பட்டு அவர்களது மதம் வளருகிறது. நமது மடங்களும் இதைப் பின்பற்றினால் வைஷ்ணவமும் சிறப்பாக வளரும். ராமகிருஷ்ணமடம் கிறிஸ்தவர்களைப்போலவே மக்கள் சேவையைச் சிறப்பாகச் செய்துவருகிறது. இது மிகவும் பாராட்டத்தக்கது. ஆயினும் 'எம்மதமும் சம்மதம்' என்று பிரசாரம் செய்வதன்மூலம் அவர்கள் இந்துமதத்தைச்சேர்ந்த எல்லா மதங்களையும் சிறிது சிறிதாக அழித்துவருகிறார்கள். அரசியல்வாதிகளும், அரசியல் பத்திரிகைகளும், பொதுமக்களைத் திருப்திசெய்யவிரும்பும் அரசாங்க அதிகாரிகளும், ராமகிருஷ்ண மடம் போன்ற ஸ்தாபனங்களும் இப்படி ஓயாமல் சர்வமத சமரச ப்ரசாரத்தைச் செய்துகொண்டே இருந்தால், தத்தம் மதத்தில் நம்பிக்கை குறைந்த இந்துக்கள் சிறிது சிறிதாக கிறிஸ்தவர்களாக மாறும் அபாயம் உள்ளது. நாலு மனைவியரை மணம்புரியும் உரிமைபெற்று, இந்துக்களைப்போலே குடும்பக்கட்டுப்பாட்டையும் அநுஷ்டிக்காத முஸ்லிம்களும் காலக்ரமத்தில் பெருகிக்கொண்டே போவார்கள். இந்நிலை நீடித்தால், அடுத்த நூற்றாண்டில் இந்துக்கள் சிறுபான்மை

யாகி, கிறிஸ்தவர்கள் முஸ்லிம்கள் தயவில் வாழநேரிடும். இவ்வாபத்தை உணர்ந்து. ராமகிருஷ்ணமடம் முதலானவை 'எம்மதமும் சம்மதம்' என்னும் பிரசாரத்தைச் செய்யாம லிருப்பது நல்லது. இந்தப் பிரசாரத்தின் தீமையை 'ராமகிருஷ்ண மடத்தாரின் போலிச் சமரசவாதம்' என்னும் தலைப்பில் இம் மாத ஸுதர்சனம் (395) தலையங்கத்தில் விளக்கியிருக்கிறோம். (அதை ஸுதர்சனர்பதில் நான்காவது சதகத்திற்கு அநுபந்த மாகவும் இணைத்திருக்கிறோம்.) சர்வமத சமரசவாதத்தின் பொய்ம்மையையும், போலித்தன்மையையும் அதிலிருந்து நன்கு உணர்ந்து கொள்ளலாம். நம்முடைய ஸ்ரீவைஷ்ணவ மடங்கள் திவ்யதேசபரிபாலனம், ததீயாராதனம் முதலிய பொதுநலப் பணிகள் செய்வதையும் மறுப்பதற்கில்லை. மக்கள் சேவை யைச் சிறப்பாகச் செய்யாவிடினும், நமது மடங்கள் ராம கிருஷ்ணமடங்களைப் போலே முற்கூறியபடி மதத்திற்குத் தீங்கு செய்யாமல் இருப்பது பாராட்டத்தக்கது.

$ முரளி, அந்தணல்லூர்.

*58. "திருநாமத்தைக் கேலிசெய்து துணுக்குகளும், ஜோக்குகளும் வெளியிடாதீர்கள்" என்று விகடன் ஆசிரிய ருக்குக் கடிதம் எழுதினேன். அக்கடிதத்தை வெளியிடாத தோடன்றியில் 12—10—80 விகடனில் "காந்தியடிகளின் 111வது பிறந்த நாளிலே அவரின் கொள்கைகளுக்கு 111(நாமம்) செலுத்துகின்ற மக்கள் மத்தியிலே" என்று தொடங்கும் கடிதத் தையும். 19—10—80 விகடனில் "தமிழக அரசு மற்றவர்களுக்கு நாமம் போட்டதுபோல் நீங்களும் நாமத்தைக் குழைத்துப்போட்டு விட்டீர்களே. இது நியாயமா?" என்று எழுதியிருக்கும் கடிதத் தையும் விகடன் பிரசுரித்திருக்கிறது. கிறிஸ்தவர்களின் சிலுவையையோ, முஸ்லிம்களின் பிறையையோ, சைவர்களின் குறுக்குப் பட்டையையோ விகடன் இப்படி இழிவுபடுத்தத் துணியுமா?*

குறுக்குப் பட்டைக்காரர்களால் நடத்தப்படும் விகடனில் அதை இழிவுபடுத்த நினைக்கவும் மாட்டார்கள். குறுக்குப் பட்டையையோ, சிலுவையையோ, பிறையையோ இழிவு படுத்தினால் லக்ஷக்கணக்கில் விற்கும் விகடன் ஆயிரக்கணக்

காகக் குறைந்துவிடும். ஊருக்கு இளைத்தவர்களான வைஷ்ண வர்களின் நாமத்தை எவ்வளவு வேண்டுமானாலும் இழிவு படுத்தலாம். அதனால் பத்திரிகை விற்பனை குறையாது. சைவரத்வைத மஹாஜனங்களின் ஹாஸ்ய உணர்ச்சிக்கு இரை போடுகையாலே பத்திரிகை விற்பனை அதிகரிக்கவும் செய்யும். ஆகையால் 111போன்ற தெருப்பொறுக்கிகளின் பாஷைகளைப் பயன்படுத்தும் கடிதங்களுக்குத்தான் விகடன் இடமளிக்குமே யொழிய, பண்புடன் எழுதும் உங்களைப் போன்றவர்களின் கடிதங்களுக்கு இடமளிக்காது.

கு. சடகோபன், நெல்லை.

*59. 17—8—80 விகடன் இதழில் 'ஐஸ்வரியன்' என்னும் புனைபெயரில் மறைந்திருக்கும் திரு S. முகம்மது சாதிக் என்னும் இஸ்லாமிய மாணவ எழுத்தாளர் எழுதியுள்ள 'மாறிய கண்ணோட்டம்' என்னும் நாடகத்தில் பிராம்மணர்களை இழிவு படுத்தியிருப்பதைக் கண்டித்து ஒரு பிரசுரம் வெளியிட்டிருக்கி றேன். இதை விமர்சிக்க வேண்டுகிறேன். (இப்பிரசுரத்தை 'கு. சடகோபன், E-30 சங்கர்நகர்—627 357" என்னும் விலாசத் திற்கு 25பை. ஸ்டாம்பு அனுப்பிப்பெறலாம்.)*

பணம் பண்ணுவதையே குறிக்கோளாகக்கொண்ட விகடன் போன்ற பத்திரிகை நிர்வாகிகள் மான உணர்ச்சிமிக்க முஸ்லிம் களையும், கிறிஸ்தவர்களையும் இழிவுபடுத்தும் கதைகளை வெளி யிடமாட்டார்கள். மானஉணர்ச்சியை மறந்துவிட்ட இந்துக் களையும், குறிப்பாக பிராம்மணர்களையும், அதிலும் குறிப்பாக வைஷ்ணவர்களையும் இழிவுபடுத்தும் கதைகளையும், துணுக்கு களையும், ஜோக்குகளையுந்தான் வெளியிடுவார்கள். இவர்கள் மான உணர்ச்சியைத் திரும்பப்பெற்று, விகடன்போன்ற பத்திரிகை களை பஹிஷ்கரிக்கத் தொடங்கினாலொழிய இந்நிலை மாறாது.

V. ஸ்ரீநிவாஸன், திருச்சி-17.

*60. 15—9—80 'ஹிந்து'வில் பண்டித V. நடேசனின் சொற்பொழிவில் 'வியாஸருடைய பதினெட்டு புராணங்களில் ஹாலாஸ்யபுராணம் ஒன்று' என்று கூறியிருக்கிறார். இது சரியா? அதே சொற்பொழிவில் சிவனுடைய உபதேசத்தைக் கேட்கும்*

*போது கவனமில்லாமலிருந்ததற்காகப் பார்வதி சபிக்கப்பட்டாள் என்றும் கூறியிருக்கிறார். கவனமில்லாமலிருந்து சபிக்கப்பட்ட பார்வதியும், மனைவிசெய்த சிறுபிழைக்குக் கடுங்கோபம்கொண்டு அவளைச் சபித்த சிவனும் பரம்பொருளாயிருக்கமுடியாது என்று விளங்கவில்லையா ?*

பதினெட்டு புராணங்களைப் பற்றிய விபரம் அப்புராணங்களிலேயே பல இடங்களில் வந்துள்ளது. ஹாலாஸ்யபுராணம் என்பது அவற்றில் ஒன்றாக எங்கும் குறிப்பிடப்படவில்லை. மஹாபுராணங்களுக்கு மிகவும் பிற்காலத்தில் 'ஹாலாஸ்யம்' (ஆலவாய்) என்று பெயர்பெற்ற மதுரையைப்பற்றி எழுந்த ஸ்தலபுராணமே ஹாலாஸ்யபுராணமாகும். சிவனும் பார்வதியும் சாபத்துக்கு இலக்காவதும், சாபம் கொடுப்பதும் சைவர்களின் கதைகளில் மிகவும் ஸஹஜம், ப்₃ரஹ்மசாபத்தால் சிவன் கபாலியானதும், விஷ்ணுவால் சாப விமோசனம் பெற்றதும் இதிஹாஸபுராண ப்ரஸித்₃த₄ம். இதை ஏற்றுக்கொண்டு சைவர்களும் கபாலீச்வரர்கோயில், பிக்ஷாண்டார்கோயில் முதலான கோயில்களையும் கட்டிக்கொண்டிருக்கிறார்கள். இப்படி சாபத்துக்கு இலக்காகித் துன்புற்றுத் திரியும் தெய்வங்களைச் சைவர்களும், சாக்தர்களும் எப்படிப் பரம்பொருளாகக் கூறுகிறார்கள் என்று நமக்கு விளங்கவில்லை.

G. தோத்தாதிரி, சென்னை-27.

*61. இந்துக்கள், பிராம்மணரிடையே ஒற்றுமை ஓங்க, நண்பர்கள் வளர தங்கள் பத்திரிகைமூலம் பாடுபடவேண்டுமென—வைணவர்கள், வைணவம் வளர ஆசைப்படும் ஒருவனாக வேண்டிக்கொள்கிறேன்.*

நீர் விரும்பும் ஒற்றுமைக்கு நாம் பாடுபட்டு வருவது 48-வது கேள்விபதிலில் காட்டப்பெற்றது. காமகோடி பீடாதிபதியின் ஆலோசனைப்படி அவரது சீடர்களால் நடத்தப்படும் விகடன், இதயம், கல்கி, கலைமகள்போன்ற வலிமைமிக்க பொதுஜனப்பத்திரிகைகளே இவ்வொற்றுமையைக் குலைத்து வருகின்றன என்பது அப்பத்திரிகையைக் காணும் எவர்க்கும் விளங்கும். இதைப் பீடாதிபதிக்கும், அப்பத்திரிகைகளுக்கும் தங்களைப் போன்றவர்கள் உணர்த்த முன்வரவேண்டும்.

S. வேங்கடம், சமயபுரம்.

*62. "தேவி" பத்திரிகையின் (5—11—80) தீபாவளி மலரில் தொடக்கக் கட்டுரையில் கண்ணதாசன் "கீதையில் கண்ணன் சொல்லும் ஸத்வ ரஜஸ் தமோகுணங்கள் அவனிடமே மாறிமாறி வருகின்றன. துரியோதனனிடம் தூது சென்று கெஞ்சும்போது, ஸத்வகுணம் மேலோங்கி நிற்கிறது. ரஸ லீலையில், ரஜோகுணம் விளங்குகிறது. போர்க்களத்தில் அர்ச்சுனனுக்கு கீதையை உபதேசிக்கையில் (போர் புரியவேண்டிய சமயத்தில் தாமதம் செய்யும்) அவனது தமோகுணமும் விளங்குகிறது" என்று கண்ணனிடம் அபசாரப்பட்டுள்ளார். "ராமாவதாரத்துக்குத் தன்னம்பிக்கை குறைவு. ராமாயணத்தில் எந்த இடத்திலும் ராமனுக்கென்று தனி லக்ஷ்யமில்லை." என்று ராமனிடமும் அபசாரப்பட்டுள்ளார். இவருக்கு, கீதைக்கு உரையெழுதத் தகுதியுண்டா?*

கீ₃தை உபதே₃ஶித்தவுடன் கண்ணன் "இதைத் தவம் புரியாதவனுக்குச் சொல்லிவிடாதே. என்னிடம் ப₄க்தியற்றவனுக்கு ஒருபோதும் உபதே₃ஶிக்காதே. ஆசார்ய கைங்கர்யம் செய்யாதவனுக்குச் சொல்லிவிடாதே. என்னிடம் அஸூயையையுள்ளவனுக்குச் சொல்லவே சொல்லாதே" என்று பதறினான். தகுதியற்றவர்களுடைய காதில் இந்த மோக்ஷஶாஸ்த்ரம் விழுந்தால் அவர்கள் அதைத் தாறுமாறாக்கிக் கெடுத்துவிடுவார்கள் என்று ப₄யந்தே கண்ணன் இப்படிக் கூறினான். எத்தகுதியும் இல்லாதவர்கள் ஶாஸ்த்ரங்களுக்கு விளக்கம் எழுதப்புகுந்தால் கீ₃தையைப் பற்றியும், கண்ணனைப் பற்றியும், ராமனைப் பற்றியும் கண்ணதாசன் எழுதியிருப்பது போன்ற விளக்கங்கள்தான் வரும் என்று கண்ணன் பயந்தது நடந்துவிட்டது. கீ₃தை 17-ம் அத்தியாயத்தில் அர்ஜுனன் கேட்க, கண்ணன் ஸத்வ ரஜஸ் தமோ கு₃ணங்களை விரிவாக விளக்கி, ஸத்வ கு₃ணத்தையே கைக்கொள்ளவேண்டுமென்று பன்னிப்பன்னி உரைத்திருக்கிறான். கண்ணன் சொன்ன ஸத்வரஜஸ்தமோகு₃ண லக்ஷணங்களையே புரிந்துகொள்ளாமல், கண்ணனுக்கே ரஜஸ்தமோ கு₃ணங்கள் உண்டு என்று ஒருவர் எழுதுவதும், அவர் கீ₃தைக்கே விளக்கம் எழுதியவராயிருப்பதும்

இந்த நாட்டுக்கே பெரிய அவமானமாகும் என்பது சொல்லா மலே விளங்கும். ஒரு லக்ஷ்யமும் இல்லாத ஒருவர், தன்னம் பிக்கையே அற்ற ஒருவர் தன்னைப்போலவே அனைவரையும் பார்த்து, ராமனிடம் தன் குணங்களை ஏறிட்டிருப்பதைக் குறித்தும் நாம் ஆச்சர்யப்படுவதற்கில்லை. இத்தகைய பிதற் றல்களை வெளியிடும் பத்திரிகைகளே நம் நாட்டு இளைஞர் களைக் கெடுத்து வருகின்றன.

S. வேங்கடம். சமயபுரம் & க. இராசகோபாலன், சென்னை-4.

*63. இதே 'தேவி' பத்திரிகையிலும், 'இதயம்' (9-11-80) பத்திரிகையிலும் கிருபானந்தவாரியார் ''நரகாசுரனைக் கொன்ற நாள் என்னும் காரணத்தால் தீபாவளியைக் கொண்டாடுவதாகக் கூறுவது தவறு. அப்படிக் கொள்ளுவதானல் ராவணன், இரணியன் முதலான மற்ற அரக்கர்களைக் கொன்ற நாளையும் கொண்டாடவேண்டிவரும். ஆகையால் தீபமங்களஜோதியாக விளங்கும் சிவபெருமானை, அவரது இடப்பாகம் பெறும் பொருட்டு கௌரி நோற்றதாய், தீபங்களை வரிசையாக வைத்து வணங்குவ தான கேதாரகௌரீவிரதமே தீபாவளி என்று கொள்ள வேண்டும்'' என்று எழுதியிருப்பது சரியா ?*

இங்கு வாரியார் உலகமறிந்த ஒரு செய்தியை வேண்டு மென்றே மறைத்துவிட்டார். நரகாசுரன் தான் இறந்த ஐப்பசி சுக்ல சதுர்தசி பின்னிரவுவேளையில் எல்லோரும் தைலஸ்நானம் செய்து, புதிது உடுத்தி, தீபங்களை ஏற்றிக் கொண்டாட வேண்டும் என்று கண்ணபிரானிடம் வரம்வாங்கிப் பெற்ற தாகவும், அதன்படியே அந்த சமயத்தில் அனைவரும் தீபாவளி யைக் கொண்டாடுவதாகவும் பொதுஜனங்களிடையே நீண்ட நாளாக வரலாறு வழங்கிவருகிறது. ஸ்ரீபாத்மஸம்ஹிதை முத லான ஶாஸ்த்ரங்களிலும் இவ்விஷயம் உள்ளது. வேறு எந்த அரக்கனோ அசுரனோ இப்படி வரம்வேண்டியதாக வரலாறு இல்லையாகையால் அவர்களைக் கொன்றநாளைக் கொண்டாட வேண்டிய அவசியமில்லை. கேதாரகௌரீவிரதம் சைவர்களால் மட்டும் தீபாவளியை ஒட்டிவரும் அமாவாஸ்யையில் கொண் டாடப்படும் விரதமாகும். இவ்வருஷத்தைப்போல் பல வருஷங்களில் அது தீபாவளிப் பண்டிகைக்கு மறுநாளும் வரும்.

ஆகையால் உலகமறிந்த செய்தியை மறைத்து, இரண்டையும் வாரியார் ஒன்ருக்கப்பார்ப்பது அவரது சைவாபி₄மானத்தையே காட்டுகிறது.

V. ஸ்ரீநிவாஸன், திருச்சி-17.

*64. 16—9—80 ஹிந்து பத்திரிகையில் புத்தக விமர்சனப் பகுதியில் சென்னை சர்வகலாசாலையால் சேர அரசர்களைப்பற்றி* C. *பாலசுப்பிரமணியன் என்பவரால் எழுதப்பெற்ற (ரூ. 25 விலையுள்ள) புத்தகத்தை ஸ்ரீ* A. N. *மகரபூஷணம் என்பவர் விமர்சிக்கும்போது* "It was at this period that Malayalam replaced Tamil. Under what circumstances a whole people who had shaped and enriched it decided to give up a fully developed and adequate language in favour of a new venture will never perhaps be known." *[இந்தப் பதினென்ரும் நூற்ருண்டிலேயே கேரளநாட்டில் தமிழுக்கு பதிலாக மலையாளம் நாட்டுமொழியாக ஏற்பட்டது. ஒரு பெரிய நாட்டைச் சேர்ந்த அத்தனை ஜனங்களும் தாம் உருவாக்கி வளர்த்த ஒரு மொழியை (தமிழை), அதிலும் நன்கு வளர்ந்து எல்லாத் தகுதிகளும் பெற்றிருந்த மொழியை எந்தச் சூழ்நிலையில் முழுவதும் கைவிடவும், அதற்கு பதிலாக ஒரு புது மொழியைக் கைக்கொள்ளவும் முடிவுசெய்தார்கள் என்பது பெரும்பாலும் என்றும் அறியமுடியாததாகவே உள்ளது] என்று எழுதியுள்ளார். இதற்குக் காரணத்தை ஊகிக்க முடியுமா?*

பதினோராம் நூற்ருண்டு தமிழ்நாட்டைப் பொறுத்த வரையில் ஒரு பெரும்புரட்சி நடைபெற்ற காலம். எம்பெருமானர் தோன்றி விஶிஷ்டாத்₃வைத ஸ்ரீவைஷ்ணவ மதமே உண்மையான வைதி₃கமதம் என்று அசைக்கமுடியாதபடி ப₄ாரததேசமெங்கும், சிறப்பாகத் தமிழ்நாட்டிலும் நிலைநாட்டிய காலம் இதுவேயாகும். கேரளநாட்டில் அப்போது ஆதி₃சங்கரப₄க்தர்களான நம்பூதிரிகள் பெருவலிமைபெற்று விளங்கினர்கள். அவர்கள் 'இந்த இராமாநுசப் பெருவெள்ளம் கேரளநாட்டிலும் பாய்ந்துவிடுமோ' என்று பெரிதும் அச்சமுற்றிருக்க வேண்டும். கேரளநாட்டிலுள்ள திவ்யதேசங்களைத் திருத்துவதற்காக எம்பெருமானர் திருவனந்தபுரம் எழுந்தருளினர்

என்றும், பத்மநாபனின் அர்ச்சகர்களான நம்பூதிரிகளின் பிரார்த்த₂னையினால் அவ்வெம்பெருமான் எம்பெருமானார் உறங்கும்போது, அவரை உறங்கும் கட்டிலோடு திருக்குறுங்குடியில் திருப்பரியட்டப் பாறைக்குக் கொண்டுவந்து சேர்த்து விட்டான் என்றும், விழித்தெழுந்த எம்பெருமானார் 'எம்பெருமான் திருவுள்ளம் இதுவே' என்று உணர்ந்து கேரள திவ்யதேசங்களைத் திருத்தும் முயற்சியைக் கைவிட்டார் என்றும் வரலாறு கூறுகிறது. "ராமாநுஜருடைய ஆயிரக்கணக்கான *ஶி*ஷ்யர்கள் கேரளதேசத்திற்கு வந்து, அத்₃வைதத்தைத் தோல்வியுறச்செய்து, வி*ஶி*ஷ்டாத்₃வைத ஸ்ரீவைஷ்ணவ மதத்தை நிலைநாட்டி விடுவார்கள். நம்முடைய பிழைப்புக்கு ஆபத்து வந்துவிடும்" என்னும் ப₄யத்தாலேயே மிக வலிமைபெற்றிருந்த கேரளநம்பூதிரிகள் வி*ஶி*ஷ்டாத்₃வைத ஸ்ரீவைஷ்ணவ வித்₃வான்கள் கேரளம் வந்து பொதுமக்களிடம் பிரசாரம் செய்யமுடியாதபடி தமிழை நாட்டைவிட்டுத் துரத்தி, புது மொழியான மலையாளத்தை உருவாக்கிப் பொதுமக்களிடையே நிலைநிறுத்தியிருக்கவேண்டும். தமிழ்நாட்டோடு நில்லாமல், ஆந்திர நாட்டிலும், கன்னட நாட்டிலும், வடநாட்டிலுங் கூடச் சிறப்பாகப் பரவியிருக்கும் வி*ஶி*ஷ்டாத்₃வைத ஸ்ரீவைஷ்ணவ மதம் கேரளநாட்டில் அடியோடு பரவாமலிருப்பதே இதைத் தெளிவாகக் காட்டுகிறது.

K. ராஜகோபாலன், 20 காந்தி ரோடு, தஞ்சாவூர்.

*65. உங்களுடைய (ஐப்பசி-மீ?) தலையங்கத்தையும், 'ஸுதர்சனர் பதில்'கள் சிலவற்றையும் பார்த்தேன். அவை கிணற்றுத் தவளை போன்ற குறுகிய மனப்பான்மையையும், மத வெறியையும் காட்டுகின்றனவேயொழிய விஷய ஞானத்தைக் காட்டவில்லை. நாத்திகர்கள் ஆத்திகத்தைக் கடுமையாகத் தாக்கிவரும் இந்நாளில் நீங்கள் உங்களையறியாமல் ஐந்தாம் படை வேலை செய்து ஆத்திகத்தை அழித்து வருகிறீர்கள் என்பதை உங்களுக்கு உணர்த்தி, இந்த அழிவு வேலையை விட்டு ஆக்க வேலைகளைச் செய்யும்படி, ஒரு வயதான ஆத்திகன் என்ற முறையில் தங்களுக்கு அறிவுறுத்த விரும்புகிறேன்.*

ஸுதர்சனத்தைத் தொடர்ச்சியாகப் படித்து வரும் பல்லாயிரக்கணக்கான அறிவாளிகளின் கடிதங்களுக்கிடையில்,

ஓரிரு இதழ்களைப் படித்துவிட்டு வசைபாடும் தங்களுடைய தைப் போன்ற கடிதங்களும் ஒன்றிரண்டு வருவதுண்டு. விலாசமில்லாத அவை குப்பைத் தொட்டியை அடையும். விலாசங்கொடுத்து எழுதியிருக்கும் தங்களைச் சில கேள்விகள் கேட்பதன்மூலம் எனது நிலையை விளக்க முயல்கின்றேன். வசைமொழிகளைப் பொழியாமல், நேரில் வந்து நட்புறவோடு இக்கேள்விகளுக்கு பதில் கூறமுடியுமானால், தங்களைப் வரவேற்கிறேன். கேள்விகள்:—(1) இன்று (28-11-80) தனித்தபாலில் ஸுதர்சனர் பதில் மூன்று சதகங்களையும் அனுப்பியிருக்கிறேன். இவற்றில் 300 கேள்விகளுக்கு மேல் ஸுதர்சனரின் பதில்கள் உள்ளன. இவற்றில் எங்தெந்த பதில்கள் குறுகிய கிணற்றுத்தவளை மனப்பான்மையையும் மதவெறியையும் காட்டுகின்றன? *(2)* வலிமைபெற்ற பொது ஜனப் பத்திரிகைகளிலும், அவற்றில் அடிக்கடி பாராட்டப் பெறும் காமமோடிபீடாதிபதிகள், கண்ணதாசன், நா. மகாலிங்கம், வாரியார் போன்ற லௌகிக வைதிகப் பிரமுகர்களின் கட்டுரைகளிலும், பேச்சுக்களிலும் உள்ள விஷயங்களே ஸுதர்சனர் பதிலில் பெரும்பாலும் விமர்சிக்கப்பட்டுள்ளன. அவ்விஷயங்களில் குறுகியமனப்பான்மையும், மதவெறியும், பொய்ம்மையுமே நிறைந்திருக்கின்றன என்பதையும், அவற்றுக்கு பதில்சொல்லுவதாலேயே ஸுதர்சனர் பதில்கள் தங்களைப்போன்றவர்களுக்குக் கசப்பாயிருக்கின்றன என்னும் உண்மையையும் தங்களால் மறுக்கமுடியுமா? *(3)* லக்ஷக்கணக்கானவர்கள் படிக்கும் பத்திரிகைகளில் விஷ்ணுவையும், வைஷ்ணவத்தையும் தாக்கியும், இழிவுபடுத்தியும் வெளிவரும் கட்டுரைகள் ஆத்திகத்தை அழிக்கும் ஐந்தாம்படை வேலையைச் செய்கின்றனவா? ஆயிரக்கணக்கானவர்களிடமே (பெரும்பாலும் வைஷ்ணவர்களிடமே) பிரசாரமுள்ள ஸுதர்சனம் அவைபற்றிக் கேள்வி கேட்கும் வைஷ்ணவர்களுக்கு உண்மையைத் தெளிவுபடுத்துவதற்காக அவற்றுக்கு பதிலுரைப்பது ஆத்திகத்தை அழிக்கும் ஐந்தாம்படை வேலையா? (4) ஐப்பசி மாதத் தலையங்கத்தில்—ராமகிருஷ்ண மடத்தைச் சேர்ந்த ஒருவர் சங்கராது நூல்களையோ, ராமாநுஜர் முதலிய வைஷ்ணவாசார்யர்களது நூல்களையோ படிக்காமல் வைஷ்ணவாசார்யர்களைத் தாக்கி

ராமகிருஷ்ணவிஜயத்தில் எழுதியிருந்தது விமர்சிக்கப்பட்டிருந்தது. இதைக் கண்டபின்பு ராமகிருஷ்ணமடத்தைச் சேர்ந்தவர்கள் இதிலுள்ள நியாயத்தை உணர்ந்து வாளாவிருக்கின்றனர். தாங்கள் இதில் காணும் தவறு என்ன? வசவுமாரிபொழியாமல், நேரில் வந்தோ, சுருக்கமாகக் கடிதம் மூலமாகவோ இக்கேள்விகளுக்குத் தங்களால் பதிலெழுத இயலுமானால், செய்யவும்.

R. பார்த்தசாரதி, சென்னை-80.

*66. 27-10-80 ஹிந்து பத்திரிகையின் கடைசிப் பக்கத்தில் அச்சிடப்பெற்றுள்ள ஸ்ரீ S. R. தேமொழியாரது பெரியபுராண உரையில் "(சிவமதத்தில்) பக்தன் எந்த தெய்வத்தை வேண்டுமானாலும் வழிபடலாம். ஆனால் மற்ற மதங்களின் மேல் துவேஷம் கூடாது. தேவாரம், திருவாசகம் எழுதிய நாலு நாயன்மார்களும் வைஷ்ணவத்தைத் தங்கள் பாடல்களில் புகழ்ந்திருக்கிறார்கள்" என்று பேசியிருக்கிறார். இது சரியா?*

இது பச்சைப் பொய். நாயன்மார்கள் நால்வரும் "பரம்பொருளான சிவனைத் தொழுதால்தான் முக்தி கிட்டும். மற்ற தெய்வங்களைத் தொழுதால் அற்பமாய், நிலைநில்லாத பலன்களையே பெறலாம்" என்றே தங்கள் பாடல்களில் கூறியிருக்கிறார்கள்; பண்டைத் தமிழ் இலக்கியங்களிலும், வடமொழி இலக்கியங்களிலும் காணப்படாத அடிமுடி தேடிய கதை, கண்ணைப் பிடுங்கி அர்ச்சனை செய்த கதை, விஷ்ணுவின் அவதாரங்களைக் கொன்ற கதைகள் முதலான கதைகளைச் சொல்லி விஷ்ணுவையும் வைஷ்ணவத்தையும் ஏராளமான பாடல்களில் தாழ்த்திக் கூறியிருக்கிறார்கள். ஞானசம்பந்தர் தமது ஒவ்வொரு பதிகத்திலும் ஒருபாடலில் விஷ்ணுவைத் தாழ்த்துவதையும், மற்றொரு பாடலில் ராவணனைப் புகழ்வதையும் நியமமாகக் கொண்டிருக்கிறார். ஆகையால் தேமொழியார் கூறுவது—சொற்பொழிவைக் கேட்பவர்களைத் திருப்தி செய்வதற்காகச் சொல்லப்பட்ட பொய்மொழியேயாகும்.

கூரம் ஸ்ரீவத்ஸ கே. வரதராஜன் (67—71 கேள்விகள்) சென்னை-9.

*67. எம்பெருமானை "பெருமான்" என்பதன் பொருள் என்ன?*

பெருமான் என்பதே பெருமாள் என்று பூர்வாசார்யர்கள் காலத்திலிருந்து ஸ்ரீவைஷ்ணவர்களிடையே மருவி வழங்கிவரு

கிறது. இப்பதத்தை அருணகிரிநாதரும் தமது நூல்களில் முருகனைக் குறித்து வழங்கியிருக்கிறார். குணங்களில் சிறந்தவன் என்பது இதன் பொருள். அதனாலேயே குணங்களில் தலைசிறந்தவனான ஸ்ரீராமபிரானைப் பூர்வாசார்யர்கள் 'பெருமாள்' என்றே வழங்கினர். திவ்யதேசத்து எம்பெருமான்களையும் இக்காரணத்தாலேயே வைஷ்ணவவுலகம் பெருமாள் என்று வழங்கிவருகிறது.

*68. 'தங்கையை மூக்கும் தமையனைத் தலையும் தடிந்த எம் தாசரதி' என்று சக்கரவர்த்தித் திருமகனே சூர்ப்பணகையை தண்டித்ததாக அருளிச்செயல்களில் பிரஸித்தம். இப்படியிருக்க இளையபெருமாள் அறுத்ததாகக் கூறப்படுகிறதே. எது சரி என்பதை விளக்கவேண்டுகிறேன்.*

வால்மீகியே ஸ்ரீராமாயணத்தில் சூர்ப்பணகையை மூக்கறுத்தது இளையபெருமாளே என்று கூறியிருக்கிறார். அவரே "*ராமஸ்ய த₂க்ஷிணோ பா₃ஹு:*" [ரா ஆ 84-18] [லக்ஷ்மணன் ராமனுடைய வலது கையாவான்] என்று இளையபெருமாளை ராமனின் வலதுகையாகக் கூறியிருக்கையால், இராமன் சூர்ப்பணகையின் மூக்கை அறுத்ததாக ஆழ்வார்கள் அருளியிருப்பதற்கு "பெருமாள் தமது வலதுகையான இளையபெருமாளைக் கொண்டு சூர்ப்பணகையின் மூக்கை அறுத்தார்" என்று பூர்வாசார்யர்கள் உரையிட்டுள்ளனர். ஆகையால் வால்மீகியின் வாக்குக்கும், ஆழ்வார்களின் அருளிச்செயலுக்கும் விரோதமில்லை.

*69. "ஆணல்லன் பெண்ணல்லன் அல்லா அலியுமல்லன் காணலுமாகான் உளனல்லன் இல்லையல்லன் பேணுங்கால் பேணும் உருவாகுமல்லனுமாம்" என்று திருவாய்மொழி அருளிச்செய்கிறது. இது 'எல்லாம் மாயை' எனும் அத்வைதக் கருத்தாகாதா? விளக்கவேண்டுகிறேன்.*

இந்தப் பாசுரப்பொருளை பட்டர் உபந்யஸித்துக்கொண்டிருந்தபோது ஒரு தமிழ்ப்புலவர் "இப்படி ஆழ்வார் சொல்லுகிறபடியால் இந்தத் தத்துவம் சூன்யமோ?" என்று பட்டரைக் கேட்டாராம். அதற்கு பட்டர் "'ஆணல்லன், பெண் அல்லன், அல்லா அலியும் அல்லது' என்றிராமல் 'அல்லன் அல்லன்' என்றே இருக்கையால், இங்கு கூறப்படும் தத்துவம்

உலகில் காணும் ஆண் பெண் அலிகளைக் காட்டிலும் மிகவும் வேறுபட்ட புருஷோத்தமன் என்று உணர்த்தப்பட்டது.'' என்று ஸமாதானம் அருளினாராம். ''காணலுமாகான்'' என்றது ''ஆண் பெண் அலிகளைக் காணும் பிரமாணங்களால் காணப்படாதவன்'' என்று பொருள்படுகிறது. 'உளனல்லன் இல்லையல்லன்' என்றது 'இவனை ஆஶ்ரயிக்காதவர்களுக்கு இல்லாதவனாயிருப்பான்' என்றும், 'ஆஶ்ரயித்தவர்களுக்கு உள்ளவனாகவேயிருப்பான்' என்றும் பொருள்படுகிறது. 'பேணுங்கால் பேணும் உருவாகும்' என்றது 'அடியார்கள் விரும்பும்போது அவர்கள் விரும்பும் வடிவை உடையவனாவான்' என்று பொருள்படுகிறது. 'அல்லனுமாம்' என்றது 'இப்படி உருவுடையவனாய் இருந்தபோதிலும் ஶிஶுபாலன் முதலானவர்களுக்குக் கிட்ட அரியவனாயிருப்பான்' என்று பொருள்படுகிறது. ஆகையால் தத்துவம் சூன்யம் என்றோ, எல்லாம் மாயை என்றோ இப்பாசுரத்திலிருந்து ஏற்படாது. இக்கொள்கைகளை ஆழ்வார் பல பாசுரங்களில் மறுத்திருக்கிறார். ''கூடிற்றாகில் நல்லுறைப்பு'' [திருவாய் 8-8-9] என்னும் பாசுரத்தில் ஆழ்வார், மாயாவாதிகள் 'ஜீவன் மோக்ஷத்தில் ப்ரஹ்மமாகவே ஆகிறது' என்று கூறுவதை நேரே கண்டித்திருக்கிறார்.

*70. ஸ்வாமி தேசிகனுடைய ''வைராக்ய பஞ்சகம்'' என்னும் ஸம்ஸ்கிருத ஸ்தோத்ரத்தைப்பற்றி வித்யாரண்யர் எனும் அத்வைத பண்டிதரை இணைத்து ஒரு சம்பவம் கூறப்படுகிறதே! கிருஷ்ணதேவராயரின் ஆஸ்தான கவியான வித்யாரண்யரும் ஸ்வாமி தேசிகனும் ஒருகாலத்தில் இருந்தவர்களா?*

விஜயநகர ஸாம்ராஜ்யத்தை ஸ்தாபித்த ஹரிஹர புக்கர்களுக்கே வித்யாரண்யர் மந்திரியாயிருந்தார் என்பது வரலாறு. பிற்காலத்தில் வந்த கிருஷ்ணதேவராயருக்கல்ல. வித்யாரண்யர் தம்மைப்போலே ராஜசபைக்கு வந்துவிடும்படி ஸ்ரீ வேதாந்த தேசிகருக்கு ஓலை அனுப்பினார் என்றும், 'அரசர்களைத் துதி பாடிப் பொருள் பெறுவதில் தமக்கு விருப்பமில்லை' என்னும் கருத்தையுடைய ஐந்து ஶ்லோகங்கள்கொண்ட வைராக்ய பஞ்சகத்தை தேசிகன் அவருக்கு பதிலாக அனுப்பினார் என்றும் சரித்திரம் கூறுகிறது.

*71. ''ஊர்த்₄வபுண்ட்₃ர திலகம்'' (வரதராஜஸ்தவம்) ''கஸ்தூரீ கலிதோர்த்₄வபுண்ட்₃ர திலகம்'' [பட்டர் அருளிய ரங்க₃நாத₂ஸ்தோத்ரம்] இத்யாதி₃களால் எம்பெருமான் திருநெற்றியில் சாத்தியிருப்பது திலகமே என்பது ஸூசிதமாகிறது. இங்ஙனமிருக்க எம்பெருமானுக்குத் திருமண்காப்பு அணிவித்தல் எப்பொழுது ஏற்பட்டது ?*

திலகம் என்பது நெற்றிக்குறிக்குப் பொதுவான பெயர். பெண்கள் இட்டுக்கொள்ளும் நெற்றிப்பொட்டையும், எம்பெருமானுடைய கஸ்தூரி திருமண்காப்பையும் திலகம் என்று இப்போதும் வழங்குவதைக் காணலாம். வரதராஜஸ்தவத்தில் ஆழ்வான் ''ப₄க்தர்களை உயர்கதிக்கு அழைத்துச் செல்வதால், அவர்களிட்டுக்கொள்ளும் ஊர்த்₄வபுண்ட்₃ர திலகத்தை அபி₄மானத்தால் நீயும் சாத்திக்கொள்கிறாயா?'' என்று பொருள்படக் கேள்வி கேட்டிருக்கையால், மூலவரான எம்பெருமான் ஸ்ரீ வைஷ்ணவர்கள் அணிந்துகொள்வது போன்ற ஊர்த்₄வபுண்ட்₃ரதிலகமாகிய திருமண்காப்பையே அக்காலத்திலும் அணிந்திருந்தான் என்று விளங்குகிறது. ப₄ட்டர், 'கஸ்தூரீ கலிதோர்த்₄வபுண்ட்₃ரதிலகம்' என்று அருளியது உத்ஸவமூர்த்தியின் கஸ்தூரி திருமண்காப்பைப் பற்றியது. ஆகையால் இரண்டு அமைப்பும் பூர்வாசார்யர்கள் காலத்திலும் இப்போதுள்ளபடியே இருந்தது என்று விளங்குகிறது.

J. ராமாநுஜம், ஈரோடு.

*72. 'வைஷ்ணவ பரிபாஷையும் சில ஸத்விஷயங்களும்' என்னும் தலைப்பில் லிப்கோ வெளியிட்டுள்ள புத்தகத்தில் ''பாஷ்யகாரர் வடகலைக் கோயிலான மதுராந்தகத்தில் ஸமாஶ்ரயணம் செய்துகொண்டதன்மூலம் வடகலையினரும், தென்கலையினரும் ஒற்றுமையாய் வாழவேண்டும் என்று உணர்த்தினார்'' என்று எழுதப்பட்டுள்ளது. இதை விமர்சிக்கவேண்டுகிறேன்.*

எழுதியவர் நல்லெண்ணத்தோடு எழுதியிருந்தபோதிலும் இது எழுதியவரின் ஆராய்ச்சியின்மையைக் காட்டுகிறது. ''தென்கலையினரான பா₄ஷ்யகாரர் வடகலைக்கோயிலான மதுராந்தகத்தில் ஸமாஶ்ரயணம் செய்துகொண்டார்'' என்னும் கருத்து இவ்வாக்யத்தில் த்₄வனிக்கிறது. மாமுனிகள் வரையி

'ஹுள்ள ஆசார்யர்கள் காலம் ஈருக—'ஸ்ரீவைஷ்ணவப் பூர்வாசார்யர்களிடையிலும், திவ்யதேசங்களிலும் தென்கலை வடகலை என்னும் வேறுபாடு இருந்தது' என்று காட்டும் எந்த ஆதாரமும் இல்லை. ஆகையால் ஸ்ரீவைஷ்ணவர்களிடையே ஒற்றுமையை வலியுறுத்துவதற்கு இதைப் பயன்படுத்தியிருக்க வேண்டாம். வேறு பல காரணங்களைக் காட்டியிருக்கலாம்.

S. வரதராஜன், ஸ்ரீரங்கம்..

*73. நவம்பர் '80 கலைமகள் வினாவிடை மாலையில் "சிவனே முருகன் என்று கந்தபுராணம் சொல்லுகிறது. அருணகிரிநாதரோ, 'மாலோன் மருகன்' என்று அடிக்கடி முருகனைச் சொல்லுகிறார், இரு கூற்றின் பொருத்தத்தையும் தெளிவுபடுத்துக" என்னும் பதினோராவது வினாவின் விடையில் "சிவபெருமானே முருகனாகத் திருவவதாரம் செய்தான். முருகன் வடிவம் சிவபெருமான் வடிவத்திலும் வேறாக அமைந்தது. அம்பிகை பால் ஊட்டினாள். அதனால் அவன் பார்வதி நந்தனன் ஆனான். அம்முறையில் உமாதேவியின் தமையனாராகிய திருமால் அவனுக்கு மாமனானார்" என்று திரு கி. வா. ஜகந்நாதன் கூறியுள்ளார். மனைவி கணவனுக்குப் பாலூட்டலாமா?*

சங்கப்பாடல்களில் 'முருகன் சிவனின் அவதாரம்' என்று எங்கும் கூறப்படவில்லை. சிவனுக்கும் பார்வதிக்கும் பிறந்த பிள்ளையாகவே முருகன் கூறப்பட்டுள்ளான். சங்கப் பாடல்களிலும், அதற்குப் பின்பு சுமார் ஆயிரம் வருஷங்களுக்கு மேலுள்ள தமிழ் இலக்கியங்களிலும் முருகன் மாலோன் மருகன் என்று குறிக்கப்படவில்லை. அருணகிரிநாதரே கிருஷ்ணாவதாரத்தில் காளி கண்ணனுக்குச் சகோதரியாகப் பிறந்ததைக் கொண்டு முருகனுக்கு 'மாலோன் மருகன்' என்னும் உறவை ஏற்படுத்தினார். ராமாயணம் முதலான பழைய வடமொழி இலக்கியங்களிலும் முருகன், சிவனும் பார்வதியும் புணர்ந்து பெற்ற பிள்ளையாகவே கூறப்படுகிறானேயொழிய சிவனுடைய அவதாரமாகக் கூறப்படவில்லை. கந்தபுராணத்தைக்கொண்டு முருகனைச் சிவனுடைய அவதாரமாகக்கொண்டால் 'கணவனே மனைவியிடம் பால் குடித்தான்' என்னும் அவப்பெயர் சிவனுக்கு ஏற்படுகிறது. சைவர்கள் சிந்திக்கவேண்டிய விஷயம் இது.

ராமதாஸ T. N. கிருஷ்ணமாச்சாரி, வள்ளியூர். (74 to 76 கேள்விகள்)

*74. வைஷ்ணவ வித்வான்கள் சிலர் சிவபுராணங்களையும், சைவசமயக் குரவர்களின் கதைகளையும் உபந்யஸிக்கிறார்கள். இது நியாயமா? இவற்றை வைஷ்ணவர்கள் கேட்கலாமா?*

தலைசிறந்த ஹரிகதை வல்லுநரும், கீர்த்திமூர்த்தியுமான ஸ்ரீரங்கம் சடகோபாசார்ய ஸ்வாமி நந்தன் சரித்திரம் முதலானவற்றைச் சைவர்களும் வியக்கும்படியாக உபந்யஸித்து வந்தார். அவர் அடியேனிடம் நேரில் சொன்னதாவது—"நான் ஒரு வியாபாரி. வியாபாரியிடம் குங்குமப்பூ, பச்சைக் கருப்பூரம் முதலானவையும் வாங்கலாம். வெங்காயம், உள்ளிப் பூண்டு முதலானவையும் வாங்கலாம். யாருக்கு எது தேவையோ அதை நான் விற்கிறேன். அவரவர்கள் வாங்கிக்கொள்கிறார்கள். வைஷ்ணவர்களாகிய நீங்கள் என்னுடைய சைவப்ரஸங்கங்களுக்கு வரக்கூடாது" என்று. தங்கள் கேள்விக்கு இந்த பதிலே போதுமானது.

*75. 28—11—80 தினமணி பக்கம் 3ல் "வேதமும் மூவரும் தொழும் தேவி தத்துவம்" என்ற தலைப்பில் மதுரை தல்லாகுளம் பிரஸன்ன வேங்கடாசலபதி கோயிலில் திருவெண்காடு முத்துசாமி சாஸ்திரிகள் நிகழ்த்திய தேவீபாகவதச் சொற்பொழிவில் காளியை மும்மூர்த்திகளும் வேதங்களும் தொழுவதாகவும், மும்மூர்த்திகளையும் ரக்ஷிப்பவள் காளியே என்றும் உரையாற்றியதாகச் செய்தி வந்துள்ளது. இதுபற்றி விமர்சிக்க வேண்டுகிறேன்.*

'தேவீ பாகவதம்' என்னும் நூல் நானூறு வருடங்களுக்கு முன் எவராலும் கையாளப்படாத நவீன நூலாகும். வேதங்களெல்லாம் ஒருமுகமாக "நாராயணனே பரம்பொருள். அவனே எல்லா தெய்வங்களையும் படைத்தவன்" என்று முழங்கியிருக்க, சாக்தர்களால் சமீபகாலத்தில் கல்பிக்கப்பட்ட தேவீ பாகவதத்தில் அதற்கு மாறாகப் பேசியிருப்பதை வைதிகர்கள் பொருட்படுத்தமாட்டார்கள். வேதவிருத்தமாய், விஷ்ணுவைத் தாழ்த்திக் கூறும் இந்த நூலை விஷ்ணுகோவிலில் உபந்யஸிக்க ஏற்பாடு செய்தது மிகவும் அருவருக்கத்தக்க செயலாகும். மதுரையிலுள்ள வைஷ்ணவர்கள் இனியாவது இத்தகைய உபந்யாஸங்கள் விஷ்ணுகோவில்களில் நடைபெறாமல் பார்த்துக்கொள்வார்கள் என்று நம்புகிறோம்.

*76. 2—11—80 தினமணிச் சுடரிலுள்ள 'சென்னையில் கௌமாரம்' என்னும் கட்டுரையில் ''ராமன் ராஜ்யம் துறந்து கானகம் செல்லுங்காலை அவன் அன்னை கௌசல்யாதேவியார் 'ஸ்கந்த₂ர்ச ப₄க₃வான் தே₃வ:' என்றல்லவோ விடைகொடுத்தாள்'' என்று எழுதியிருக்கிறது. இஃது உண்மையா?*

ராமன் வனம் செல்லும்போது கௌஸல்யாதேவி தன் பரிவினாலே, எல்லா தேவதைகளும் ராமனை ரக்ஷிக்கவேண்டும் என்று மங்களாஶாஸனம் செய்தாள். இதேபோல் ஸீதாதேவியும் இந்திரன் முதலான தெய்வங்கள் ராமனை ஒவ்வொரு திக்கிலும் ரக்ஷிக்கவேண்டும் என்று வாழ்த்தியிருக்கிறாள். பொங்கும் பரிவினாலே கலங்கி, ராமனுக்கு அவனால் படைக்கப்பட்ட தெய்வங்களையே ரக்ஷகர்களாகும்படி ப்ரார்த்தித்தவர்கள் பலருண்டு. இதனால் அந்த தெய்வங்கள் பரம்பொருளாகிவிடமாட்டார்கள். 'பார்வதியும் சிவனும் புணர்ந்துபெற்ற பிள்ளையே கந்தன் என்று ஸ்ரீராமாயணத்தில் விரிவாக விஶ்வாமித்ரர் வர்ணித்திருப்பது கந்தன் பரம்பொருளல்ல என்று காட்டுகிறதே' என்று இக்கட்டுரையாளரை எவராவது கேட்டால் திசைதொறும் பார்த்து விழிப்பது தவிர வேறொன்றும் செய்யகில்லார்.

G கிருபாநிதி, புதுச்சேரி.

*77. 65-வது கேள்வியில் தஞ்சாவூர் K. ராஜகோபாலன் கீழ்மையான சொற்களால் தங்களைத் தாக்கி எழுதியுள்ளதைப் பார்த்தேன். இவர் ஆஸ்திகரோ இல்லையோ, வயதானவர் என்ற அளவிலும் யோக்யதையில்லாமல் எழுதியிருக்கிறார். தமது அறியாமையையே அறிவாக மயங்கியுள்ளார் என்று தெரிகிறது. வைணவவுலகுக்குத் தாங்கள் செய்துவரும் தொண்டு காலத்தைக் கடந்து நிற்கும். நான்குநாள் கூட்டம் கூட்டி, கைதட்டிவிட்டு, காற்றோடு போகும் விஷயமல்ல தாங்கள் செய்துவரும் காரியம் என்று நினைக்கும்பொழுது நெஞ்சு நெகிழ்ந்து போகிறேன்.*

இத்தகைய கருத்துக்களைப் பலர் தெரிவித்திருக்கிறார்கள். '' K. ராஜகோபாலன், 20, காந்திரோடு, தஞ்சாவூர் '' என்னும் விலாஸத்திற்கு அனுப்பப்பட்ட ஸுதர்சனர் பதில் மூன்று சதகங்களும் 'இப்பெயரோடு எவரும் இல்லை' என்னும் குறிப்போடு நமக்கே திரும்பிவந்துவிட்டது. இத்தகைய அநாமதேயப்

பேர்வழிகள் வசவுமாரி பொழிவதுகண்டு கலங்கவேண்டிய அவசியமில்லை என்று அன்பர்களுக்கு உணர்த்தி நிற்கின்றேன்.

S. கோபாலதேசிகன். ஸ்ரீநிவாஸநகர், ஸ்ரீரங்கம் (78to82 கேள்விகள்)

*78. நாராயணனே பரம்பொருள் என்று நிலைநாட்டிய வேதமும் சங்க இலக்கியங்களும் மற்ற தெய்வங்களையும் புகழ்ந்து பாடியிருப்பதிலிருந்து விஷ்ணுவையே பரம்பொருளாக அறிந்தவர்களும் மற்ற தெய்வங்களையும் ஆராதிக்கவேண்டுமென்பது தெரிகிறதே?*

மற்ற தெய்வங்களைப் புகழ்ந்து பாடிய வேதமும் சங்க இலக்கியங்களும் திருமால் எனப்படும் ஸ்ரீமந்நாராயணனே அந்த தெய்வங்களுக்குக் காரணபூதன் என்றும், அந்தர்யாமியாயிருந்து நடத்திச் செல்பவன் என்றும், அவர்களாலும் ஆராதிக்கப்படுபவன் என்றும் பேசுகின்றன. ஆகையால் எந்த தெய்வத்தை எவ்வளவு புகழ்ந்தாலும் அந்தப் புகழுரைகளெல்லாம் அந்த தெய்வத்தைப் படைத்தளித்தழிப்பவனாய், அந்தர்யாமியாயிருந்து நடத்திச் செல்பவனாய், அந்த தெய்வத்தால் ஆராதிக்கப்படுபவனான நாராயணனையே சேரும் என்பது சொல்லாமலே விளங்கும். "நும் நும் இட்டாதெய்வம் ஏத்தினால் செம்மின் சுடர்முடி என்திருமாலுக்குச் சேருமே" [திருவாய் 3-9-6] என்றார் நம்மாழ்வார். இனி, கலிகாலத்தில் பரம்பொருள் நாரணன் என்று உணராமலிருப்பவர்களே பற்பலர். பரம்பொருள் நாரணன் என்று உணர்ந்தும் பல காரணங்களால் பல தெய்வங்களையும் தொழுபவர் பலர். பரம்பொருள் நாரணனே என்று உணர்ந்து, மறந்தும் புறந்தொழாமலிருப்பவர்கள் ஒரு சிலரே. கலிகாலத்துக்கு முன்பிருந்த கண்ணன் காலத்திலேயே இந்நிலைதான் இருந்தது என்பது கீதையிலிருந்து விளங்குகிறது. சங்ககாலத்திலும் மூன்று நான்காம் பரிபாடல்களில் திருமாலைப் பரம்பொருளாகப் பாடியிருக்கும் கடுவன் இளவெயினனார் ஐந்தாம் பரிபாடலில் முருகனை அவனுக்கு உள்ள பெருமைகளைச் சொல்லிப் பாடியிருப்பதைக் காண்கிறோம். 'தெய்வம் தொழாஅள்' என்று வள்ளுவரால் போற்றப்பட்ட மறந்தும் புறந்தொழாமையாகிற கற்புநெறியைக் கடைப்பிடிப்பவர்கள் என்றுமே குறைவாகத் தானிருப்பார்கள். உலகிலுள்ள பலதரப்பட்ட மக்களுக்கு

தன்மைகளைக் கூறுவதற்காகப் பல தெய்வங்களைப் பற்றிய யாக$_3$ங்களை விதி$_4$த்து, அவர்களுக்குரிய மந்திரங்களைப் பாடிய வேத$_3$மே *“சதுர்ஹோதாரோ யத்ர ஸம்பத$_3$ம் க$_3$ச்ச$_2$ந்தி தே$_3$வை:”* என்னும் வாக்யத்தில் அந்த யாக$_3$ங்களெல்லாம் அந்த தெய்வங்களுக்கு அந்தர்யாமியான பரமபுருஷனையே ஆராதி$_4$ப்பவை என்று முழங்கிற்று. ஆகையால் தலைசிறந்த ஜ்ஞானிகள் மறந்தும் புறந்தொழாமையாகிற கற்புநெறியைக் கடைபிடிக்கவேண்டும் என்பதே வேத$_3$த்தின் கருத்துமாகும். *‘ஸர்வம் அந்யத் பரித்யஜ்ய’* [அத$_2$ர்வசிகை$_2$] என்று உபநிஷத்தும் இதையே ஓதிற்று. கீ$_3$தாசார்யனும் புறந்தொழாத ஜ்ஞானிகளைப் பல இடங்களில் பேசி, அவர்களை மஹாத்மாக்கள் என்றும் அழைத்தான். சங்ககாலத்திலும் திருமாலையே பாடியிருக்கும் கீரந்தையார் முதலான சிலர் இத்தகைய ஜ்ஞானிகளாகவே இருந்திருக்கவேண்டும். ஆகையால் விஷ்ணுவையே பரம்பொருளாக அறிந்தவர்களும் மற்ற தெய்வங்களையும் ஆராதி$_4$க்கவேண்டும் என்று ஒரு நாளும் ஸித்$_3$தி$_4$க்காது.

*79. ஒரு ஆழ்வாரின் புகழை விரிக்கையில் மற்ற ஆழ்வாரைத் தாழ்த்தினுல் அது ‘ந ஹி நிந்தா$_3$ ந்யாயம்’ என்பது போலே, ஆழ்வார்களும் நாயன்மார்களும் ஒரு தெய்வத்தைப் புகழும்போது மற்ற தெய்வங்களை இகழ்வது ‘ந ஹி நிந்தா$_3$ ந்யாயம்’ தானே?*

உயர்ந்த ஜாதிக்குதிரைகளில் ஒவ்வொரு குதிரைக்கு ஒவ்வொரு விதமான பெருமையிருக்கும். ஒன்று மிகுந்த வேகமுள்ளதாயிருக்கும். ஒன்று மிகுந்த அழகுள்ளதாயிருக்கும். இவற்றில் ஒன்றை ஒரு காரணத்தையிட்டுப் புகழும்போது அப்பெருமையில்லாத மற்ருென்றை இகழ்வது ந ஹி நிந்தா$_3$ ந்யாயத்தில் சேரலாம். ஆனால் கழுதையையும் குதிரையையும் பற்றிப் பேசும்போது “கழுதை எல்லா விதத்திலும் தாழ்ந்தது. குதிரை எல்லா விதத்திலும் உயர்ந்தது” என்று ஒருவர் சொன்னல் இங்கு ந ஹி நிந்தா$_3$ ந்யாயத்தைக் கொண்டுவர முடியாது. இதுபோலவே— நாராயணனே ஸர்வஜக$_3$த்காரணன் என்றும், ஸர்வாந்தர்யாமி என்றும், ஸர்வஸ்வாமி என்றும், “காணிலும் உருப்பொலார் செவிக்கினாத கீர்த்தியார் பேணிலும் வரந்தர மிடுக்கிலாத தேவ” ரான மற்றவர்கள் இப்பெருமைகளை உடையவரல்லர் என்

றும் வேத$_3$ங்களும் ஸ்ம்ருதீதிஹாஸ ஸாத்விக புராணங்களும், ஆழ்வார்களும் முழங்குவது ந ஹி நிந்தா$_3$ ந்யாயத்தில் சேரும் என்பது சிறிதும் பொருந்தாது. இப்படிக் கூறினல், குதிரையைக் காட்டிலும் கழுதை தாழ்ந்தது என்று கூறுமிடங்களிலும், வைரத்தைக் காட்டிலும் கூழாங்கல் தாழ்ந்தது என்று சொல்லுமிடங்களிலும் ந ஹி நிந்தா$_3$ ந்யாயத்தைக் கொள்ள வேண்டிவரும். நாயன்மார்களும் சிவனைப் பரம்பொருளாக நம்பி, திருமாலையும் நான்முகனையும் தாழ்த்திப் பேசினர்களாகையாலே அவர்களுடைய கூற்றிலும் ந ஹி நிந்தா$_3$ ந்யாயத்தைக் கொள்ள முடியாது. [*"ந ஹி நிந்தா$_3$ நிந்த்$_3$யம் நிந்தி$_3$தும் ப்ரவர்த்ததே; அபி து நிந்தி$_3$தாதி$_3$தரத் ப்ரஶம்ஸிதும்"*] [ஒன்றை நிந்திப்பது அதை இகழ்வதற்காக ஏற்பட்டதன்று; இகழப்படுவதைக் காட்டிலும் வேறென்றைப் புகழ்வதற்கேயாகும்.] என்னும் நியாயமே ந ஹி நிந்தா$_3$ந்யாயம் எனப்படுகிறது.]

*80. துவாதசி பாராயணம் கர்மாநுஷ்டானம்; துர்வாஸரை ஆராதிப்பது பாகவதாராதனம்; அம்பரீஷ சரித்திரத்தினின்று கர்மாநுஷ்டானம் பாகவதோபசாரத்தினின்றும் உயர்ந்தது என்று ஆகிறதே?*

துவாதசி பாராயணம் என்பது தவறு. துவாதசி பாரணை என்று சொல்லவேண்டும். ஏகாதசி உபவாஸமும் துவாதசி பாரணையும் வெறும் கர்மமல்ல. சரிவர அநுஷ்டி$_2$க்காவிடில் ப$_4$க$_3$வத$_3$பசாரத்தை விளைக்கக்கூடிய தலைசிறந்த த$_4$ர்மமாகும். அந்த த$_4$ர்மத்தை விடாமல் அநுஷ்டி$_2$த்து வந்தவன் அம்பரீஷன். இதைக் குலைக்க வேண்டும் என்று கெட்ட எண்ணத்தோடு வந்தவர் துர்வாஸர். ஆகையால் அவருக்கு ப$_4$ாக$_3$வதத்வபூர்த்தி இல்லை. அத்தகையவரிடமும் அபசாரப்படக்கூடாது என்று பெருமாள் ஸ்ரீபாத$_3$தீர்த்த$_2$ஸ்வீகாரத்தையே பாரணையாகக் கொண்டான் பரமப$_4$ாக$_3$வதனை அம்பரீஷன். இவனிடம் அபசாரப்பட்டு கடைசியில் இவனைச் சரணமடைந்தே உயிர் தப்பினர் துர்வாஸர். ஆகையால், இந்த வ்ருத்தாந்தத்திலிருந்து 'வெறும் கர்மாநுஷ்டா$_2$ன பரரான துர்வாஸமஹரிஷியின் சக்தியைக் காட்டிலும், பரமபாகவதனை அம்பரீஷனின் சக்தியே தலைசிறந்தது' என்று தேறும். பாகவதோபசாரத்தைக் காட்டிலும் கர்மாநுஷ்டா$_2$னம் உயர்ந்தது என்று தேருது.

*81. பரமபதமடைந்த ஜீவாத்மா திரும்பிவருவதில்லை யாகுல், இவ்வுலகில் மக்கள் தொகை குறைந்துகொண்டே வரவேணுமே; நடைமுறையில் நேர்மாருக உள்ளதே.*

'மக்கள் தொகை' என்று நீங்கள் கூறுவது பூமியிலுள்ள மனிதர்களின் எண்ணிக்கையேயாகும். இன்னம் எத்தனை உலகங்களில் மனிதர்கள் இருக்கிருர்கள் என்பதும் நமக்குத் தெரியாது. விலங்குகள், பறவைகள், ஸ்தாவரங்கள் ஆகியவை யும் ஜீவர்களே. ஒவ்வொருவகையிலும் ஜீவர்கள் கணக்கற்ற வர்கள். விலங்குகள் முதலானவையும் மனிதர்களாகப் பிறப் பெடுக்கலாம். மக்கள் தொகை அதிகரிப்பது விலங்குகள் முதலானவை மனிதர்களாகப் பிறப்பது அதிகரிப்பதால் ஏற் படுகிறது என்றே கொள்ளவேண்டும். தேவர்கள், வேறு உலகங்களிலுள்ள மனிதர்கள் இங்கு மனிதர்களாகப் பிறப்ப தாலும் மக்கள் தொகை அதிகரிக்கலாம்.

*82. 5—10—80ல் நடந்த ஸ்டேட் பாங்க் பரீக்ஷையில் காம்ப்ரஹென்ஷனில், மஹாலக்ஷ்மி ஸத்வத்தோடு இருக்கையில் கருடனையும், ரஜஸ்ஸோடு இருக்கையில் யானையையும், தமஸ் ஸோடு இருக்கையில் ஆந்தையையும் வாஹனமாகக்கொள்வ தாக உள்ளதே. இதற்கு ப்ரமாணம் உண்டா?*

எந்த ப்ரமாணமும் இல்லை. மஹாலக்ஷ்மி ஶுத்₃த₄ஸத்வ மயமான திருமேனியை உடையவள். அவளுக்கு ரஜஸ்தமோ கு₃ணங்கள் இருக்க இடமேயில்லை என்று காட்டும் ஸ்ரீஸூக்தம் முதலான பல ப்ரமாணங்களுக்கு இது முரண்பட்டது. ஆகை யால் எங்கேயாவது ராஜஸதாமஸபுராணங்களில் இப்படியிருந் தாலும் அது தள்ளத்தக்கதே.

---

## பிழை திருத்தம்

63-வது கேள்வியின் பதிலில் "சுக்லசதுர்தசி பின்னிரவு வேளை யில் எல்லோரும் தைலஸ்நாநம் செய்து, புதிது உடுத்தி" என்று இருப்பதை "க்ருஷ்ண சதுர்தசி......உடுத்து" என்று திருத்திக் கொள்ளவும். கவனக்குறைவால் நேர்ந்த இப்பிழையை எடுத்துக் காட்டிய ஸ்ரீகாஞ்சீ மஹாவித்வான் ஸ்ரீ உ. வே. ப்ர. பு. அண்ணங்கரா சார்யஸ்வாமிக்கு நமது நன்றி உரித்தாகும்.

V. ஸ்ரீநிவாஸன், திருச்சி-17.

*83. மதுரையில் நடந்த உலகத் தமிழ் மாநாட்டில் இலவசமாக விநியோகிக்கப்பெற்ற ஆங்கில மொழிபெயர்ப்புடன் கூடிய 'சங்ககாலத் தமிழர் சமயம்' என்னும் தங்களுடைய ஆராய்ச்சி நூல் அந்த மாநாட்டிலும், தமிழ்நாட்டிலும் எத்தகைய வரவேற்பைப் பெற்றது ?*

உலகத் தமிழ் மாநாட்டில் முதல்வர் திரு எம். ஜி. ஆர்., மந்திரி திரு நெடுஞ்செழியன், சட்டமேலவைத் தலைவர் திரு ம. பொ. சி., உயர்நீதிமன்ற நீதிபதி திரு கோகுலகிருஷ்ணன், உலகத் தமிழ்க் கழகத் தலைவர் முன்னாள் நீதிபதி திரு மகராஜன் முதலான அரசியல் நீதித் துறைப் பிரமுகர்களுக்கும், மாநாட்டிற்கு வந்திருந்த பிரதிநிதிகள், பார்வையாளர் பலருக்கும் ஆங்கில மொழிபெயர்ப்போடு கூடிய 'சங்ககாலத் தமிழர் சமயம்' என்னும் நூலில் (சுமார்) 500 பிரதிகள் நம்மால் விநியோகிக்கப்பட்டன. தமிழ்நாட்டிலுள்ள பிரபல பத்திரிகைகளான குமுதம், விகடன், கல்கி, கலைமகள், இதயம், அமுதசுரபி, தினமணிகதிர், இந்து, தினமணி(சுடர்), தினமலர், தினத்தந்தி முதலானவற்றிற்கும் விமர்சனத்திற்காக இந்நூல் அனுப்பப் பெற்றது. ஆனால் இந்தப் பத்திரிகைகளில் எதற்கும் இந்நூலை நடுநிலைநின்று விமர்சிக்கும் துணிவோ, நேர்மையோ இருப்பதாக இதுவரை தெரியவில்லை. புத்தகம் வந்ததைக் காட்டும் பகுதியிலுங்கூட இப்புத்தகத்தை வெளியிடும் நேர்மை இந்து பத்திரிகைக்கும், குமுதம் பத்திரிகைக்கும் இல்லை. இப்புத்தகத்தைப் பெற்றுக்கொண்ட நமது வாசகர்கள் பலர் "இது அசைக்கமுடியாத ஆராய்ச்சி", "உடைக்க முடியாத கவசம்போல் வைணவத்தைக் காப்பது இந்நூல்" என்று கூறியிருக்கிறார்கள். பாண்டிச்சேரி அன்பர் திரு கோ. கிருபாநிதி அவர்கள்— "உலகத் தமிழ் மகாநாட்டிற்கு எழுதிய தங்களுடைய கட்டுரையைப் படித்து மிகவும் சந்துஷ்டி அடைந்தேன். அதைக் கண்ணுறும் தமிழ் அறிஞர்களில் எத்தனை பேரை இந்தக் கட்டுரை கவரும் என்று தெரியவில்லை. தாங்கள் இதற்குமுன் வெளியிட்ட, வெளியிட்டுவரும் விஷ்ணு சித்தவிஜயம், சங்கரரும் வைணவமும், சாதிமத ஆராய்ச்சி

ஆகிய நூல்கள் செய்யமுடியாததை இந்தக் கட்டுரை செய்யும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. ' ஷை நூல்களை முழுமையாகப் படிக்காவிட்டாலும் ஒரு பத்துப்பக்கங்களை விருப்பு வெறுப் பின்றி நடுநிலையான மனத்தோடு ஒருவர் படித்தாலே போதும்— அந்த நிரூபணங்களை அசைக்கமுடியாது என்பதை நிச்சயம் உணரமுடியும் வேளுக்குடி ஸ்வாமி ஒரு பிரவசனத்தின் போது "பெரிய மண்டபத்தில் ஒரு குண்டூசியோ கடுகோ விழுந்துவிட்டால் 'எங்கே? எங்கே?' என்றுதான் கேட்கவேண்டி யிருக்கும், ஆனால் ஒரு யானையையே கொண்டுவந்து நிறுத்தி 'இதோ யானை' என்றால் 'எங்கே? எங்கே?' என்று கேட்பவர் களை என்னவென்று சொல்வது" என்று சொன்னார். அதைப் போல் தங்களுடைய நிரூபணங்கள் யானையைப்போல் மதர்த்து நிற்கின்றன. குருடனும் தடவிப் பார்த்தாவது முறம்போல என்றோ அல்லது தூண்போல என்றோ தான் உணர்ந்தவாறு சொல்லுவான். ஆனால் 'தான் பிடித்த முயலுக்கு மூன்றே கால்' என்று வாதிப்பவர்களை என்னவென்று சொல்வது? இத்தகைய 'அறிஞர்'களுக்கு அகக்கண் திறக்கவேண்டிய தில்லை. புறக்கண் திறந்தாலே போதும். 'ஊதுகிற சங்கை ஊதிவைத்தால் விடியும்பொழுது விடியட்டும்' என்று சொல் வதுபோல் தாங்கள் எழுதியுள்ள கட்டுரை நிச்சயம் நல்ல விடிவு காலத்திற்கு முன் எழுப்பப்படும் சங்கநாதமாக அமையட்டும்"— என்று எழுதியுள்ளார். "'சங்ககாலத் தமிழர் சமயம்' சிறப்பாக அமைந்திருப்பதாகப் பல்கலைக் கழகப் பேராசிரியர்கள் பலர் அடி யேனிடம் பாராட்டிப்பேசினார்கள் தேவரீருடைய திருத்தொண்டு அளப்பரியது. பல பெரிய ஸ்தாபனங்கள் சேர்ந்து இயற்ற வேண்டிய சேவையைத் தனித்துநின்று ஆற்றிவருகிறதே!" என்று மதுரைப்பேராசிரியர் ஸ்ரீ அரங்கராஜன் எழுதியிருக்கிறார். நமது வாசகர்களல்லாத நூற்றுக்கணக்கான தமிழ் அறிஞர்களும், பத்தி ரிகை ஆசிரியர்களும், 'தமிழ்ப் பெரும்புலவர்' என்று பாராட்டப் பெறும் திரு கி. வா. ஜகந்நாதன் போன்றவர்களும் 'தமிழறிந்த வர்களில் தலைசிறந்தவர், இக்காலத்து மகாகவி' என்று பொது மக்களால் பாராட்டப்பெறும் கண்ணதாசன் போன்றவர்களும், வாரியார், குன்றக்குடி அடிகளார் போன்ற சைவர்களும் இந் நூலைப் பெற்றும், இதில் அசைக்கமுடியாதபடி நிறுவப்பெற்றி ருக்கும் உண்மையை ('வைணவம் ஒன்றே வைதிக மதமாக

சங்ககாலத்தில் அனைவராலும் ஏற்கப்பட்டிருந்தது' என்னும் உண்மையை) ஏற்கவும் நேர்மையில்லாமல், மறுத்தெழுதவும் விஷயமில்லாமல் வாளாவிருக்கின்றனர். இதையெல்லாம் பார்க்கும்போது நம்நாட்டில் மதத்துறையில் நடுநிலைமை செத்துவிட்டதோ என்றே ஐயமுறவேண்டியுள்ளது. இவ் வையத்தை ஓரளவுக்கு நீக்குவதுபோல் கீதாசார்யன் பத்திரிகை இந்நூலை வெளியிட்டு வருகிறது. ராமாநுஜவாணியையும் இதன் ஆங்கில மொழிபெயர்ப்பை வெளியிடும்படி கேட்டுக்கொண்டிருக்கிறோம். ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா போன்ற மற்ற ஸ்ரீவைஷ்ணவ பத்திரிகைகளும் இந்நூலை வெளியிட்டால் வைணவத்தின் சிறப்பு உலகெங்கும் பரவும். பிரபல பத்திரிகைகள் இருட்டடிப்பு செய்துவரும் வைணவத்தின் சிறப்பைப் பரப்புவதற்கு இஃதொன்றே வழியாகும்.

S. வேங்கடம், சமயபுரம்.

*84. கண்ணதாசனுடைய 'சேரமான் காதலி' என்னும் சரித்திர நாவலுக்கு சாகித்திய அகாடமியின் பரிசு கிடைத்திருப்பது நியாயமா? அல்லவென்றால் இது நடந்ததற்குக் காரணம் என்னவாயிருக்கக்கூடும்?*

கண்ணதாசன் கவிஞர் என்றும் மகாகவி என்றும் லட்சக் கணக்கான பொதுமக்களால் பாராட்டப்பெறுபவர். அவருடைய கவிதை நூல்களுக்கு இப்பரிசு கிடைத்திருந்தால் எவருமே ஆட்சேபிக்க இடமிராது. அவரது நாவல்கள் மிகவும் தரம் குறைந்தவை என்பது அனைவரும் அறிந்தது. அதிலும் 'சேரமான் காதலி' என்னும் நாவல் வரலாற்றுக்கு முரண்பட்ட பல விஷயங்களைத் தன்னுட்கொண்டிருப்பது. பெருமாள் திருமொழியிலிருந்து பரமவைஷ்ணவர் என்று விளங்கும் குலசேகராழ்வாரை 'கல்கி' அன்பர்களான காமகோடி பக்தர்களையும், சைவர்களையும் திருப்தி செய்வதற்காகச் சைவராகச் சித்திரிக்கும் மோசடி இந்த நாவலிலேயே செய்யப்பட்டது. இந்த மோசடியை நம் ஸுதர்சனம், அப்போதே அம்பலப் படுத்தியது. சரித்திரநாவல் சக்ரவர்த்தியான திரு சாண்டில்யன் மூலமாகவும், ஸ்ரீ உ. வே. திருக்கள்ளம் நரஸிம்ஹராகவாசார்ய ஸ்வாமி மூலமாகவும் 'இப்படி பெருமாள் திருமொழிக்கு முரணாக எழுதுவதற்கு ஆதாரம் என்ன?' என்று கண்ணதாசனைக்

கேட்டனுப்பினோம். அவரால் எந்த ஆதாரமும் காட்டமுடிய வில்லை என்று அவர்கள் இருவரும் நமக்கு எழுதினர். இப்படி வரலாற்று மோசடி செய்திருக்கும் சரித்திர நாவலுக்கு சாகித்ய அகாடமி பரிசு கொடுத்திருப்பது—நம் நாட்டுப் பொதுத்துறை நிறுவனங்கள் எந்த மோசடியையும் செய்யத்துணிந்த காம கோடி பக்தர்களாலும், சைவர்களாலும் பெரும்பாலும் ஆளப் படுகின்றன என்பதைக் காட்டுகிறது. இந்த நாவலுக்குப் பரிசு கொடுத்திருப்பது மிகவும் தகாதது என்பதை 'துக்ளக்' பத்திரிகையில் 'துர்வாஸ'ரும் "இந்த ஆண்டு சாகித்திய அகாடமி, கவிஞர் கண்ணதாசனின் 'சேரமான் காதலி' என்ற நாவலுக்குப் பரிசு தந்திருக்கிறது. கண்ணதாசன் சமயங்களில் கதைகள் எழுதினாலும், அவரை 'கவிஞர் கண்ணதாசன்' என்றுதான் உலகம் அறியும். 'எல்லோருக்கும் ஒரு வழி என்றால் இடும்ப னுக்கு ஒரு வழி' என்பார்கள். சாகித்திய அகாடமியின் கதை இப்படித்தான் ஆகிவிட்டது...கவிஞர் கண்ணதாசனின் பாடல் களுக்குப் பரிசு தராமல், அவர் ஏதோ, தற்செயலாகப் பத் தோடு பதினொன்று என்று எழுதிய 'சேரமான் காதலி' என்ற சரித்திர நாவலுக்குப் பரிசு தந்திருப்பதாகச் சொல்லுவது, அவருக்கு சாகித்திய அகாடமி தந்துள்ள மரியாதையா, அல்லது அவருடைய கவிதைத் திறனுக்குத் தந்துள்ள அவமரியாதையா என்று தெரியவில்லை" என்று எழுதியிருக்கிறார். கண்ணதாச னுடைய கீதையுரைக்குப் பரிசு கொடுக்காமலிருந்ததற்கு அகாடமிக்கு நாம் நன்றி செலுத்தவேண்டியதுதான்.

**S. முரளி, அந்தநல்லூர்.**

*85. 8—2—81 கல்கியில் "'எந்த வழியில் சென்றாலும் எல்லாரும் ஒரே இடத்தைத் தான் அடைகிறார்கள்' என வேதம் உரைக்கிறது" என்று தொடங்கி சர்வமதசாம்யவாதம் செய் திருக்கிறார் காஞ்சி காமகோடிப் பெரியவர். வேதம் இந்த வாதத்தை ஆதரிக்கிறதா?*

எந்த வேதவாக்கியமும் இப்படிக் கூறவில்லை. நேர்மாறாக, ஜகத்காரணமான பரம்பொருளைக் கூறும் புருஷஸூக்தத்தில் "தமேவம் வித்வாந் அம்ருத இஹ பவதி நாந்ய: பந்தா: அயநாய வித்யதே" [அந்தப் பரமபுருஷனை இவ்வண்ணமாக

அறிபவன் இப்பிறப்பிலேயே மோக்ஷமடைகிறுன். மோக்ஷமடைய இதைத் தவிர வேறு வழியில்லை] என்று ஸ்ரீபூ₃மி நாத₂னை பரமபுருஷனை உள்ளபடி அறிவது தவிர மோக்ஷத்திற்கு வேறு வழியில்லை என்று வேத₃ம் முழங்கியிருக்கிறது. இதை அறிந்திருந்தும், பாமரமக்களையும், பொதுஜனப் பத்திரிகைகளையும் திருப்தி செய்வதற்காகப் பீடாதி₄பதி இப்படிப் பேசுகிருர் என்று விளங்குகிறது. "பல்படிகால் வழியேறிக் கண்டீர்,......ஆடுபுட்கொடி ஆதிமூர்த்திக்கு அடிமை புகுவதுவே" [திருவாய் 4-10-7] என்கிற ரீதியில் ஒவ்வொரு மதமாக ஏறிவந்து விஷ்ணு ப₄க்தனுகி, ஜீவன் மோக்ஷமடைவதாக ஶாஸ்த்ரம் கூறுவதுண்டு. அதைப் பீடாதி₄பதி பொது ஜனங்களை ஈர்ப்பதற்காக இப்படி மறைத்துச் சொல்லுகிருர் என்று கொள்ளலாம். 'எந்த வழியில் சென்றுலும் எல்லாரும் இந்த ஜன்மத்திலேயே மோக்ஷமடைந்து விடுவார்களா?' என்று பீடாதி₄பதியைக் கேட்டால் 'குட்டு' வெளிப்பட்டுவிடும். 'எந்த மதத்தைச் சேர்ந்தவனுலும் ஜந்மாந்தரத்தில் அத்வைதியாகுல்தான் மோக்ஷம் அடைவான்' என்றுதான் இவரும் கூறியாகவேண்டும். இந்த உண்மையை மறைத்துப் பேசுவதால் இவர் 'நடமாடும் தெய்வம்' என்று பொதுமக்களால் போற்றப்படுகிருர். உண்மையை வெளிப்படையாகச் சொல்லுவதால் 'யதார்த்த₂வாதீ₃ ப₃ஹுஜநவிரோதீ₄' என்ற ரீதியில் நம்மைப் பலர் இகழ்கிருர்கள்.

S வரதராஜன், ஸ்ரீரங்கம்.

*86. 10—2—81 தினமணியில் மதுரை ஆதீனம் "நாம் இந்து மதத்தில் பல்வேறு தெய்வங்களை வணங்குகிறோம். ஆனுல், எந்த ஒரு தெய்வத்தை வழிபட்டாலும் அது ஒரே இறைவனையே சென்று அடைகிறது. பல தெய்வங்களும் ஒன்றுதான் என்கிறது இந்து மதம்." என்று கூறியிருக்கிருர். இஃது உண்மையா?*

முன் கேள்வியில் பீடாதி₄பதியின் பேச்சைப்போலே இதுவும் உள்ளதை மறைத்துப் பேசும் பேச்சேயாகும். இதில் முதல் வாக்கியம் சரியானது. இரண்டாவது வாக்கியம் ஓரளவுக்சச் சரியானது. "*ஆகாஶாத் பதிதம் தோயம் யதா₂ க₃ச்ச₂தி ஸாக₃ரம் ! ஸர்வதே₃வ நமஸ்கார: கேஶவம் ப்ரதி க₃ச்ச₂தி ||*" [வானத்திலிருந்து விழும் நீர், கடலை நோக்கிச்செல்வது போலே,

எந்த தெய்வத்தை வணங்கினாலும் அது ப்₃ரஹ்மருத்₃ரர்களையும் படைத்த கேசவனைக் குறித்தே செல்லும்] என்னும் ஸுப்ரஸித்₃த₄ ஶாஸ்த்ரவாக்யம் இவ்வர்த்த₂த்தையே சொல்லுகிறது. மதுரை ஆதீனத்தின் மூன்றாவது வாக்கியம் தவறானது. "*அக்₃நிரவமோ தே₃வதாநாம் விஷ்ணு:பரம:*" [யஜுஸ் ஸ. 5-5] [தேவதைகளுக்குள் அக்னியானவன் தாழ்ந்தவன்; விஷ்ணு வானவர் மிக உயர்ந்தவர்] "*ஸ ஆத்மா அங்க₃ாந்யந்யா தே₃வதா:*" [தைத்திரீயோபநிஷத்] [அவன் அனைவர்க்கும் ஆத்மாவாயிருப்பவன்; மற்ற தெய்வங்கள் அவனுக்கு அவயவங்களாயிருப்பவை] "*தம் தே₃வதாநாம் பரமம் ச தை₃வதம்*" [ஶ்வேதாஶ்வதரம்] [தே₃வதைகளனைவர்க்கும் மேலான தே₃வதையான அவனை] முதலான பற்பல வேத₃வாக்யங்கள் தே₃வதைகளுக்கிடையே எத்தனையோ ஏற்றத் தாழ்வுகள் உண்டென்றும், அவர்கள் அனைவரைக் காட்டிலும் விஷ்ணுவே மேலானவன் என்றும் முழங்குகின்றன. "*ப்₃ரஹ்மா நாராயண:, ஶிவஶ்ச நாராயண:*" [நாராயணோபநிஷத்] [பிரமனும் நாராயணனே, சிவனும் நாராயணனே] என்று எல்லா தெய்வங்களும் நாராயணனே என்று சொல்லும் உபநிஷத்₃ வாக்யம் அந்த மூச்சிலேயே "*தி₃ஶஶ்ச நாராயண:, விதி₃ஶஶ்ச நாராயண:*" [தி₃க்குகளிலும், விதி₃க்குகளிலும் உள்ள எல்லாப் பொருள்களுமே நாராயணனே] என்று முழங்குகிறது. "*ஸர்வம் க₂ல்விதம் ப்₃ரஹ்ம தஜ்ஜலாந்*" [சா₂ந் 3-14-1] [அந்த ப்₃ரஹ்மத்திலிருந்து தோன்றி, அதில் லயித்து, அதனால் ரக்ஷிக்கப்படுகையாலே எல்லாம் ப்₃ரஹ்மம்] என்னும் உபநிஷத்₃ வாக்யம் பரம் பொருள் அனைத்துக்கும் காரணமாகவும், எல்லாப்பொருள்களிலும் நீக்கமற நிறைந்திருந்து ரக்ஷிப்பதாகவும் இருப்பதாலேயே எல்லாம் பரம்பொருள் என்று கூறப்படுவதாகத் தெளிவாகக் காட்டிற்று. இப்படியிருக்க, பல தெய்வங்கள் ஒன்றுதான் என்று வேதங்கள் கூறுவதாகச் சொல்லி, பாமர ஜனங்களை மதத்தலைவர்கள் குழப்புவது பெரிய மோசடி என்பது சொல்லாமலே விளங்கும்.

**R. பார்த்தசாரதி, சென்னை-80.**

**87. *சேலத்திலிருந்து வெளிவரும் 'ஹிந்து மறுமலர்ச்சி' பத்திரிகையில் வாரியாருக்கும், ஸ்ரீகாஞ்சீ மஹாவித்வான் ப்ர. ப.***

*அண்ணங்கராசார்ய ஸ்வாமிக்கும், தங்களுக்கும் உலகத் தமிழ் மாநாட்டில் டாக்டர் பட்டம் கொடுக்கப்படவேண்டும் என்று எழுதியிருப்பதைப் பார்த்தீர்களா ?*

இன்றுள்ள சூழ்நிலையில் உண்மையான வைஷ்ணவர் எவருக்கும் எந்தப் பட்டமும், பதவியும் கொடுக்கமாட்டார்கள். அதிலும், உள்ளதை உள்ளபடி சொல்லும் நமக்குக் கொடுப்பதற்குக் கனவிலும் நினைக்கமாட்டார்கள். நாம் இப்பட்டம் பதவிகளை எதிர்பார்க்கவுமில்லை. டாக்டர் பட்டம் பெறுவதற்கு முயலும் பலர் நம்முடைய நூல்கள் தமக்குப் பெரிதும் உதவுவதாக நம்மிடம் நேரில் சொல்லியிருக்கிறார்கள். மதுரையிலுள்ள பேராசிரியர் ஒருவர் "நீங்கள் வெளியிட்டிருக்கும் நூல்களை ஆராய்ச்சிசெய்து இரண்டு டாக்டர் பட்டங்களைப் பெறலாம்" என்று நம்மிடம் கூறினார். இப்படிப் பல டாக்டர்களை உருவாக்குவதற்கே நாம் விரும்புகிறோம். நம் நாட்டு அரசியலாராலும் பல்கலைக்கழகங்களாலும் அளிக்கப்படும் பட்டங்கள் பெரும்பாலும் சிபார்சுகளில்லாமல் கிடைப்பதில்லை. இத்தகைய டாக்டர் பட்டங்களையும் மற்ற எந்தப் பட்டத்தையும் நாம் விரும்பவில்லை.

S. கோவிந்தராஜன், சென்னை-94 (88 to 90 கேள்விகள்)

*88. ரௌத்ரி வருஷம் கல்கி தீபாவளி மலரில் புலவர் கீரன் 'ஆழ்வார் தமிழ்' என்னும் கட்டுரையில் "அவரவர் தமதமது" [திருவாய் 1-1-5] என்று தொடங்கும் திருவாய்மொழிப் பாசுரத்தை எடுத்துக்கொண்டு "அதனால் எந்தக் கடவுளும் குறைவற்றவர் என்ற உண்மையும் புலனாகிறது. சமய ஒருமைப் பாட்டுணர்வையும் தெய்வப்பற்றையும் இணைந்து விளங்கும் இக்கருத்தை நம்மாழ்வார் எளிய தமிழில் பாடியுள்ளார்" என்று எழுதியுள்ளார். இந்தப் பாசுரத்துக்கு இதுதான் பொருளா?*

நம்மாழ்வார் திருவாய்மொழியிலேயே 'திண்ணன் வீடு' என்று தொடங்கும் பதிகத்தில் "பூவில் நான்முகனைப் படைத்த தேவன் எம்பெருமானுக்கல்லால் பூவும் பூசனையும் தகுமே" [திருவாய் 2-2-4] என்று கேட்டிருக்கிறார். 'ஒன்றும் தேவும்' என்று தொடங்கும் பதிகத்தில் "பேசநின்ற சிவனுக்கும் பிரமன் தனக்கும் பிறர்க்கும் நாயகனவனே, கபால நன்மோக்கத்துக் கண்டு கொண்மின்"

[திருவாய் 4-10-4] '*மற்றைத்தெய்வம் நாடுதிரே*' [4-10-1] '*மற்றைத்தெய்வம் விளம்புதிரே*' [4-10-8] முதலான பாசுரங்களில் பிரமன், சிவன் முதலான மற்ற தெய்வங்களை அடைவதை ஆழ்வார் தெளிவாகக் கண்டித்திருக்கிறார். அந்த ஆழ்வார் தம் திருவாய்மொழியின் முதல் பதிகத்திலுள்ள இந்தப் பாசுரத்தில் "எந்தக் கடவுளும் குறைவற்றவரே" என்று கூறுகிறார் என்று எழுதுவது பெரிய மோசடி என்று சொல்லாமலே விளங்கும். இந்தப் பாசுரத்திலும் "அவரவர் தமதமது அறிவறி வகைவகை" என்று அருளுவதன் மூலம் "அவனவன் அறிவிலுள்ள ஏற்றத்தாழ்விலேயே வெவ்வேறு கடவுளரை வணங்குகிறான்" என்று காட்டியிருக்கிறார் ஆழ்வார். 'இறையவர் என அடியடைவர்கள்' என்னும் பகுதியிலும் 'இறையவர் என' என்பதால் மற்ற தெய்வங்களிடம் இறைமைத் தன்மை உண்மையில் கிடையாது என உணர்த்துகிறார். இதற்கெல்லாம் பொருந்தும்படியாக "அவரவர் இறையவர் குறைவிலர்' என்னும் பகுதிக்குப் பொருள் கொள்ளவேண்டும். அப்படிக் கொள்ளும்போது 'அந்தந்த தெய்வங்கள் தம்தம் பக்தர்கள் விரும்பும் தாழ்ந்த பலன்களைக் கொடுக்கும் ஶக்தியில் குறைவில்லாதவர்களாயிருக்கிறார்கள்" என்று பூர்வாசார்யர்கள் கொண்ட பொருளே பொருந்தும் என விளங்கும். 'இறையவர் அவரவர் விதிவழி அடைய நின்றனரே' என்னும் கடைசி அடியினால் "உண்மையான இறையவனான திருமால்—அந்தந்த பக்தர்கள் அவரவர்களுக்கு ஏற்பட்ட ஶாஸ்த்ர விதியின்படி அந்தந்த தெய்வங்களை அடையும்படியாக அவர்களுக்கு அந்தர்யாமியாக நிற்கிறார்" என்று ஆழ்வார் முடிவு கட்டுகிறார் என்னும் பூர்வாசார்யர்கள் உரையும் மிகப் பொருத்தமானது. புலவர் கீரனைப் போன்றவர்கள் மனம் போனபடி சொல்லும் விளக்கங்கள் ஆழ்வாருடைய மற்ற பாசுரங்களோடு முரண்படுமாகையாலே ஏற்கத்தக்கவையல்ல. காலஞ்சென்ற அரசியல் மூதறிஞர் திரு. ராஜாஜி அவர்கள் கல்கியில் வெளிவந்த 'பக்திநெறி' என்னும் கட்டுரைத் தொடரில் நம்மாழ்வாருடைய பாசுரங்களுக்கு இப்படி அவப்பொருள் உரைத்து, நம்மிடமிருந்து தக்க பதிலைப்பெற்று, அதை ஏற்றுக்கொண்டார். இந்த நேர்மை இக்காலத்தில் எவர்க்கும் இல்லை.

*89. முற்கூறிய கட்டுரையில் புலவர் கீரன் "அத்வைதம், த்வைதம், விசிஷ்டாத்வைதம், சைவசித்தாந்தம் ஆகிய மார்க்கங்கள் கொள்கையளவில் பெரிய அளவில் வேறுபாடுடையன வல்ல. ஜீவான்மா — பரமான்மா ஐக்கிய நிலையில்தாம் இவை வேறுபட்டு நிற்கின்றனவே தவிர, ஏனைய முறைகளில் இம் மார்க்கங்கள் அனைத்தும் பக்தி மார்க்கத்தைக் காட்டுவனவே." என்று எழுதியிருக்கிருர். இஃதுண்மையா?*

இந்த மதங்களை முறைப்படி கல்லாதவர்தாம் இப்படி எழுதுவார். தத்துவம் (உண்மைப்பொருள்), ஹிதம் (மோக்ஷமடையும் வழி), புருஷார்த்தம் (மோக்ஷத்தில் பெறும் பயன்) என்னும் முக்கியமான மூன்று மதக்கோட்பாடுகளின் விளக்கங்களில் மிகவும் வேறுபட்டுநிற்பவை இந்த நாலு மதங்களும். ஸுதர்சனர்பதில் முதல் சதகத்தின் தொடக்கத்தில் இந்த வேறுபாடுகளை நாம் விளக்கியிருக்கிறோம். "உலகமெல்லாம் பொய். எந்த வேறுபாடும் அற்ற அறிவொன்றே மெய். வேதவாக்கியங்களிலிருந்து இந்த உண்மையை அறிபவன் பேதமயக்கம் நீங்கப்பெற்று அந்த அறிவேயாவதே மோக்ஷம்" என்று கூறுவது அத்வைதம். "எல்லா உலகமும் மெய். உலகை ஆட்படைக்கும் திருமாலிடம் பக்தி செலுத்துவதாலும், அவனைச் சரணமடைவதாலும் பரமபதம் சென்று பேரானந்தமடையலாம்" என்பது த்வைத விசிஷ்டாத்வைத மதங்கள். இவ்விரு மதங்களிடையேயும் பல கொள்கை வேறுபாடுகள் உண்டு. "திருமாலுக்கும் பிரமனுக்கும் தலைவனான சிவனே பரம்பொருள். சரியை கிரியை முதலானவற்றால் சிவனை வழிபட்டு அவனையடைவதே மோக்ஷம்" என்பது சைவசித்தாந்தம். இத்தனை வேறுபாடுடைய இந்த நாலு மதங்களையும் ஒன்று என்று கூறுவது எப்படி உண்மையாகமுடியும்? கீரன்போன்ற சொற்பொழிவாளர்கள் பொதுமக்கள் அனைவரையும் திருப்திசெய்து எல்லோரிடமும் பணம் பெறுவதற்காகவே இப்படிப்பேசவும் எழுதவும் செய்கிறார்கள் என்று விளங்குகிறது.

*90. முற்கூறிய கல்கி தீபாவளி மலரிலேயே 'தெய்வமும் மனிதமுயற்சியும்' என்னும் கட்டுரையில் அக்னிஹோத்ரம்*

*ராமாநுஜதாத்தாச்சாரியார் ''ஆனால், மெத்தப்படித்தவர்கள் சிலர் தெய்வமே எல்லாவற்றையும் கொடுத்துவிடும். மனித முயற்சிக்கு இடமே கிடையாதென்று பேசி மக்களின் முயற்சிக்கு உள்ள உற்சாகத்தைக் குறைத்து விடுகிறார்கள். கடவுளால் படைக்கப்பட்டு வந்தவன் மனிதன் என்ற முறையிலும், கடவுள் எல்லாம் வல்லவர் என்ற வகையிலும் ஆன்ம வர்க்கங்கள் முயற்சி செய்யவே வேண்டாம் என்ற ஒரு கருத்து நிலவி வருகிறது. 'எல்லாம் அவன் செயல்; நம்மால் ஆவது ஒன்றுமில்லை' என்று பிரசங்க மேடைகளிலும் இந்தக் கருத்தை அள்ளிஅள்ளி வீசுகிறார்கள். இதனால் மனித முயற்சி பலவீனமடைந்து நிற்கிறது. இது நல்லதல்ல; சரியல்ல. மனிதன் கடவுளால் படைக்கப்பட்டிருந்தாலும் கடவுள் தன் கருத்துக்களை உலக வாழ்க்கையில் நிறைவேற்ற இயற்கையையும், மனிதனையுமே பயன்படுத்திக் கொள்கிறார். அவதார காலங்களிலும், மற்றும் சில அரிய சந்தர்ப்பங்களிலும், பகவான் தானே நேரில் வந்து தன் காரியத்தை முடித்துக் கொள்கிறார். பகவானுக்கு எவ்வளவு பெருமை இருந்தும் உலக வாழ்வில் மனிதன் மூலமாகவே காரியங்களை நடத்துவதால் தெய்வபலம் போல் மனித முயற்சியும் அவசியம் தான் என்று தெரிகிறது'' என்று எழுதியிருக்கிறார். இது பற்றி விளக்க வேண்டுகிறேன்.*

தென்கலை ஸம்ப்ரதாயத்தைச் சரியாகப் புரிந்துகொள்ளாமல், தாத்தாசாரியர் இங்கு அதை மறைமுகமாகத் தாக்கியுள்ளார். 'மனித முயற்சிக்கு இடமே கிடையாது' என்று தென்கலை ஸம்ப்ரதாயம் கூறவில்லை. எந்த மதமும் இப்படிக் கூறவில்லை. 'எம்பெருமான் தலைசிறந்த மோக்ஷத்தை நிர்ஹேதுக க்ருபையாலே அருளுகிறான்' என்று தென்கலை ஸம்ப்ரதாயம் கூறுவதை சரியாகப் புரிந்துகொள்ளாமல் இப்படி ஆகாசதாண்டவம் ஆடுகிறார். '''உனக்கே நாம் ஆட்செய்வோம்' என்னும் மனநிலையை உடையவர்களாய், அவனையே உபாயமாகக் கொண்ட தலைசிறந்த ப்ரபன்னர்களுக்கு எம்பெருமான் எந்த முயற்சியையும் எதிர்பாராமல் தலைசிறந்த மோக்ஷத்தை நிர்ஹேதுகமாக அருளுகிறான்; மோக்ஷத்தையோ அல்லது மற்ற பயன்களையோ தம் ஆனந்தத்திற்காக விரும்புகிறவர்களுக்கு அவ்வப்பயன்களை, அப்பயன்களுக்குத் தக்க முயற்சிகளை-

செய்தபின்பே அருளுகிறான்" என்பது தென்னாசார்ய ஸம்ப்ர தாயம். இதைப் புரிந்துகொள்ளாமல், தென்னாசார்ய ஸம்ப்ர தாயத்தைத் தாக்குவது இவரைப் போன்றவர்களுக்கு வழக்க மாகிவிட்டது.

S. வேங்கடம், சமயபுரம். (91,92 கேள்விகள்)

*91. 'சேரமான் காதலி'க்கு 'சாகித்ய அகாடமி' பரிசு கிடைத்ததைப் பற்றி அமுதசுரபியிலும், தீபத்திலும் வெளிவந் திருக்கும் விமரிசனங்களைப் பார்த்தீர்களா?*

பார்த்தேன். 84-வது கேள்வி பதிலில் ஊகித்துச் சொன் னதை வலியுறுத்துகின்றவையாய் இவை அமைகின்றன என் பதை உலகம் அறியவேண்டுமாகையால் அவற்றின் ஸாரமான பகுதிகளைக் கொடுத்து இவ்விஷயத்தில் நடந்த வரலாற்று மோசடியையும், மதத்துறை ஆக்ரமிப்பையும் உறுதிப்படுத்து கிறோம். அமுதசுரபியில் வெளிவந்துள்ள ஓர் கடிதத்தின் ஸாரமான பகுதியும் அதற்கு ஆசிரியரின் பதிலும் பின்வருமாறு—

அன்பிற்குரிய அமுதசுரபி ஆசிரியர் அவர்களுக்கு,

வணக்கம். நீண்ட நாட்களாக என் மனதில் ஓர் ஐயம் ஏற் பட்டுள்ளது. அதை நீண்ட கால பத்திரிகை அநுபவம் உள்ள தாங்கள் தீர்த்து வைக்கக்கூடும் என்ற நம்பிக்கையில் தான் இந்தக் கடிதம் எழுத முற்பட்டேன். 'சாஹித்ய அகாதமி' என்று ஒரு நிறுவனம் செயல்பட்டு வருகிறதல்லவா? பொதுமக்களின் வரிப்பணத்திலிருந்து இந்த நிறுவனத்துக்கு மத்திய அரசு மான்யம் வழங்குகிறது. மாநில ரீதியாகக் கிளைகள் இதற்கு உண்டு என்று எண்ணுகிறேன். இந்த நிறுவனத்தின் மத்திய நிலையம் டில்லியில் இருக்கிறது. அந்தந்த மாநில அமைப்புக்கள், பிரதி ஆண்டும் இந்த நிறுவனத்தின் பரிசுக் குகந்ததாகச் சில நூல்களையும், அவற்றின் ஆசிரியர்களையும் சிபாரிசு செய்கின்றன. தமிழ் நாட்டைப் பொறுத்த வரையில், இந்தச் சிபாரிசுக் குழுவினரின் கண்களுக்குச் சில பிரசித்தி பெற்ற நாவலாசிரியர்கள் கூட இன்னமும் புலப்படாமலிருப்பதுதான் விந்தையிலும் விந்தை. உதாரணமாக:- திரு. சாண்டில்யன், திருமதி லக்ஷ்மி, திரு லா.ச. ராமாமிருதம், திரு. விக்கிரமன், திரு. ரா. சு. நல்லபெருமாள், திரு தொ. மு. சி. ரகுநாதன். தமிழ்நாட்டு சிபாரிசுக் குழுவின் தேர்வுக்கு அடிப்படையான அளவுகோல் என்னவென்று எனக்குப் புரியவில்லை, அவர்களுக்குப் புரிந்து இருக்க வேண்டும் என்று நம்பு

[illegible] நான் மேலே குறிப்பிட்டுள்ள எழுத்தாளர்கள், பல்லாண்டு காலம் இலக்கியத் துறையில் உள்ளவர்கள். தமிழ் வாசகப் பெரு மக்களிடையே நன்கு அறிமுகமானவர்களும்கூட. ஆனால் இவர்களு டைய படைப்புக்களில் எந்த ஒரு நூலுமே சாஹித்ய அகாதமி விருதைப் பெறும் தகுதியற்றதா? மனம் வேதனையடைகிறது. தமிழ் நாட்டு இலக்கிய மாமேதைகளான இந்த சிபாரிசுக் குழு அங்கத்தி னர்களுடைய அளவு கோலின் தரம் என்ன? எந்த அடிப்படையில் இவர்கள் தேர்வு செய்கிறார்கள்? பொது மக்களின் வரிப்பணத்தை முறையாகச் செயல்படுத்துவதன் மூலமே நியாயமாகச் செலவழிக்கி றார்கள் என்று கொள்ள முடியும். இதில் தனிப்பட்ட விருப்பு வெறுப்புகளுக்கு இடமிருக்கக் கூடாது. இதுவரை பரிசு பெற்றவர் களின் படைப்புத் திறன், தரம் ஆகியவற்றுக்குப் பரிசு பெறாது இருக் கும் பல நல்ல படைப்பாளிகளின் திறனும், தரமும் குறைந்தவை அல்ல என்று எண்ணுகிறேன். தயவுசெய்து எனக்குப் புரியும்படி சொல்வீர்களா? தங்கள் அன்பிற்குரிய, மோ. கிருஷ்ணமணி பிருந்தாவனம் காலனி, பம்மல்-சென்னை-75.

திரு. மோ. கிருஷ்ணமணி சில விஷயங்களைத் தெளிவு படுத்து மாறு கூறியுள்ளார். இந்தக் கடிதத்தை சாஹித்ய அகாதமிக்கு அனுப்பி வைக்கிறேன். திரு. கிருஷ்ணமணி கொடுத்துள்ள பட்டியல் முழுமையானது என நினைக்க வேண்டாம். அந்தப் பட்டியலில் என் பெயரைச் சேர்த்திருப்பதை நான் விரும்பவில்லை. என்னைவிட அறிவிலும், ஆற்றலிலும், அதிகப் புத்தகங்கள் எழுதிய பலர் உள்ள னர் உதாரணமாக கோவி.மணிசேகரன், ஜெயமணி சுப்பிரமணியம், கவிஞர் கலைவாணன், திரு. தா. நா. குமாரஸ்வாமி, கலைஞர் கருணாநிதி.........சொல்லிக்கொண்டே போகலாம். —ஆசிரியர்.

இந்நூலுக்கு 'சாகித்ய அகாடமி'ப்பரிசு கிடைத்ததின் மர்மம் யாதென்பதை 81 பிப்ரவரி 'தீபம்' பத்திரிகைச் செய்தி வெளி யிடுவதாயிருக்கிறது. அது பின்வருமாறு—

சாகித்ய அகாடமிப் பரிசு:—'சேரமான் காதலி' தொடர் கதை யாக "கல்கி" இதழில் வெளிவந்து முடியும் தருணம், கவிஞர் கண்ண தாசன் அவர்கள் காஞ்சிப் பெரியவர் சங்கராசாரிய ஸ்வாமிகளை காணச் சென்றிருந்தார். ஸ்வாமிகள் இந்து மதம் சம்பந்தமாக கவிஞரின் எழுத்துப் பணியைப் பாராட்டிக் கொண்டிருந்தபோது 'சேரமான் காதலி'யையும் பாராட்டினார். அந்தக் கதையைத் தொடர்ந்து படித்து வருவதாகக் கூறிய ஸ்வாமிகள் ''இக்கதைக்குரிய சரித்திரச் சான்றுகளை எங்கிருந்து பெற்றாய்?'' என்று கேட்டார்.

எந்தெந்த நூல்கள், குறிப்புகள், செப்பேடுகள் என்பது பற்றி கவிஞர் விளக்கம் அளித்தார். ஸ்வாமிகள் அந்த நாவலைப் பாராட்டியதுடன், மேலும் எந்தெந்த நூல்களிலிருந்து சரித்திரக் குறிப்புகள் கிடைக்கும் என்பதையும் குறிப்பிட்டு அவற்றைப் படிக்கும்படி அறிவுரை பகன்றார். நூல் வெளியாகு முன்பே, அந்த தவமுனிவரின் வாயால் பாராட்டுக் கிடைத்ததை நண்பர்களிடம் சொல்லிச் சொல்லி மனம் நெகிழ்வார் கவிஞர். அந்த நூலுக்கு இந்த ஆண்டு சாகித்திய அகாதமி பரிசு கிடைத்தது என்றால் அது சரியான மதிப்பீடேயாகும்!

இச்செய்தியிலிருந்து—பெருமாள் திருமொழிக்கு முரணாகக் குலசேகராழ்வாரைச் சைவராகச் சித்திரித்து வரலாற்று மோசடியும், மத ஆக்ரமிப்பும் செய்த இந்த நாவலை எழுதுவதற்குத் தூண்டுகோலாயிருந்த காமகோடி பீடாதிபதியிடம் காட்டி, "நீர் சொன்னபடி நாவலை எழுதி முடித்துவிட்டேன்" என்று கூறி, அவரது பாராட்டையும் பெற்று, அதன் விளைவாக அகாடமியின் பரிசையும் பெற்றுவிட்டார் கண்ணதாசன்—என்று தெளிவாக விளங்குகிறது. குலசேகராழ்வாரைச் சைவராகச் சித்திரித்திருப்பதற்கு உரிய ஆதாரங்களைப் பொதுமக்கள் அனைவரும்—குறிப்பாக, குலசேகராழ்வாரை தெய்வமெனக் கொண்டாடும் ஸ்ரீவைஷ்ணவர்களனைவரும் — தெரிந்துகொள்ளும்படி அந்த நாவலிலேயே வெளியிட்டிருக்கவேண்டாமா? காமகோடி பீடாதிபதிக்கும் கண்ணதாசனுக்கும் அவை தெரிந்திருந்தால் போதுமா? சாண்டில்யன் முதலான சரித்திர நாவலாசிரியர்கள் தாங்கள் எழுதும் வரலாற்று உண்மைகளுக்கு உரிய ஆதாரங்களை ஆங்காங்கு குறிப்புகள் மூலம் காட்டுவதுபோல் இவர் ஏன் இவ்விஷயத்தில் குறிப்பெழுதிக் காட்டவில்லை? இக் கேள்விகளை நடுநிலைநின்று ஆராய்ந்தால், கண்ணதாசனுக்கும் காமகோடிக்கும் குலசேகராழ்வாரைச் சைவராகச் சித்திரித்து இந்த நாவலை எழுதுவதில் ஓர் ஒப்பந்தம் இருந்திருக்கிறது என்றும், அந்த ஒப்பந்தத்தின் விளைவாகவே இந்தப் பரிசு கிடைத்திருக்கிறது என்றும் தெளிவாக விளங்குகிறது. "தீபம்" பத்திரிகையின் ஸ்தாபகரான திரு. நா. பார்த்தசாரதி அவர்களுக்கு, "குலசேகராழ்வாரைச் சைவராகச் சித்திரித்திருப்பதற்கு ஆதாரம் என்ன" என்று கண்ணதாசனைக் கேட்டு, கதிரிலோ, தீபத்திலோ வெளியிடும்படியும், இயலாவிடில் [illegible]

காலது அனுப்பும்படியும் கடிதம் எழுதியிருக்கிறோம். கண்ண தாசனிடமிருந்து ஏதேனும் பதில் வந்தால் ஸுதர்சனர் பதிலி லேயே விமர்சிப்போம். காமகோடி பக்தர்களால் நடத்தப்படும் கலைமகள் பத்திரிகையிலும் 'பிரேமா நந்தகுமார்' என்னும் அம்மையாரைக்கொண்டு நம்மாழ்வார், பெரியாழ்வார், திருமழிசையாழ்வார் ஆகியவர்களைச் சமரசவாதிகளாகச் சித்தி ரித்துக் கதைகள் வெளிவந்ததும், ஆழ்வார்கள் அனைவரை யுமே சமரசவாதிகளாக்கிக் காமகோடிப்படையினர் நடத்தும் பத்திரிகைகளில் அடிக்கடி கட்டுரைகள் வெளிவருவதும், ஆழ்வார்கள் அனைவரையும் சைவர்களாகவும், சமரசவாதிக ளாகவும் ஆக்கும் வரலாற்று மோசடி—மதத்துறை ஆக்ரமிப்புத் திட்டம் ஒன்று காமகோடிப் படையினரால் தொடர்ந்து நிறைவேற்றப்பட்டு வருகிறது எனக் காட்டுகிறது. க்ருமி கண்டன் எனப்படும் சோழ அரசன் விஷ்ணுகோவில் மதிள்களை இடித்ததைக் கண்டு அவனுடைய குமாரன் "ஆழ்வார்களின் அருளிச்செயலும், ஸ்ரீராமாயணமுமாகிற இரண்டு பெரிய மதிள்கள் வைஷ்ணவத்துக்கு இருக்கும்போது, கோவில் மதிள் களை இடித்து என் தகப்பன் என்ன சாதித்துவிட்டான்" என்று கூறியதாகப் பூர்வாசார்ய வ்யாக்யானங்களில் உள்ளது. க்ருமிகண்டன் செய்யமுடியாத அந்தக் காரியத்தை நிறை வேற்ற எண்ணியே காமகோடிப்படை ஆழ்வார்களைச் சைவர்க ளாக்கவும், அருளிச்செயல்களுக்கு அவப்பொருள்கள் கூறவும் பெருமுயற்சி செய்துவருகின்றது என்பதை உணர்ந்து ஸ்ரீவைஷ்ணவர்கள் விழிப்புடன் இருக்கவேண்டும்.

*92. கண்ணதாசனின் காமரஸம் ததும்பும் 'சேரமான் காதலி'யைத் தாம் தொடர்ந்து படித்து வருவதாகக் காமகோடி பீடாதிபதி கூறினார் என்று 'தீபத்'தில் காணப்படுகிறது. ஸந்யாஸிகள் காமக்கதைகளைத் தொடர்ந்து படிக்கலாமா?*

படிக்கக்கூடாதுதான். ஆனால் காமகோடி பீடாதிபதி இப்படிக் கருதியிருக்கலாம்:— ஆழ்வார்கள் அனைவரையும் சைவர்கள் என்று பொதுமக்கள் அனைவரையும் நம்பச் செய் வது சைவாத்வைதமதத்திற்குச் செய்யும் பெரிய சேவை. [illegible] [illegible]புரியும் 'சேரமான் காதலி'யைத் தொடர்ந்து

படிப்பதும் இம்மதசேவையில் சேர்ந்துவிடுகிறது. ஆகையால், காமக்கதையானாலும் இதைப் படிப்பதில் குற்றமில்லை. மேலும் இப்படிப் பல கதைகளைக் கண்ணதாசன் முதலான பலரைக் கொண்டு எழுதச் செய்வதற்கும், சினிமாக் கலைஞர்களைத் தூண்டி இத்தகைய சினிமாப் படங்களைத் தயாரிக்கச்செய்வதற்கும் உதவுமாகையாலே, இது பெரிய தரிசன கைங்கர்யமுமாகும் — என்பதே பீடாதிபதியின் கருத்தாயிருக்கவேண்டும். அவர் எழுத்தாளர்கள், சினிமாக் கலைஞர்கள், பிரபல பத்திரிகை ஆசிரியர்கள் முதலானவர்களோடு கலந்து பேசுவதாக அடிக்கடி பத்திரிகைகளில் வெளிவரும் செய்திகள் இதை வலியுறுத்துகின்றன. மதத்தின் பொருட்டுக் கூடுவிட்டுக் கூடுபாய்ந்து, ஆதிசங்கரரே பரதாரகமனம் செய்தார் என்னும் பொய்க் கதையைப் பரப்பும் இவர்கள், மதத்திற்காக இத்தகைய காரியங்களைச் செய்வார்கள் என ஊகிப்பது தவறல்ல.

மேஜர்தாசன், ஈரோடு-10 (93 to 95 கேள்விகள்)

*93. மதுரையில் நடந்த உலகத்தமிழ் மாநாட்டில் "தொல்காப்பியத்திற்குப் பிறகுதான் 'வேதம்' தோன்றியிருக்கிறது" என்று ஆராய்ச்சி செய்திருக்கிறார்களே; இது எந்த விதத்தில் நியாயமானது?*

"*நூலே கரகம் முக்கோல் மணையே ஆயுங்காலை அந்தணர்க்குரிய*" என்னும் சூத்திரத்தில் வேதத்தை விளக்குவதற்குத் தோன்றிய ஸ்ம்ருதிகளிலும், பாஞ்சராத்ரம் முதலான ஆகமங்களிலும் சொல்லப்பட்ட யஜ்ஞோபவீத த்ரிதண்டாதாரணங்களைத் தொல்காப்பியர் ஸந்யாஸிகளுக்கு உரியவையாகக் கூறியிருக்கிறார். வேதத்தில் சொல்லப்பட்ட பரம்பொருளான திருமாலை "*மன்பெரும் சிறப்பில் தாவா விழுப்புகழ் மாயோன்*" என்று குறித்திருக்கிறார். இந்திரன், வருணன் முதலான வேதக் கடவுளர்களையும் பேசியிருக்கிறார். வேதத்துக்குக் காலநிர்ணயம் செய்யும் மேல்நாட்டு ஆராய்ச்சியாளர்களும் ருக்வேதம் ஐயாயிரம் வருடங்களுக்கு முன்பே தோன்றியிருக்கவேண்டும் என்று கூறியிருக்கிறார்கள். தொல்காப்பியம் இரண்டாயிரத்து ஐந்நூறு வருடங்களுக்குள் தோன்றியது என்று அறுதியிடுகிறார்கள். இப்படியிருக்கும்போது, மனம்போனபடி செய்யப்படும்

ஆராய்ச்சிகளை நடுநிலைநிற்கும் நல்லோர்கள் அலட்சியப்படுத்தி யிருப்பதுதான் நல்லது. 'குரங்கிலிருந்துதான் மனிதன் தோன்றி ஞன்' என்பது போன்ற நகைப்பிற்குரிய பல ஆராய்ச்சிகள் உள்ளன. உலகத் தமிழ் மாநாட்டின்போது காலகதி அடைந்த தேவநேயப் பாவாணர் என்னும் கிறிஸ்தவர் 'தமிழிலேயே வேதங்களிருந்தன' என்றும், 'அந்தணர்கள் அவைகளை மறைத்துவிட்டு, அவற்றிலுள்ள விஷயங்களை வடமொழி யாக்கி, வடமொழி வேதங்களை உண்டாக்கி விட்டார்கள்' என்றும் பிரசாரம் செய்து வந்தார். ஆராய்ச்சி என்னும் பெய ரில் எந்தப் பொய்யையும் பரப்பத்துணிந்த கூட்டம் ஒன்று தமிழ்நாட்டில் உள்ளது என்பதையே இவையெல்லாம் காட்டுகிறது.

*94. 'காசியில் கருடன்கள் பறப்பதில்லை, பல்லிகள் ஒலிப்ப தில்லை' என்று வாரியார் கூறியிருக்கிறார். இதுபற்றித் தங்கள் கருத்தென்ன?*

ப்₃ரஹ்மாண்ட₃ப் புளுகர்களில் தலைசிறந்தவரான வாரியார், "காசிக்குப் போய் விசாரித்து வந்து யார் உண்மையை எழுதப் போகிறார்கள். அப்படியே எழுதினாலும் அவரைப் பொய்யர் என்று சொல்லிவிடலாம்" என்னும் தைரியத்தில் இதைக் கூறியிருப்பார். காசியில் வாழ்ந்தவர்கள் அல்லது வாழ்கிறவர் கள் எவராவது இது பற்றிய உண்மையை எழுதினால் வெளி யிடுகிறோம்.

*95. ஸ்ரீகிருஷ்ணபரமாத்மா யார் யாருக்குத் தன் விஶ்வரூபத் தைக் காண்பித்தார்?*

(1) "வையமேழுங்கண்டாள் பிள்ளை வாயுளே" [பெரியாழ் திரு 1-1-6] என்று யசோதைக்குக் காட்டிய விஶ்வரூபம். (2) து₃ர்யோத₄னன் ஸபையில் பொய்யாசனமிட்டபோது ஸபையின ருக்குக் காட்டிய விஶ்வரூபம். (3) கீதை 11-ம் அத்தியாயத் தில் அர்ஜுனனுக்குக் காட்டிய விஶ்வரூபம். ஸஹதேவன், அக்ரூரன் முதலான மற்றும் பலருக்கும் ஆஶ்சர்யமான பல உருவங்கள் தனக்கு உண்டு என்று கண்ணன் காட்டியதாகவும் செய்திகள் உண்டு.

புலவர் பி. மா. சோமசுந்தரனார், நக்கீரன் வழியடிமை,
ஈ. ஐ டி. பாரி லிமிடெட், இராணிப்பேட்டை-632401.

*96. /வாரியார் பெயரில் வெளிவந்துள்ள 'மங்கலமங்கையர்' என்னும் நூலில் வரும் கதைகள் எந்த நூல்களில் உள்ளவை என்று வினவி வாரியாருக்குக் கடிதம் எழுதினேன். "அவை முருகவேள் திருவருளால் அவ்வப்போது தோன்றியவையே" என்று அவர் மறுமொழி அருளினர். "வேதநாயகம்பிள்ளை இயற்றிய பிரதாபமுதலியார் சரித்திரம், சாக்ரடீஸ் கதை, கதா சரித்சாகரம் ஆகியவற்றிலிருந்து பல கதைகளைக் களவாடி, கதையில் வருவோர் பெயர்களை மாத்திரம் மாற்றி எழுதப்பட்ட கதைகளே இவை" என்று அவருக்கு எடுத்துக் காட்டினேன். "புளுகு மூட்டைகளான புராணங்களில் உழல்வதால் இத்தன்மை தங்களை வந்து அணைந்ததா? பெரியோர்கள் உருவத்தால் மட்டும் பெரியோராய் இல்லாமல் செயலிலும் பெரியோராகவே இருப்பர் என்று எண்ணியிருந்த நான்தான் ஏமாந்தேன்" என்று அவருக்கு எழுதினேன். இக்களவுச் செயலைப்பற்றித் தமிழறிஞர் பலருக்கும் எழுதியுள்ளேன். தாங்களும் இதை உலகுக்கு வெளிப்படுத்தலாம்.*

வெளிப்படுத்திவிட்டோம். 'இந்து' என்று அழைக்கப்படும் மதக்கூட்டத்தில் சேர்ந்திருக்கும் சைவம், அத்வைதம், வைஷ்ணவம் என்னும் பிரிவுகளைச் சேர்ந்த சிலர் பொதுஜனப் பத்திரிகைகளாலும், அவற்றையே படிக்கும் பொதுமக்களா லும் பெரிய மதத்தலைவர்களாகவும், உபந்யாஸகர்களாகவும் பாராட்டப்படுகின்றார்கள். அவர்கள் பெரும்பாலும் உண்மை, நேர்மை முதலான நற்பண்புகளுக்கு மதிப்பளிக்காதவர்க ளாகவேயிருப்பது நமது அன்பரான புலவர் சோமசுந்தரனார் கடிதத்திலிருந்தும் விளங்குகிறது. இது நமது 'இந்து' மதத் திற்குப் பிடித்திருக்கும் சாபக்கேடு என்றே தோன்றுகிறது.

பெயர் வெளியிடுவதை விரும்பாத ஒருவர்.

*97. ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா புரட்டாசி ஐப்பசி இதழ்களில் ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி, பிருதபூஷிதரான ஸ்ரீமதழகிய சிங்கர் "(1) பரப்ரஹ்மஸ்வரூபத்திற்கு திவ்யமங்களவிக்ரஹத்திற்குப்போலே ஶப்தம், ஸ்பர்ஶம், ரூபம், ரஸம், கந்தம் என்னும் குணங்கள் நித்யமாக உண்டு. (2) வேதம் முதலான ஶப்தங்கள் என்றுமே பரப்ரஹ்மஸ்வரூபத்தில் அடங்கியிருக்*



/ இது நீண்ட கடிதத்தின் ஸாரம்.

*கின்றன. வேத3ாத்4யயனத்தின்போது ஆசார்யன் உச்சரிக்கும் வேத3ஶப்3த3ம் ஶிஷ்யனுடைய ஜீவாத்மஸ்வரூபத்தில் இசைத் தட்டில் பதிவதுபோலே பதிந்துவிடுகிறது.'' என்று மாலோல வித்3வத் ஸத3ஸ்ஸில் நிஷ்கர்ஷிக்கப்பட்டதாக ஸாதித்திருக்கிறார். இவ்விஷயத்தில் பூர்வாசார்யர்கள் திருவுள்ளம் என்ன ?*

இவ்விஷயமாக, சில ப்ரஶ்னங்களை அனுப்பி, தெளிவு படுத்தும்படி அழகியசிங்கரைப் பிரார்த்தி3த்திருந்தோம். நேரில் சென்று, பல மணி நேரங்கள் சர்ச்சை செய்தபோது "இயத3ாமநநாத்' [ப்3ரஹ்மஸூத்ரம் 3-3-34] என்னும் ஸூத்ர ஸ்ரீப4ாஷ்யத்தில் தாம் கூறுவதற்கு ஆத4ாரம் இருக்கிறது என்று ஸாதித்தார். ஶ்ருதப்ரகாஶிகாசார்யர் (1-2-1) ஸ்ரீப4ாஷ்யத்தை விவரிக்கும்போது இதற்கு மாறாக ஸாதித்திருக்கிறாரே என்று கேட்டதற்கு 'அது சரியான வ்யாக்2யானமன்று' என்று ஸாதித்தார். ப்3ரஹ்மஸ்வரூபத்தில் ஶப்3த3ாதி3கு3ணங்கள் இல்லை என்றும், "வேத3நித்யத்வமாவது ஆநுபூர்விநித்யத்வமே யொழிய ஶப்3த3நித்யத்வமன்று" என்றும் தே3ஶிகன் முதலான பல பூர்வாசார்யர்கள் ஸாதித்திருக்கிறார்களே என்று எடுத்துக் காட்டியதற்கு "அவை தம்மைக் கட்டுப்படுத்தாது" என்னும் பொருள்பட ஸாதித்துவிட்டார். இவ்விஷயத்தில் அழகிய சிங்கர் திருவுள்ளம் ஒருபுறமிருக்க; ஸ்ரீப4ாஷ்யகாரர், ஶ்ருத ப்ரகாஶிகாசார்யர், தே3ஶிகன் முதலான பூர்வாசார்யர்கள் திருவுள்ளம் யாதென்பதை விளக்கிக் கட்டுரைகளை வெளியிட வேண்டிய கடமை ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியாவுக்கும், ஸ்ரீரங்கநாத பாதுகாவுக்கும், மற்ற ஸ்ரீவைஷ்ணவ பத்திரிகைகளுக்கும், ஸ்ரீப4ாஷ்ய ப4க3வத்3விஷயாதி4காரிகளாகத் திகழும் பற்பல வித்3வான்களுக்கும் உண்டு. இப்பத்திரிகைகளுக்கும் நமக்கும் அத்தகைய கட்டுரைகளை எழுதியனுப்பி, இவ்விஷயங்களில் பூர்வாசார்யர்களின் திருவுள்ளத்தை உலகமறியச்செய்யவேண்டு மென்று உப4யகலையிலுமுள்ள எல்லா வித்3வான்களையும் பிரார்த்தி3க்கிறோம். அப்படி வெளிவரும் கட்டுரைகளில் ஸார மானவற்றை ஸுதர்சனர் பதில் ஐந்தாவது சதகத்தில் எடுத்துக் காட்டி, நமது விமரிசனத்தையும் அடுத்து வரும் ஆடி மாத ஸுதர்சனத்தில் வெளியிடுவோம்.

V. ஸ்ரீநிவாஸன் திருச்சி-17 (98 to 100 கேள்விகள்)

*98. 'இந்து' மதப்பிரிவினரிடையே ஒற்றுமைக்கு உண்மை யான வழி என்ன ?*

'சைவம்', 'வைஷ்ணவம்', 'அத்வைதம்' என்னும் மூன்று பெரும் மதங்கள் தமிழ்நாட்டில் 'இந்து'மதம் எனப்படுகின்றன. பாரததேசத்தின் மற்ற பகுதிகளில் த்வைதம், சைதந்யமதம், வீரசைவமதம் முதலான இந்துமதப் பிரிவுகளும் உண்டு. இவற்றினிடையே உண்மையான ஒற்றுமை ஏற்பட்டு இம்மதங்கள் எல்லாமே வலுப்பெற்றால்தான் 'இந்து' சமூகம் இந்நாட்டில் வாழமுடியும். அதற்கு 'எம்மதமும் சம்மதம்' என்னும் வாய்வேதாந்தத்தை விடாப்பிடியாகப் பரப்புவதை 'இந்து' மதத்தலைவர்களும், பொதுஜனப்பத்திரிகைகளும் விட்டொழிக்க வேண்டும். 'சைவம்', 'வைஷ்ணவம்', 'அத்வைதம்' என்னும் முப்பெரும் மதங்களின் தலைவர்களும் தங்களிடையே மனப்பூர்வமான சகிப்புத்தன்மையை வளர்த்துக்கொண்டு, பொதுஜனப் பத்திரிகைகளிலும் பொதுத்துறைகளிலும் ஒருவரையொருவர் ஆக்ரமிக்காமலிருக்கும்படி பார்த்துக்கொள்ளவேண்டும். தங்கள் தங்கள் மதங்களைத் தங்கள் பிரிவினரிடையே வலிதாகப் பிரசாரம் செய்யவேண்டும். சைவர்கள் உண்மையான சைவர்களாக நடந்துகொள்ள வைஷ்ணவர்களும், வைஷ்ணவர்கள் உண்மையான வைஷ்ணவர்களாக நடந்து கொள்ளச் சைவர்களும் பாடுபடவேண்டும். சைவமும், வைஷ்ணவமும் பரஸ்பர ஆக்ரமிப்பில்லாமல் வலுப்பெற்று வளர்ந்தால்தான் 'இந்து'மதம் வாழும் என்பதை உணர்ந்து இந்துமதத் தலைவர்களும், பொதுஜனப் பத்திரிகைகளும் நடக்காவிடில், அடுத்த நூற்றாண்டில் கிறிஸ்தவர்களும், இஸ்லாமியர்களும், நாஸ்திகர்களும் சேர்ந்து 'இந்து'மதம் முழுவதையும் அழித்துவிடுவார்கள். காமகோடி பீடாதிபதியும், பொதுத்துறைகள் அனைத்திலும் பரவியிருக்கும் அவரது பக்தர்களும் இதை உணர்ந்து செயல்பட்டாலொழிய இவ்வாபத்தைத் தவிர்க்கமுடியாது.

*99. பலருடைய தூற்றுதலையும் பொருட்படுத்தாமல் இந்துக்களிடையே உண்மையான ஒற்றுமை ஏற்படத் தாங்கள் ஸுதர்சனத்தின்மூலம் முயன்று வருவது பயனளித்துவருகிறதா?*

ஓரளவுக்குப் பயனளித்து வருகிறது. தினமணிகதிரில் மணிவண்ணன் பதிலில் ஸுதர்சனம் பாராட்டப் பெற்றது. [இது முன்னமே எடுத்துக்காட்டப்பெற்றது.] 8—8—81 தினமணி சுடரில் 'சங்ககாலத் தமிழர் சமயம்' என்னும் நமது

வெளியீட்டின் விமரிசனத்தில் "ஸுதர்சனரின் பதில்கள் அறிவுக்கு விருந்து" என்னும் பாராட்டு நாமே வியக்கும்படி எதிர்பாராமல் கிடைத்துள்ளது. அவ்விமர்சனம் பின்வருமாறு :—

**சங்க காலத் தமிழர் சமயம்.** (ஆசிரியர்: ஸ்ரீகிருஷ்ணசாமி அய்யங்கார் (ஸுதர்சனர்) 3 புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-620 017. விலை ரு 1.00)

புத்தூர் சுவாமிகள் எனப்படும் அய்யங்கார் அவர்கள் ஆரவாரமில்லாமல் தொடர்ந்து சமயப் பணி செய்து வருபவர்கள் பலமொழி வல்லுநர். ஸுதர்சனம் என்ற திங்களிதழ் மூலம் வைணவ சமயத்தத்துவங்களை எளிமையாக்கி விளக்கிவருகின்றார்கள். அவருடைய ஸுதர்சனரின் பதில்கள் அறிவுக்கு விருந்து. தத்துவநூல்களுக்கும் ஆழ்வார்களின் அருளிச்செயல்களுக்கும் விளக்கங்கள் எழுதி மலிவு விலையில் வெளியிட்டு வரும் மஹோபகாரி அவர்கள்.

'சங்க காலத் தமிழர் சமயம் என்பது அவர்தம் ஆழ்ந்த புலமைக்கு எடுத்துக்காட்டான ஆராய்ச்சி நூல். உலகத்துக்குக் காரணமாயிருத்தல் முதலிய பத்துவகைப் பண்புகள் உடையவனே இறைவன் என்று கடவுள் தத்துவத்தை முதலில் விளக்கிவிட்டு, அந்தப் பத்துவகைப் பண்புகளும் சங்க நூல்களில் எங்கெங்கு விளக்கப்பட்டுள்ளன என்று தொகுத்துத் தருகின்றார் சுவாமிகள். பரிபாடல் முதலிய சங்க நூல்கள் அனைத்தும் அலசி ஆய்ந்த சாரமாக வடித்துத் தருகின்றார். இந்நூலின் ஆங்கில ஆக்கமும் இதனுடன் இணைந்துள்ளது. ஆராய்ச்சியில் ஈடுபடுபவர்க்குத் தக்க வழிகாட்டி இது. —அரங்க ஸ்ரீனிவாசன்.

தினமணிகதிரும், சுடரும் காட்டும் இந்த நேர்மையை இந்து, குமுதம், கல்கி, கலைமகள், இதயம், அமுதசுரபி முதலான (இந்து மதத்திற்குச் சேவை செய்யும்) மற்ற பத்திரிகைகளும் காட்டினால் 'இந்து' மதம் வலிவூட்டப்பெறும். ஸுதர்சனர் பதிலில் நமது ஸஹோதர மதங்களைப்பற்றிய சில கசப்பான உண்மைகளை நாம் எடுத்துக் காட்டிவருவதும் நின்றுவிடும்.

***100. தமிழ்நாட்டிலுள்ள 'இந்து' மதத்தைச் சேர்ந்த ஆலயங்கள் நல்ல முறையில் நடக்க வழி என்ன?***

தற்போதுள்ள இந்து அறநிலைய ஆட்சித்துறை 'சைவம்' 'வைணவம்' எனும் இரு சுயாதிகாரமுள்ள பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு முறையே சைவத்திலும், வைணவத்திலும் நம்பிக்கை உள்ளவர்களால் நிர்வகிக்கப்படுவதாக மாறுவதொன்றே 'இந்து' ஆலயங்கள் நல்ல முறையில் நடக்க வழிவகுக்கும்.

'ஸுதர்சனர் பதில்' நாலாவது சதகம் முற்றிற்று.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம்
சோதி-33 ] [ ஒளி-7

# 'விசிட்டர்' இளங்கோவனைக் குறித்து ஸுதர்சனரின் கேள்விகள்

[ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், M.A., B.L., அட்வகேட்,
'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்' ஆசிரியர்,
3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-620 017.]

'இந்து' மதத்தைச் சேர்ந்த சைவர்தவைதிகளால் நடத்தப் பெறும் நம்நாட்டுப் பொதுஜனப் பத்திரிகைகள், 'சமரசம்' பேசிக்கொண்டே 'இந்து' மதத்தைச் சேர்ந்த வைஷ்ணவத்தை நசுக்குவதையே குறிக்கோளாகக் கொண்டுள்ளன என்பதற்கு "15—6—80" தேதியிட்ட 'விசிட்டர்' பத்திரிகையில் 'இளங்கோவன்' எழுதியுள்ள *'சிதம்பரம் கோயிலில் என்ன தகராறு?'* என்னும் கட்டுரை மற்றுமொரு வெளிப்படையான சான்றாகத் திகழ்கின்றது. சைவர்களின் ஆக்ரமிப்பால் சிதம்பரம் நடராஜர் கோவிலுக்குள் அகப்பட்டுவிட்ட கோவிந்தராஜப்பெருமாள் கோவிலில் ஆழ்வார்கள் காலத்திலிருந்து நீண்டகாலம் நடந்து வந்த பிரம்மோத்ஸவம் சோழவரசன் ஒருவன் அக்கோயிலை இடித்த பின்பு நின்றிருந்தது. பிற்காலத்தில் நடுநிலைவகித்த அரசர்களால் திரும்பவும் அக்கோவில் அதே இடத்தில் கட்டப்பட்டபோதிலும், சிவன் கோயிலுக்குள் அகப்பட்டுவிட்டபடியால், தீட்சிதர்களின் அடக்குமுறைக்கு உட்பட்டே பெருமாள் கோயில் நடைபெறவேண்டிய சூழ்நிலையில் ப்ரஹ்மோத்ஸவம் நீண்டகாலமாக நின்றுபோய்விட்டது. 'அதை மறுபடியும் தொடங்கவேண்டும்' என்று பெருமாள்கோயில் பட்டாசாரியர்கள் வழக்குத் தொடுத்தார்கள். அது நடந்து வருகிறது. இவ்வழக்கு பல கோர்ட்டுகளைக் கண்டு முடிவுக்கு வருவதற்கு இன்னம் பல வருடங்கள் ஆகும். இந்நிலையில் 'விசிட்டர்' பத்திரிகை 'இளங்கோவன்' என்பவரைக்கொண்டு இவ்விஷயத்தைப்பற்றி சைவர்களுக்கு ஆதரவாகவும், வைஷ்ணவர்களைத் தாக்கியும் கட்டுரை வெளியிட்டிருப்பது நீதிக்கும், நேர்மைக்கும், நடுநிலைமைக்கும், பத்திரிகை தர்மத்திற்கும் சிறிதும்

பொருந்தாது. இதில் பொதுமக்களுக்கு உண்மையை விளங்க வைப்பதற்காக நாம் இளங்கோவனைக் குறித்துச் சில கேள்விகளைக் கீழே அச்சிடுகிறோம். (விசிட்டர்) பத்திரிகை நீதி, நேர்மை, நடுநிலைமை, பத்திரிகை தர்மம் முதலிய நற்பண்புகளுக்கு மதிப்புக்கொடுக்கும் பத்திரிகையாயிருந்தால், கீழ்க்கண்ட கேள்விகளையும் அவற்றுக்கு இளங்கோவனின் பதிலையும் அடுத்த இதழில் அச்சிட்டுப் பொதுமக்களின் தீர்ப்புக்கு விடட்டும்.

## இளங்கோவனைக்குறித்துக் கேள்விகள்

1. "பத்தாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் (கி.பி. 907-946) அரசாண்ட முதலாம் பராந்தகச் சோழன்தான் (தில்லைக்கோவிலுக்கு) தங்க ஓடு வேய்ந்ததாகச் சரித்திரம் சொல்லுகிறது. அவனுக்கும் பின்னால் வந்த மாணிக்கவாசகர் நடராஜபெருமானை தில்லைக் கூத்தன் என்றும், ஆலயத்தைப் பொன்னம்பலம் என்றும் பாடியிருப்பதால் அங்கே சிவனைத்தான் முதலில் பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள் என்று கொள்ள முடிகிறது. இந்தக் கோவில் எப்போது கட்டப்பட்டது என்பதைத் துல்லியமாகத் தீர்மானிக்க முடியாவிட்டாலும் பத்தாம் நூற்றாண்டுக்கு முன்னாலேயே பிரதிஷ்டை செய்யப்பட்டுவிட்டது என்பது மட்டும் நிச்சயமாகிவிடுகிறது. நடராஜபெருமானின் மூலஸ்தானம் ஏற்பட்ட பிறகும் தேவாரம் பாடிய மூவர் காலம் வரையிலும் கோவிந்தராஜ பெருமாள் பிரதிஷ்டை செய்யப்பட்டதற்கு எந்தவிதமான ஆதாரமும் இல்லை. அது வரையில் ஏற்பட்ட கல்வெட்டுக்களெல்லாம் நடராஜ பெருமானின் மேல் செய்யப்பட்ட பூமிதானங்களைப் பற்றித்தான் சொல்லுகின்றனவே தவிர, கோவிந்தராஜப்பெருமாளைப் பற்றிய எந்த விதமான சிறு குறிப்பையும் சொல்லவில்லை. இதிலிருந்து கோவிந்த ராஜபெருமாளை நடராஜபெருமானுக்குப் பிந்தித்தான் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கவேண்டும் என்று கொள்ளலாம்" என்று எழுதியிருக்கிறீர்; திருமங்கையாழ்வாரும், குலசேகராழ்வாரும் தில்லைத்திருச்சித்ரகூடம் கோவிந்தராஜப்பெருமாளைப் பாடியிருக்கிறார் என்றும் நீரே எழுதியிருக்கிறீர். நீர் ஆதாரமாக எடுக்கும் மு. ராகவய்யங்கார் அவர்களே இவ்வாழ்வார்களை 7, 8 நூற்றாண்டுகளில் வாழ்ந்தவர்களாக நிர்ணயித்திருக்கிறார். இக்காலத்தில் சிறந்த ஆராய்ச்சியாளராக விளங்கும் மு. அருணாசலம் இவ்வாழ்வார்களை எட்டாவது நூற்றாண்டில் வாழ்ந்தவர்களாக 10—6—80 ஹிந்துவில் பக்கம் 5-ல் "History of Tamil Literature" என்னும் தலைப்பில் வெளிவந்துள்ள விமர்சனத்தில் தெளிவாக எழுதியுள்ளார். ஆக, கோவிந்தராஜர்கோவில் எட்டாம் நூற்றாண்டுக்கும் முற்பட்டது என விளங்கும்போது, நீர் இப்படி எழுதியதே ஆதாரமற்றது என்று தெளிவாகத் தெரியவில்லையா?

2. "சைவ, வைணவ சமயங்களில் முதலில் சமநோக்குடையவனாய் இருந்து, பின்னர் திருமங்கையாழ்வாரின் கூட்டுறவினால் பரம வைணவனான முதலாம் நந்திவர்ம பல்லவன்தான் பெருமாளை பிரதிஷ்டை செய்திருக்கவேண்டும் என்று சிறந்த ஆராய்ச்சியாளரான மு. இராகவய்யங்கார் உறுதியாகச் சொல்லியிருக்கிறார். முதலில் சமநோக்குடையவனாக இருந்த இவன் திருமங்கையாழ்வாரின் தூண்டுதலால்

தான் பெருமாளை பிரதிஷ்டை செய்திருக்கவேண்டும் என்றே எண்ணத் தோன்றுகிறது. ''பைம்பொன்னும் முத்தும் மணியும் கொணர்ந்து படைமன்னவன் பல்லவர்கோன் பணிந்த...தில்லைத் திருச்சித்திர கூடம்'' (பெரியதிருமொழி 3-2-3) என்று திருமங்கையாழ்வார் பாடியிருப்பதால் அது உறுதிப்படுகிறது'' என்று எழுதியிருக்கிறீர். எந்த நூலில் திரு மு. ரா. அவர்கள் இப்படி எழுதியிருக்கிறார் என்றும் நீர் எழுதவில்லை. மு ரா. அவர்கள் தம் '' ஆழ்வார்கள் காலநிலை'' என்னும் (1931ல் பதிப்பிக்கப்பெற்ற) நூலில், பக்கம் 127, 128 ல் நந்திவர்மனுக்கு முற்பட்ட பல்லவ மல்லன் தில்லைத்திருச்சித்ரகூடம் பெருமாள் கோயிலுக்குப் பணி செய்ததாகவே கூறியிருக்கையால், நந்திவர்மனே பெருமாளைப் பிரதிஷ்டை செய்ததாக அவர் எழுதியதாக நீர் எழுதுவது அப்பட்டமான பொய்யல்லவா ?

3. ''முதலில் பெருமாள் ஒரு பரிவார தெய்வமாகத்தான் இருந்தது'' என்று எழுதுகிறீர். ''தில்லைத்திருச்சித்ரகூடம்'' என்று பெருமாள் கோயிலை ஆழ்வார்களும் ''சிற்றம்பலம்'' என்று நடராஜர் கோயிலைப் பழைய சைவர்களும் வழங்குவதிலிருந்து, முற்காலத்தில் இவையிரண்டும் தனித்தனிக்கோயில்களாயிருந்தன என்றும், சிறு அம்பலம் (சிறு கோயில்) என்பதே சிற்றம்பலமாகியிருக்கையால், நடராஜர்கோயில் சிறுகோயிலாகவும், சித்திரகூடம் என்று பெயர் பெற்ற பெருமாள்கோயில் பெரியகோயிலாகவும் இருந்திருக்கின்றன என்றும், நடராஜர்கோயிலை விரிவுபடுத்துவதற்காகச் சோழவரசன் பெருமாள்கோயிலை இடித்து வளைத்துக்கட்டிய பின்பே பெருமாள்கோயில் பிற்காலத்தில் சிவன்கோவிலுக்குள் அகப்பட்டுவிட்டது என்றும் தெளிவாக விளங்கவில்லையா ? சைவர்கள் ஆக்ரமித்தபின்பு கட்டப்பட்ட கோபுரம் முதலானவற்றைக்கொண்டு இது சிவன்கோவில் என்று ஸ்தாபிக்க நீர் பாடுபடுவது பயனற்றதல்லவா ?

4. ''குலசேகராழ்வார் பாடலிலிருந்து அப்போது நடராஜரைப் பூஜித்த தீட்சதர்களே பெருமாளையும் முறைப்படி ஆராதித்திருக்கின்றனர்'' என்று எழுதுகிறீர். பல்லாயிரம் வருடங்களுக்கு முன் சோழநாட்டுக்குலந்து ''சோழியர்கள்'' என்று பெயர்பெற்ற பூர்வசிக ப்ராஹ்மணர்களில் ஒரு பகுதியினர் ஸ்ரீ வைஷ்ணவர்களாகவும், ஒரு பகுதியினர் ஸ்மார்த்தர்களாகவும் இன்றும் இருப்பதுபோல், ஆழ்வார்கள் நாயன்மார்கள் காலத்திலும் பூர்வசிக (முன்குடுமி) ப்ராஹ்மணர்களான தில்லைமூவாயிரவரின் வழிவந்த வைஷ்ணவ ப்ராஹ்மணர்கள் பெருமாளை வைகாநஸாகம ரீதியிலும், அவர்கள் வழிவந்த ஸ்மார்த்த ப்ராஹ்மணர்கள் நடராஜனை வேறுமுறையிலும் வழிபட்டிருக்கலாமல்லவா ? பிறகாலத்தில் பெருமாள்கோயிலை சோழவரசன் இடித்த பின்பு பெருமாள்கோயில் அர்ச்சகர்கள் அவ்வரசனுல் அவைஷ்ணவர்களாக மாற்றப்பட்டிருக்கலாமல்லவா ?

5. '' 'அணிமணியாசனத்திருந்தவம்மான்' என்று குலசேகராழ்வார் பாடியிருப்பதிலிருந்து, இன்றைக்கு சயனகிருதியாயிருக்கிற கோவிந்தராஜபெருமாள் அன்றைக்கு உட்கார்ந்த நிலையில்தான் இருந்திருக்கிறார் என்று தெரிகிறது.'' என்றும், ''சோழ அரசனுல் கடலில் எறியப்பட்ட உருவத்தைத்தான் இராமாநுஜர் கீழைத்திருப்பதி

[illegible] பிரதிஷ்டை செய்ததாக இராமாநுஜ திவ்யசரிதை [illegible]'' என்றும் எழுதுகிறீர். திருப்பதியில் இன்றும் பெருமாள் [illegible]கோலத்திலேயே இருப்பதிலிருந்து தில்லையிலும் அப்படியே இருந்தார் என்றும் 'இருந்த' என்னும் பதத்திற்கு 'உட்கார்ந்திருந்த' என்று பொருள் கொள்ளவேண்டிய கட்டாயமில்லை என்றும் விளங்க வில்லையா? அப்படியேயானாலும் உத்ஸவரைக் குறிக்கலாமே.

6. ''குலோத்துங்கனின் இந்தச் செயலைத் தான் பிற்காலத்தில் எழுதப்பட்ட திவ்யசூரி சரிதம், கோயிலொழுகு முதலான வைணவ நூல்கள் கிருமிகண்ட சோழன் என்றெல்லாம் மிகைப்படுத்தி இழிவு படுத்திக் கூறியிருப்பது வெறும் கற்பனையென்றே சரித்திர ஆராய்ச்சியாளர்கள் (பிற்காலச்சோழர் சரித்திரம் பகுதி-2) துணிந்திருக்கிறார்கள்'' என்று எழுதுகிறீர். சதாசிவபண்டாரத்தார் ''பிற்காலச் சோழர் சரித்திரம்'' எனும் நூலில் எழுதியது அடியோடு பொருந்தாது என்பதை தமிழ் மூதறிஞரான ''பி. ஸ்ரீ'' சாகித்ய அகாடமி பரிசுபெற்ற ''ஸ்ரீராமாநுஜர்'' எனும் நூலில் நிலைநாட்டியிருப்பதை நீர் அறியீரா? எனது ''ஸுதர்சனர் பதில்'' இரண்டாவது சதகத்தின் 22, 23 கேள்விகளுக்கு பதிலில் (பக்கம் 30-40) நான் அதை விரிவாக எடுத்துக் காட்டியிருக்கிறேன். உமக்கும் அதை இன்றே (23—6—80) அனுப்பியுள்ளேன். இதற்கு என்ன பதில் சொல்லுகிறீர்?

7. ''தீட்சதர்கள் முழுமையாகத் தங்களை கோவில் பணிக்கென்றே அர்ப்பணித்திருக்கிறார்கள். வைகாநஸ பட்டாசாரியர்களோ இறைப் பணியை ஒரு பொழுதுபோக்காகக் கொண்டிருக்கிறார்கள்'' என்று எழுதியிருக்கிறீர். தீட்சிதர்கள் ஏராளமான வருமானமுள்ள நடராஜர் கோயில் ஒன்றில் செய்யும் (சுயநலமற்ற!) இறைப்பணியைக் காட்டிலும் நூறுமடங்கு சுயநலமற்ற இறைப்பணியை வருமானமில்லாத நூற்றுக் கணக்கான தமிழ்நாட்டு விஷ்ணுகோவில்களில் வைகாநஸ பட்டாசாரியர்கள் செய்துவருவது உம் கண்ணுக்குப் புலப்படவில்லையா?

8. ''ஸ ப்ரஹ்ம ஸ சிவ: ஸ ஹரி: ஸேந்த்ர: ஸோऽக்ஷர: பரம ஸ்வராட்'' -தைத்திரீய உபநிஷத் (அவனே பிரம்மன்; அவனே சிவன்; அவனே ஹரி; அவனே இந்திரன்; அவனே அக்ஷர புருஷன்; அவனே பரமேசுவரன்) என்று எழுதுகிறீர். தைத்திரீயநாராயணவல்லியில் உள்ள இம்மந்திரத்தில் ஸாயணர், பட்டபாஸ்கரர் எனும் இரு வேதபாஷ்யகாரர்களும் ''ஸ ப்ரஹ்மா ஸ சிவ: ஸேந்த்ர:'' என்னும் பாடத்தையேகொண்டு பாஷ்யமிட்டிருக்கிறார்கள் என்பதும், 32 அக்ஷர [illegible] அம்மந்திரத்தின் அநுஷ்டுப் சந்தஸ்ஸுக்கு ''ஸ ஹரி:'' இல்லாத இப்பாடமே பொருந்தும் என்பதும் உமக்குத் தெரியுமா? மந்திரத்தில் 'ஸ' என்னும் பதத்தை ஐந்து முறையே எழுதிய நீர் மொழிபெயர்ப்பில் 'அவனே' என்று ஆறுமுறை எழுதியிருப்பது தகுமா? 'பரம: ஸ்வராட்' என்பதற்கு 'பரமேசுவரன்' என்று மொழிபெயர்த்திருப்பதும், இப்பாடத்தை ஆதரிப்பதும் உமது சைவாபிமானத்தைக் காட்டவில்லையா? வேதசாஸ்திரங்களில் 'அறிவற்ற ஜடப்பொருள்களும் [illegible]' என்று பலவிடங்களில் கூறியிருப்பதற்கு நீர் [illegible] [illegible]?



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம்

சோதி-33 ] [ ஒளி-11

# ராமகிருஷ்ணமடத்தாரின் போலிச் சமரசவாதம்

நம் நாட்டில் ஆதிசங்கரர் காலத்திலிருந்து மிகவும் பரவிவரும் மாயாவாதம் என்னும் அத்₃வைதம் சமீபகாலத்தில் பல உருவங்களை எடுத்துக்கொண்டு 'எம்மதமும் சம்மதம்' என்னும் சமரசவாதமாகப் பரிணமித்து நிற்கிறது. ஆதிசங்கரர் தம் பா₄ஷ்யங்களில் ஸ்தா₂பித்த அத்₃வைதத்திற்கும், இந்த ஸர்வமத ஸாம்யவாத₃த்திற்கும் எந்தத் தொடர்பும் கிடையாது. உண்மையில் இவ்வாத₃ம் ஆதிசங்கரபா₄ஷ்யங்களுக்கு மிகவும் முரணானது. ''மதங்களிடையே சண்டை கூடாது'' என்னும் 'பூச்சாண்டி'யைக் கிளப்பிவிட்டு, கொள்கைகளில் மிகவும் வேறுபாடுடைய பற்பல மதங்கள் ஒன்றே என்னும் பச்சைப்பொய்யைப் பரப்பிவருகிறார்கள் இவர்கள். பொதுமக்களின் வோட்டைப் பெறுவதிலேயே கண்ணாயிருக்கும் அரசியல்வாதிகளின் ஆதரவும், பொதுமக்களை ஏமாற்றிப் பணம் பறிப்பதிலேயே குறியாயிருக்கும் பொதுஜனப் பத்திரிகைகளின் ஆதரவும் இந்தச் சமரசவாதிகளுக்குக் கிடைத்துவிடுகிறது. பொய்யின் அடிப்படையில் ஏற்பட்ட இந்த வாதம் பகுத்தறிவு உள்ளவர்கள் ஏற்கமுடியாததாகையாலே இது போலியானது என்பதையும், இதனால் மக்களிடையே ஒற்றுமையை உண்டாக்கிவிடமுடியாது என்பதையும், மக்களை எந்த மதத்திலும் பற்றில்லாதவர்களாக்குவதன்மூலம் இவ்வாதம் எல்லா மதங்களையும் அழித்துவிடும் என்பதையும் இவர்கள் உணர்வதில்லை. நம் நாட்டில் கொள்கைகளில் மிகவும் வேறுபட்ட பல அரசியல் கட்சிகள் உள்ளன. இவற்றால் பல சண்டைகளும் ஏற்படுகின்றன. இதைக் காரணமாகக் காட்டி, எல்லா அரசியல் கட்சிகளையும் ஒன்றாக்கிவிடமுடியாது. இதுபோலே, மிக மிக வேறுபட்ட கொள்கைகளை உடைய பற்பல மதங்களையும் ஒன்றாக்கிவிடமுடியாது என்பது சிறிது அறிவுள்ளவர்களுக்கும் புலப்படும். ஆனால் பேரறிவாளர்களாகவும், மஹரிஷிகளாகவும், பெருந்தன்மைமிக்கவர்களாகவும் தம்மை எண்ணிக்கொள்ளும் இந்தச் சமரசவாதிகளுக்கு இவ்வுண்மை புலப்படுவதில்லை. இந்தச் சமரசவாதத்தைச் செய்பவர்களில் ராமகிருஷ்ணமடத்தாரும் முக்கியமானவர்கள்.

சென்னை மயிலாப்பூரில் உள்ள இம்மடத்தார் கடந்த அறுபது ஆண்டுகளாக 'ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்' என்னும் தமிழ்ப் பத்திரிகையை நடத்தி வருகின்றார்கள். அப்பத்திரிகையின் துணை ஆசிரியரான சுவாமி கமலாத்மாநந்தர் விசிஷ்டாத்வைதக் கொள்கைகளை விளக்கி, நாம் திருச்சி வானொலியில் உரையாற்றிய 'ஸ்ரீராமாநுஜநெறி' என்னும் கட்டுரையை நம்மிடமிருந்துபெற்று, ஸ்ரீராமகிருஷ்ண விஜயத்தின் 1980 ஆகஸ்ட், செப்டம்பர், அக்டோபர் இதழ்களில் பிரசுரித்தார். அவ்விதழ்களையும் நமக்கு அனுப்பியபடியால் நாம் பார்க்கநேர்ந்தது. அக்டோபர் இதழில் 'விஜயதீபம்' என்னும் தலைப்பில் 'அத்வைதமும் விசிஷ்டாத்வைதமும்' என்னும் கட்டுரையொன்று வெளியிடப்பட்டிருந்தது. அதில் கற்பனைக் கதை ஒன்று எழுதப்பட்டுள்ளது. ''உண்மையை உள்ளது உள்ளபடி புரிந்துகொள்ளாமல் விசிஷ்டாத்வைதிகள் அத்வைத கண்டனத்தில் இறங்கியிருக்கிறார்கள்'' என்று இக்கட்டுரையில் எழுதப்பட்டுள்ளது. மதங்களிடையே போலிச் சமரசவாதமும் இக்கட்டுரையில் செய்யப்பட்டுள்ளது. இதிலுள்ள அநீதியையும், பொய்ம்மையையும் விளக்கி, 'தத்துவ விவாதங்கள் தவறானவையா?' என்னும் தலைப்பில் நாம் ஒரு கட்டுரையை எழுதி சுவாமி கமலாத்மாநந்தருக்கு அனுப்பினோம். அவர் 6—10-80 தேதியிட்ட கடிதத்தில் ''ஒருவர் தமது கருத்தை எவ்வளவு வேண்டுமானாலும் எழுத விஜயம் இடமளித்திருக்கிறது. ஆனால் பிறர் கருத்தைத் தூஷிக்க விஜயத்தில் இடமில்லை'' என்று எழுதி நமது கட்டுரையைத் திருப்பி அனுப்பிவிட்டார். நாம் இதற்கு எழுதிய பதிலில் '''உண்மையை உள்ளது உள்ளபடி புரிந்துகொள்ளாமல் விசிஷ்டாத்வைதிகள் அத்வைத கண்டனத்தில் இறங்கியிருப்பதாக' விஜயதீபக் கட்டுரையாசிரியர் எழுதியிருப்பது விசிஷ்டாத்வைதிகளின் பேரில் ஏறிடப்பெற்ற அபாண்டமான குற்றச்சாட்டல்லவா? இதை வெளியிட்ட நீங்கள் 'பிறர் கருத்தைத் தூஷிக்க விஜயத்தில் இடமில்லை' என்று எழுதுவது பொருந்துமா? ஆக, விசிஷ்டாத்வைதத்தை அபாண்டமாக தூஷிக்க விஜயத்தில் இடமுண்டு என்றும், அதற்கு விசிஷ்டாத்வைதிகள் பதிலளிக்க வாய்ப்பில்லை என்றும் தேறிற்று. நிற்க. ஸுதர்சனத்தில் எனது கட்டுரையை அச்சிடவிருக்கிறேன். விஜயதீபக் கட்டுரையை எழுதியவர் பெயரைத் தெரிவித்தால் ஸுதர்சனத்தில் வெளியிட ஸௌகர்யமாயிருக்கும்'' என்று எழுதியிருந்தோம். இதற்கு யாதொரு பதிலுமில்லை. விஜயத்தில் வெளியிடப்பட்டால் தாங்கள் செய்யும் சமரசவாதத்தின் பொய்ம்மையும், போலித் தன்மையும் தங்கள் வாசகர்களுக்கே விளங்கிவிடும் என்று கருதியே, நமது கட்டுரைக்கு விஜயத்தில் இடமளிக்கப்படவில்லை என்பதை நடுநிலையாளர்கள் நன்கு உணர்ந்து கொள்வதற்காக நமது கட்டுரையை அடுத்து அச்சிடுகிறோம். சுவாமி கமலாத்மாநந்தருக்கும் [ராமகிருஷ்ண மடம்-சென்னை-4] இவ்விதழின் பிரதி அனுப்பப்படுகிறது.

# தத்துவ விவாதங்கள் தவருனவையா?

[S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், M.A.B.L.,
'ஸுதர்சனம்' ஆசிரியர், 3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-620017.]

ஸ்ரீராமகிருஷ்ணவிஜயம் அக்டோபர் '80 இதழில் 'அத்வைதமும் விசிஷ்டாத்வைதமும்' என்னும் தலைப்பிலுள்ள கட்டுரையில் ''மதத்தின் பெயரால் நடைபெறும் விவாதங்கள், சண்டை சச்சரவுகள், கருத்துவேற்றுமைகள் ஆகியவை உண்மையில் பொருளற்றவையேயாகும்'' என்னும் கருத்து வலியுறுத்தப்பட்டுள்ளது. இக்கருத்தை ஒப்புக்கொண்டால் நம்நாட்டில் வாழ்ந்த பல மஹரிஷிகளும், மதாசார்யர்களும் பொருளற்ற காரியங்களைச் செய்தார்கள் என்று ஆகிவிடும். பாதராயணர் என்று ப்ரஸித்திபெற்ற வேதவ்யாஸ மஹரிஷி, ப்ரஸ்தானத்ரயங்களில் ஒன்ருகக் கொண்டாடப்படும் தமது ப்$_3$ரஹ்மஸூத்ரத்தின் இரண்டாமத்தியாயத்தில்—ஸாங்க்யமதம், யோகமதம், நையாயிகமதம், பௌத்தமதம், ஜைனமதம், பாசுபத(சைவ)மதம் முதலான பல மதங்களைக் கண்டித்திருக்கிருர். இந்த ப்ரஹ்மஸூத்ரத்துக்கு பாஷ்யமிட்ட ஆதிசங்கரர் முதலான மதாசார்யர்கள் அனைவரும் இம்மதங்களைத் தம் பாஷ்யங்களில் விரிவாகக் கண்டித்திருக்கிருர்கள். உதாரணமாக, ஆதிசங்கரர் ''*அபி ச—ப$_3$ாஹ்யார்த்த$_2$—விஜ்ஞாந—ஶூந்யவாத$_3$த்ரயமிதரேதரவிருத்$_3$த$_4$ம் உபதி$_3$ஶதா ஸுக$_3$தேந ஸ்பஷ்டீக்ருதமாத்மநோऽஸம்ப$_3$த்$_3$த$_4$ப்ரலாபித்வம் ப்ரத்$_3$வேஷோ வா ப்ரஜாஸு விருத்$_3$த$_4$ார்த்த$_2$ப்ரதிபத்த்யா விமுஹ்யேயுரிமா: ப்ரஜா இதி*'' [ப்ரஹ்ம ஸூத்ர சங்கரபாஷ்யம் 2-2-5-32] [(1) (க்ஷணிகமான) வெளிப்பொருள்கள் உண்டு, (2) (க்ஷணிகமான) அறிவு உண்டு, (3) ஒன்றுமே இல்லை என்று முன்னுக்குப்பின் முரணான மூன்று கொள்கைகளை உபதேசிக்கும் புத்தர் தம்மைப் பொருத்தமில்லாது பிதற்றுபவராகக் காட்டிக்கொண்டவராகிருர். 'முன்னுக்குப் பின் முரணான அர்த்தங்களைக்கேட்டு ஜனங்கள் குழப்பமடையட்டும்' என்று ஜனங்களிடம் தமக்குள்ள கெட்ட எண்ணத்தையும் வெளிப்படுத்திக் கொண்டவராகிருர்] என்று புத்தரைக் கடுமையாகக் கண்டித்திருக்கிருர். வேதவ்யாஸர் முதலான மஹரிஷிகளும், ஆதிசங்கரர் முதலான மதாசார்யர்களும் இக்கட்டுரையாசிரியரது கருத்தின்படி, பொருளற்ற வாதங்களைச் செய்தவர்கள் என்றும், மற்றவர்களுடைய சமயக்கருத்துக்களை உண்மையில் புரிந்துகொள்ளாதவர்கள் என்றும் ஆகிவிடும். இக்கட்டுரையின் ஆசிரியர் யார் என்று கட்டுரையின் தலைப்பில் குறிப்பிடப்படவில்லை. அவர் எவராயினும் மஹரிஷிகளையும், மதாசார்யர்களையும் பற்றி இப்படி ஒரு கருத்தைக் கூறுவதற்கு அவருக்குத் தகுதியில்லை என்பது நடுநிலையாளர்க்கு நன்கு விளங்கும்.

ப்₂ரஹ்மஸூத்ரங்களிலும், ஆதிசங்கரர் முதலான மதாசார்யர்களின் பாஷ்யங்களிலும் பல சமயக்கருத்துக்கள் கண்டிக்கப்பட்டிருக்கின்றன என்பதை உணராதவர் இக்கட்டுரையை எழுதியவர் என்பதும் அவரது முற்கூறிய வாக்கியங்களிலிருந்து விளங்குகிறது. "உண்மையை உள்ளது உள்ளபடி புரிந்து கொள்ளாமல் விசிஷ்டாத்வைதிகள் அத்வைத கண்டனத்தில் இறங்கியிருந்ததை அவர் கவனித்தார்" என்று இவர் எழுதியிருப்பதிலிருந்து ஸ்ரீபாஷ்யம் முதலான விசிஷ்டாத்வைத நூல்களையும், ராமாநுஜருடைய வரலாற்றையும் இவர் அறியாதவர் என்று விளங்குகிறது. யாதவப்ரகாசர் என்னும் அத்வைதியிடம் பல வருஷங்கள் பயின்று, அத்வைதத்தைக் கசடறக் கற்றவர் ராமாநுஜர் என்று வரலாறு கூறுகிறது. அவர் தமது ஸ்ரீபாஷ்யத்தின் தொடக்கத்தில் மஹாபூர்வ பக்ஷத்தில் மிக விரிவாக அத்வைதத்தை விளக்கியிருப்பதைக் காணும் நடுநிலையாளர்கள் எல்லாம் "அத்வைத நூல்களிலிருந்து அத்வைதத்தைத் தெரிந்துகொள்வதைக் காட்டிலும், ஸ்ரீராமாநுஜரின் மஹாபூர்வபக்ஷத்திலிருந்து அத்வைதத்தை மிகத் தெளிவாகத் தெரிந்து கொள்கிறோம்" என்று கூறிவருகிறார்கள். அத்வைத நூல்களையும், விசிஷ்டாத்வைத நூல்களையும் படிக்காமல், "அத்வைதத்தைப் புரிந்துகொள்ளாமல் விசிஷ்டாத்வைதிகள் அத்வைத கண்டனத்தில் இறங்கியிருக்கிறார்கள்" என்று அபாண்டமாக ஸ்ரீராமானுஜர் முதலான விசிஷ்டாத்வைதிகளின் மேல் குற்றம் சாட்டிவிட்டு, "ஒரு தத்துவ தரிசனம் உயர்ந்தது என்பதை நிலைநாட்டுவது இந்தக்கதையின் நோக்கமல்ல" என்று முன்னுக்குப்பின் முரணாக எழுதி இக்கட்டுரையை முடித்திருப்பது மிகவும் வியப்பை அளிக்கிறது.

உண்மையில் மற்ற துறைகளில் சர்ச்சையும், ஆராய்ச்சிகளும் அவசியமாயிருப்பதுபோலே, மதத்துறையிலும் நடுநிலை நின்று வாதம் செய்வதும், ஆராய்ச்சி செய்வதும் மிகவும் அவசியமே என்று முற்கூறிய ப்ரஹ்மஸூத்ரம் முதலான மஹரிஷிக்ரந்தங்களிலிருந்தும், மதாசார்யர்களின் பாஷ்யங்களிலிருந்தும் தெளிவாக விளங்குகிறது. மதத்துறையில் மாத்திரம் ஆராய்ச்சிக்குத் தடை விதித்து. "எல்லா மதங்களும் ஒரே இலட்சியத்துக்கு அழைத்துச் செல்லக்கூடியவை. ஆகையால் மதசர்ச்சைகள் கூடாது. மதவிவாதங்கள் பொருளற்றவை" என்று கண்ணை மூடிக்கொண்டு எழுதுவது அறிவாளிகளால் ஏற்கத் தக்கதன்று. மஹரிஷிகளும், மதாசார்யர்களும் செய்த காரியத்தைப் பொருளற்றது என்று தூக்கி எறிவதற்கு இக்காலத்திலுள்ள எவர்க்கும் தகுதி கிடையாது. ஆதாரமற்ற கற்பனைக்கதையை எழுதி, விசிஷ்டாத்வைதிகளை இவர் இழிவு படுத்தியிருப்பது மிகவும் வருந்தத்தக்கது; கண்டிக்கத்தக்கது.